எந் நிலையிலும்

நீங்கள் கச்சிதமான பொலிவுடன் திகழ

# மபத்லால் க்ரூப்

## காட்டன்/'டெரிலீன்'

தகிக்கும் சூடோ, கெரிசலோ, நெருக்கடியோ—நீங்கள் கச்சிதமான பொலிவுடன் திகழலாம். அதற்கு உறுதி தருபவை: மபத்லால் க்ரூப்பின் பருத்தி/ 'டெரிலீன்' சூட்டிங்கு மற்றும் ஷர்ட்டிங்குத் துணிகள்.

**சலவைச் செலவிலே பெருமளவு மிஞ்சும்!**

வீட்டிலேயே சலவை செய்து கொள்ளத் தக்கவை அப் பருத்தி 'டெரிலீன்' துணிகள். லாண்டரி, வண்ணார் செலவுகள் எவ்வளவு மிச்சமாகும் என்பதை எண்ணிப் பாருங்களேன். தவிர, பருத்தி/ 'டெரிலீன்' சூட்டிங்கும் ஷர்ட்டிங்கும் • சுருங்கவோ, நீளவோ செய்யாதவை • நீர் உறிஞ்சாதவை—விரைவில் உலர்ந்து விடுபவை • மடித்துத் தைத்த பகுதிகளும், மடிப்புக் கோடுகளும் நிலைத்திருக்கும் • அலுவலக ஆடையாக நெடுங்காலம் அணியப் பொருத்தமானவை.

**உமக்கே உரியது — பருத்தியின் குளுமையோடு 'டெரிலீன்' பொலிவு!**




Alyars MG. 563 TAM B



அன்னை யடிமை நிலைபோக்கி
அறப்போர் வெற்றித் தளபதியாய்
மன்னும் காந்தி யடிகளுக்கு
வலக்கை யாக நின்றுதவி,
சென்னை மக்கள் புகழ்வளர்த்த
செல்வா, ராஜ கோபாலா!
இன்னும் பல்லாண் டிவ்வுலகில்
இனிது வாழ்க! வாழ்கவே!

— கவிமணி தேசிகவிநாயகம்பிள்ளை

# கல்கி

## பொருளடக்கம்

குரோதி கார்த்திகை 21 — டிசம்பர் 6


| | | |
|---|---|---|
| தர்மாத்மா | — | 3 |
| தந்தைக்கு ஒப்பானவர் | — | 10 |
| காந்தித் தத்துவத்தின்... | — | 13 |
| அருள் கலந்த அறிவு | — | 14 |
| எங்கள் சிவப்பு அனுமார் | — | 18 |
| சிரிக்கவைக்கும் சிந்தனை... | — | 24 |
| கந்தன் கருணை | — | 26 |
| ருஷ்ய மொழியில் அலைஓசை | — | 30 |
| சத்தியத்துக்காக... | — | 32 |
| பேராசிரியர் கண்ட தலைவர் | — | 37 |
| ஞான ஒளி ஊட்டுபவர் | — | 46 |
| கயல்விழி | — | 49 |
| சகல கலா வல்லபர் | — | 57 |
| பாமினிப் பாவை | — | 61 |
| வயிறு நிறைந்தது! | — | 67 |
| ராஜயோகம் | — | 70 |
| தொட்ட குறை | — | 75 |


"கல்கி"யில் வெளியாகும் கதைகளில் உள்ள பெயர்கள் எல்லாம் கற்பனைப் பெயர்களே; சம்பவங்களும் கற்பனையே.




"மகனே, இந்திய மக்களைத் தட்டி எழுப்புவதற்காக இதோ பிறந்தநாள் பரிசு"
தீர்க்காயுள்
பாரதத் தாய்



மலர் 24 | தமிழ்த்திரு நாடுதன்னைப் — பெற்ற தாயென்று கும்பிடடி பாப்பா — பாரதியார் | இதழ் 19

# தர்மாத்மா

பிரபஞ்ச வெளியில் இவ்வளவு விண்மீன்களும் கோள்களும் அதி வேகமாகச் சுழலும்போதும் அவற்றின் இயக்கம் சீராக இருப்பது எதனால்? இந்த இயக்கம் சிறிது பழுதுபட்டாலும் அண்ட கோளங்கள் யாவும் ஒன்றோடொன்று மோதி வெடிபடுமே? அவ்வாறு நிகழாமல் அகில சராசரங்களையும் அந்தரத்தில் தாங்கி நிற்கும் சக்தி எது?

அந்த சக்திதான் தர்மம். யாவற்றையும் தரிப்பது எதுவோ அதுவே தர்மம்.

பிரபஞ்ச நியதி அதிலுள்ள ஒவ்வோர் அணுவுக்கும் பொருந்தும். ஒவ்வோர் அணுவிலும் கோடானுகோடி சக்தி அலைகள் மின்சார வேகத்தில் இயங்கிக் கொண்டிருக்கின்றன. எனினும் அவற்றை ஒரு நியதியில் கட்டுப்படுத்தி வைக்கிறது தர்மம்.

முழுமை பெற்ற மனிதப் பிறவியின் இயல்பும் இவ்வாறேயாகும். ஆற்றல் பொருந்திய மானுடப் பண்புகள் அவ்வளவும் உண்மையான மனிதப் பிறவியிடம் அபரிமிதமான இயக்கத்தோடு மிளிரும். ஆனால் இந்தப் பேராற்றலும் பேரியக்கமும் ஒரு சீரான கதியிலேயே அமையும். அந்தக் கதி இழையளவு மாறினாலும் மானுடப் பண்பின் பூரணத்துவம் பாழாகிவிடும். அப்படிப் பாழாகாமல் காப்பவர்கள் அருமையிலும் அருமையானவர்களே. மனித குலம் தோன்றிய நாளாக இன்று வரை தோன்றி மரித்த எண்ணற்ற பிறவிகளில் எங்கோ கோடியில் ஒருவர்தான் இவ்வாறு அறிவையும், இதயத்தையும், அவற்றின் கணக்கற்ற போக்குகளையும் துலாக்கோல் பிடித்தாற்போல் ஒரே சீர்மையில் அமைத்துப் பூரணத்துவம் பெற்றிருக்கிறார்கள். அண்ட சராசரங்களைத் தாங்கும் தர்மத்தின் உருவமாகவே அவர்களை நாம் கருதுகிறோம். அப்படிப்பட்ட அபூர்வத்திலும் அபூர்வமான பிறவிகளில் ஒருவர் நம் ராஜாஜி.

ராஜாஜியின் எண்பத்தியேழாவது பிறந்ததினமாகிய தர்ம ஜயந்தியன்று, அவர் இந்தப் பிராயத்திலும் வெற்றி தோல்விகளைக் கருதாமல் போராடும் அற்புதத்தைத் தான் முதலில் எண்ணத் தோன்றுகிறது. 'தர்மத்தின் வாழ்வதனைச் சூது கவ்வும்; தர்மம் மறுபடி வெல்லும்' என்ற பெருவாக்கினை நம்பியே போராடுகிறார் என்று தெளிகிறோம். இன்னோர் எண்ணமும் ஓங்குகிறது. தர்மத்தின் வெற்றிக்காக ராஜாஜி சிந்திப்பதும், எழுதுவதும், பேசுவதும் ஒருபுறம் இருக்கட்டும்; இந்தச் செய்கைகளுக்கெல்லாம் மேலாக ராஜாஜி என்ற வாழ்க்கைப் பண்பு ஒன்று இருக்கிறதே, அதுவே தர்மத்தின் வெற்றி அல்லவா என்று எண்ணிப் பூரிப்படைகிறோம்.

பொய்கள் நிறைந்த இந்த உலகில் சத்தியமயமாகவும், வேஷங்கள் நிறைந்த இவ்வுலகில் வாய்மையின் உருவாயும், தோஷங்கள் நிறைந்த இப் புவியில் தூய்மையின் வடிவாயும், துவேஷங்கள் நிறைந்த இப் பூமியில் அன்பின் பூரணமாயும் ராஜாஜி என்று ஒரு வியக்தி வாழ்கிறாரே அதுவே தர்மத்தின் வெற்றிதான்.

அந்தத் தர்மம் எல்லாத் துறையிலும் வென்றே தீரும் என உறுதிபெறுவோம். மாயாவித் தத்துவங்களோடு போராடி வெல்ல முடியுமா என்று கலங்கும் நாம், மாயாவியான இந்திரஜித்தை எதிர்த்த லக்ஷ்மணனை நினைவு கொள்வோம். "ஸ்ரீ ராமன் தர்மாத்மா, சத்திய சந்தன், தீரத்தின் உறைவிடம், ஆற்றலில் இணையற்றவன் என்பது உண்மையாயின், அம்பே, நீ ராவணகுமாரனை வதைப்பாயாக!" என்று கூறி இலக்குவன் நாண் பூட்டினான். அம்பு இந்திரஜித்தின் உயிரைக் குடித்தது. அவ்வாறே ராஜாஜி உருவகிக்கும் தர்மம், சத்தியம், தீரம், இணையற்ற ஆற்றல் இவற்றின் மீது ஆணையிட்டு நாமும் சுதந்திரப் போரைத் தொடருவோம். வெற்றி காண்பது திண்ணம். அதற்கு நம்மை வாழ்த்தி வழிகாட்டுமாறு ராஜாஜியை வேண்டுவதே அவருக்கு நமது பிறந்ததின வாழ்த்து.



✿

'அச்சமில்லை', 'ஜயமுண்(
'சங்கு', 'ஜய பேரிகை' முதல
விடுதலைப் பாட்டுக்களை, அவ
களில் உள்ள ஆழ்ந்த பொரு
நிதானமாக யோசித்து
தெரிந்து கொண்டு பாடினு
அதுவும் வேதாந்தே
வேதாந்த விதையை அ
வருக்கும் தந்து நாட்டை
பண்படுத்தி விலை உயர்
பயிரை வளர்க்கவே பாரதிய
பழைய வேதாந்தத்தைத் தே
யப் புது மணத்துடன் கலந்
அந்த அற்புதமான பாட்டு
களைப் பாடித் தந்தார்.—ராஜா

✿

# நினைவு அஞ்சலி

**கா**லம்தான் எவ்வளவு வேகமாக ஓடு கிறது! 'கல்கி'ப் பத்திரிகையின் அன்னையாயும், தமிழ் எழுத்தாளரின் தலைவராயும் இருந்த பேராசிரியர் 'கல்கி' ஸ்ரீ ரா. கிருஷ்ணமூர்த்தி அவர்கள் மறைந்து இந்த ஐந்தாம் தேதியுடன் பத்தாண்டுகள் ஓடிவிட்டன!

இந்தப் பத்தாண்டுகளில் எவ்வளவோ மாறுதல்கள் நிகழ்ந்து விட்டன. அரசியல் சுதந்திரம் பெற்றுச் சில காலமானபின் ஆத்ம சுதந்திரத்தைக் காக்கும் அவசியம் உண்டாகி, தர்மத்திலும், சமயத்திலும், ஆசாரத்திலும் மக்களை ஈடுபடுத்தும் தேவை ஏற்பட்டுள்ளது. அந்தத் தேவையில் 'கல்கி' தனது சேவையை விஸ்தரித்திருக்கிறது.

இலக்கிய உலகிலும் பல மாறுதல்கள் தோன்றி விருப்பினும் 'கல்கி'யின் எழுத்து ஒரு வழிகாட்டியாக நின்றுள்ளது. தமிழில் வசன காவியம் எழுத முடியுமா, அரசியல் எழுத முடியுமா, ஹாஸ்யம் எழுத முடியுமா, நினைவுக் கட்டுரை எழுத முடியுமா என்றெல்லாம் கேட்டு வந்த காலத்தில், தமிழில் எல்லாமே முடியும் — அதுவும் எளிய பழகு தமிழிலேயே இலக்கிய அந்தஸ்தில் கௌரவத்துடன் எழுத முடியும் என்று நிரூபித்த 'கல்கி'யின் எழுத்தாண்மை நவீன இலக்கியத்தில் ஊன்றி நிலைத்துவிட்டது. இதற்குக் 'கல்கி' இதழ்களே சான்று. தமிழ் நாட்டின் பெ மையை விளக்கும் வரலாற்று நவீனம், இந்தி சுதந்திரப் போராட்டத்தைப் பின்புலனாக கொண்ட சமூகத் தொடர், கலை விமர்சன பிரயாணக் கட்டுரைகள், இவற்றுக்குத் தமி இலக்கியத்தில் முன்னோடியாக மதிக்க பெறும் பேராசிரியர் 'கல்கி'யின் வழி தோன்றல்கள் பலரை 'கல்கி' அறிமுக படுத்தியுள்ளது. அவர் மறைந்த பிறகு ப எழுத்தாளர்கள் அவர் கையாண்ட எல்லா துறைகளிலுமே 'கல்கி'யின் வாயிலாகச் சிற பாக இலக்கியப்பணி புரிந்திருப்பது முதலாசி யாருக்கு நல்லதொரு நினைவுச் சின்னமாகு இந்த எல்லாத் துறைகளுக்கும் பொதுவா 'கல்கி' பாணி என்றே பெயர் பெற்றுள் அவரது எழுத்தின் இயல்பு இன்றும் பத்தி கையின் பெரும்பாலான எழுத்தாளர்களிட பிரதிபலித்து வருவது பெருமைக்குரி விஷயமாகும்.

அரசியலில் ராஜாஜியின் தொண்டராக கல்கி அவர்கள் இந்தப் பத்திரிகையில் செய் பணி நாடு அறியும். தொண்டர் மறைந் ஆண்டுகள் பத்தாயினும் தொண்டு அ படியே நிற்கிறது. அதற்கு இவ்விதழே அத்தாட்சி. இதுவே அமரரான ஆசிரியருக் நமது சிரார்த்தக் காணிக்கை.

# பாரதீயம் தழைக்கட்டும்!

ந்தச் சூழலிலும் அச்சமின்றி, அழுங்கு றி, நடுங்குதலின்றி, நாணுதலின்றி ந்த தேச மகாகவி பாரதியாரின் என் மூன்றாவது ஜன்ம தினத்தை நாடு ண்டாடுகிறது. பாரதி கவிதையின் கருப் நுளாகிய பாரதீயத்தைத் தழைக்கச் வதே கவிஞருக்கு நமது பிறந்ததின வி. பாரதீயம் என்பது பாரதியின் பு மட்டுமல்ல; அதுவே பாரதப் பண்பு.

**ப்பது கோடி ஜனங்களின் சங்கம்**
**ழுமைக்கும் பொது உடைமை**

று பாடிய பாரதியை சோஷலிச சிந்தனை ராகப் பலர் கருதுகிறார்கள். ஆனால் அர கத்தின் நிர்ப்பந்தத்தின் கீழ் அமைந்த து உடைமை சமுதாயத்தை அவர் க்கவில்லை; ஒப்புரவு வழியையே விரும் ர். பொருளையும் உடைமைகளின் உரிமை யும் போற்றிப் பாடினார். குழந்தைகளுக் உடைமைகளைக் காப்பதன் பெருமையைக் டி, 'பணத்தினைப் பெருக்கு' என்றும், தி இழந்திடேல்' என்றும் 'புதிய ஆத்திச் 'யில் உபதேசித்தவர் அவர்.

உடைமைகளும் இன்பங்களும் எல்லாம் தாய் நீ' என்று விநாயகனை வாழ்த்திய கவி பரதேவதையிடம், 'தொழில் ணைப் பெரு நிதியம் வேண்டும்' என்று பிரார்த்திக்கிறார். தொழிலூக்கத்தைக் கெடுக் கும் தடைகளை எண்ணிக் கொதித்து,

**தொழில் கெட்டவழக்கமும், கிணற்றினுள்ளே**
**மூழ்கிய விளக்கினைப்போல் - செய்யும்**
**முயற்சி யெல்லாம் கெட்டு முடிவதுவும்....**
**வீழ்க இக் கொடுமையெல்லாம்**

என்று திருமகளிடம் வேண்டினார். 'பொரு ளினைச் சிதைத்தனர்; மருளினை விதைத் தனர்' என்று அவர் கூறியது உடைமைகளைப் பறித்து சோஷலிச மாயம் பரப்புவதையே கட்டுவது போல் அல்லவா உள்ளது?

சுதேசி ஆட்சி, விதேசி ஆட்சி யாவற்றுக் கும் மேலாக தர்மத்தின் ஆட்சியை மதித்து, 'புவிமிசைத் தருமமே அரசியலதனிலும்.... வெற்றி தரும்' எனப் பாடினார் பாரதியார். வரிப் பணம் தரும் மக்களே அரசாங்கத்துக்கு உரிமை தருகிறார்களேயன்றி மக்கள் அரசின் உடைமையல்ல என்பதை.

**தந்த பொருளைக் கொண்டே - ஜனம்**
**தாங்குவர் உலகத்தில் அரசரெல்லாம்;**
**அந்த அரசியலை - இவர்**
**அஞ்சு தருபேயென்றெண்ணி நெஞ்சம் அயர்வார்**

என்று இடித்துக் காட்டுகிறார். இவற்றை இன்று நினைந்து, 'புண்ணிய நாட்டினிலே... பொறியற்ற விலங்குகள் போல் வாழும்' நிலையை நீக்கிக் கொள்வோம்!

✤

பூரண சந்திரன் மேற்கே றைவதுபோல் முழுக் கலை டன் புகழின் சிகரத்தில் தோய்ந்து மறைந்தார் 'கல்கி'. சந்தேகமின்றி, குற்றமின்றி, பொருளை உணர்ந்து கொண்டு, அதைத் தெளிவான தமிழில் விளக்கி வந்தார் 'கல்கி'. மொழி அதிகமாக வளர விடா மல் அடக்குவார். உடை கொஞ்சமாகவும் மூர்த்தி அதிக மாகவும் ஜொலிக்கும் 'கல்கி' யின் எழுத்தில் கலைமகளின் விக்கிரகம் நின்று தரிசனம் காட்டும். —ராஜாஜி

✤






தென்னாட்டின் பிரதான க்ஷேத்திரங்களில் ஒன்றான திருவண்ணாமலைக்கு பிப்ரவரி மாதம் 28-ந் தேதி நான் போயிருந்தேன். மறுநாள் காலையில் அவ்வூரிலுள்ள பிரசித்தமான ஆலயத்துக்குப் போக ஒரு மணி நேரம் அவகாசம் கிடைத்தது. அந்த நேரத்தில் ஆலயத்தின் விசாலமான பிரகாரங்களைச் சுற்றிய வண்ணம் சிந்தனையில் ஆழ்ந்தேன்.

என்னைப் போல் அரசியலில் ஈடுபட்டவர்களுக்கு இம்மாதிரி அவகாசம் கிடைப்பது அபூர்வம். அவகாசம் கிடைத்தாலும் ஏகாந்தம் கிடைப்பதில்லை. எப்போதும் ஜனங்கள் அன்புடன் சூழ்ந்து கொண்டு உபசரித்த வண்ணமிருக்கிறார்கள். தனிமையில் பகற் கனவு காண்பதற்குச் சௌகரியம் ஏற்படுவது கிடையாது. திருவண்ணாமலைக் கோயிலில் இத்தகைய சந்தர்ப்பம் கொஞ்சம் கிடைத்தது பெரிய அதிர்ஷ்டமாகவே தோன்றியது.

ஆகா! என்ன கம்பீரம்! என்ன விஸ்தாரம்! வெறும் கல்லையும் சுண்ணாம்பையும் கொண்டு இப்பேர்ப்பட்ட வானை அளாவும் கோபுரங்களையும், பிரம்மாண்ட மதில்களையும், விஸ்தாரமான மண்டபங்களையும் கட்டியிருக்க முடியுமா? இவற்றைக் கட்டியவர்களுக்கு எவ்வளவு பக்தி சிரத்தையும் எவ்வளவு செயல் திறமையும் இருந்திருக்க வேண்டும்? எத்தனை காலம் பாடுபட்டு உழைத்திருக்க வேண்டும்?

இந்தக் காலத்தில் நாம் பிரமாதமாய் நினைத்துக் கொண்டிருக்கும் வாழ்க்கை இலட்சியங்கள், மனோரதங்கள் எல்லாம் இத்தகைய பிரம்மாண்டமான ஆலயங்களுக்கு முன்னால் எவ்வளவு அற்பமாய்ப் போய்விடுகின்றன? இவற்றைக் கட்டிய நமது முன்னோர்கள் பக்தி சிரத்தையில் பெரியவர்களாக இருந்தது போல் வினைத் திட்பத்திலும் பெரியவர்களாக இருந்திருக்க வேண்டுமன்றோ?

இந்த ஆலயத்தில் எந்த மூலையை எடுத்துக் கொண்டாலும் இருபதினாயிரம் பேர் உட்காரலாம்! மண்டபங்கள், பிரகாரங்கள் எல்லாவற்றிலும் குறைந்தது ஒரு லட்சம் பேர் வசதியாக உட்கார்ந்து, வெளி உலகை மறந்து, ஆத்ம சாந்தியும், மனோ திடமும் தரக் கூடிய திவ்விய காலட்சேபங்களைக் கேட்டு ஆனந்திக்கலாம்.

ஆனால், அடடா, அப்படிப்பட்ட பெரியவர்களின் சந்ததியில் தோன்றிய நமக்கு இந்தக் காலத்தில் என்ன நேர்ந்து விட்டது? அவர்களிடமிருந்த பக்தியும் சக்தியும் கற்பனைத் திறனும் இப்போது எங்கே? இந்த அசிரத்தையும், அற்பத்தனமும், அவலட்சணமும், அசுத்தமும், குறுகிய திருஷ்டியும், இழிதகைமையும் எங்கிருந்து வந்தன? நமது மூதாதைகளின் ஆத்ம சக்தியெல்லாம் எங்கே போய்விட்டது? இறைவா! இப்படி ஏன் எங்களைக் கைவிட்டாய்? எங்களுடைய முன்னோர்களின் சந்ததிகள் என்று சொல்லிக் கொள்ளத் தகுதியற்றவர்களாக எங்களை ஏன் செய்தாய்? நிஜமாக இந்தப் பிரம்மாண்டமான கோபுரங்களையும் மதில்களையும் ஆயிரக்கால் மண்டபங்களையும் பிரகாரங்களையும் மனத்திலே கற்பனை செய்து கையினால் கட்டி முடித்தவர்களின் சந்ததிகள் தானா நாங்கள்? — இத்தகைய சிந்தனைகள் வார்த்தைகளினால் விவரிக்க முடியாத மன வேதனையை எனக்கு அளித்தன.

ஆலயத்தில் இப்போது எங்கு பார்த்தாலும் ''அசுத்தம் செய்பவர்கள் பிராஸிகியூட்

செய்யப் படுவார்கள்'' என்பது போன்ற நோட்டீஸ்கள் காணப்படுகின்றன. என்ன பயங்கரம்? இம்மாதிரி அசுத்த வழக்கங்கள் இருந்து வருவதனால்தானே மேற்படி நோட்டீஸ்கள் போட வேண்டிய அவசியம் ஏற்பட்டது? இந்த எச்சரிக்கைகள் கூட அவ்வளவாகப் பயன்படவில்லை யென்றும் காணப்படுகிறதே!

அண்ட பகிரண்ட மெல்லாம் அடங்க ஒரு நிறைவாயிருக்கும் பரம்பொருளின் அகில வியாபகத்துக்கு அறிகுறியாக, இந்த அற்புத மான ஆயிரக்கால் மண்டபத்தை நமது முன்னோர் நிர்மாணித்தார்கள். அதைச் சுற்றி இப்போது அவலட்சணமான செங் கல் சுவர் ஒன்று நிற்கிறது. அவலட்சணத்தை அதிகமாக்குவதற்கு உருக்கு இரும்பு கேட் ஒன்றும் போடப்பட்டிருக்கிறது. இந்த மாதிரி அவலட்சணப்படுத்தி யிருப்பதற்குக் கார ணம் என்னவென்று விசாரித்தேன். ஆயிரக் கால் மண்டபத்தில் ஸ்வாமி வருஷத்துக்கு ஒரு தடவைதான் எழுந்தருளுகிறாராம். மற்ற நாளெல்லாம் சும்மா கிடப்பதால், ஜனங்கள் இயற்கைக் கடன் கழிப்பதற்கு மண்டபத்தை உபயோகித்து விடுகிறார்களாம். ஆயிரக்கால் மண்டபத்தில் செங்கல் சுவரும் இரும்புக் கேட்டும் போட்டிருக்கும் காரணம் இது தான் என்று அறிந்தபோது சொல்ல முடியாத மன வேதனை உண்டாயிற்று. ''ஆஹா! நமக்குக் கதி மோட்சம் உண்டா?'' என்று தோன்றிற்று.

இந்த விஸ்தாரமான கோயிலை நன்கு உப யோகப்படுத்த முடியாதா என்ன? சீலமும் உண்மையான பக்தியும் உள்ள சத்புருஷர்கள்— ஜனங்களுக்கு விளங்கும் பாஷையில் கதை சொல்லி, பாட்டுப் பாடி, நமது முன்னோர் கண்டு அனுபவித்த சமய தத்துவங்க புகட்டக்கூடியவர்கள் — இப்படிப்பட்ட வர்களைக்கொண்டு தினம் காலையிலும் ப யிலும் காலட்சேபங்கள் ஏற்படுத்திக் கே வில் எல்லா மூலை முடுக்குகளிலும் கேட் படியாக ஒலிபெருக்கிகளும் வைத்துவிட்ட ஆகா, எவ்வளவு ஜனங்கள் தினந்தோ கோயிலுக்கு வருவார்கள்! இடந்தான் வளவு சுத்தமாகிவிடும்!

இன்னும், நமது கோயில்களுக்குள்ளிருக் அழகான திருக்குளங்களையும் சுத்தம் செ ஆங்காங்கே — காரை போட்டுக் கெட்டிக்க இடங்களில் — சில செடிகளையும் மரங்களை வளர்த்து விட்டால் நமது ஆலயங்க பூலோக கைலாசம் என்று சொல்வதில் என் ஆட்சேபம் இருக்க முடியும்?

நமது முன்னோர்களின் மகத்தான உன்ன தில் உதயமாகி நாடெங்கும் சம்பிரதா காட்சியளிக்கும் இக் கோயில்களை ந எப்படி நாசம் செய்து விட்டோம்!

ஆனால் நல்ல வேளையாக இன்னும் அ யோடு நாசமாகி விடவில்லை. ஆலயங்க மீண்டும் பழைய மகிமையை அடையச் செ யலாம் என்னும் ஆசைக்கு இன்னும் இட இருக்கிறது. இளம் பிராயத்தினர் மன வைத்தால் அது நடந்து விடும்.

வாலிபர்களே! யுவதிகளே! அகத் தூய்மை யும் புறத் தூய்மையும் அடையுங்கள். பக் யும் சக்தியும் பெறுங்கள். நமது மூதாதை களின் பிதிரார்ஜிதசொத்தை ஏற்றுக்கொண் முன்வாருங்கள். நமது முன்னோர்கள் இவை வெல்லாம் நமக்காகவேதான் செய்த் கொடுத்து விட்டுப் போனார்கள். நம்முடைய தேகம், ஆத்மா எல்லாம் அவர்களிடமிருந்தே வந்தவை என்பதை ஒருநாளும் மறவாதீர்கள்

**('கல்கி'யில் 1942ம் ஆண்டில் வெளியானது)**

---

## வயலின் விற்பன்னர் மறைவு

புகழ் கொண்ட வயலின் வித்வான்களில் ஒருவரான சங்கீத கலாநிதி துவாரம் ஸ்ரீ வேங்கடஸ்வாமி நாயுடு அவர்களின் மறைவு இசை உலகுக்குப் பெரும் இழப்பாகும்.

சுமார் நாற்பதாண்டுகளாக முன்னணி வித்வானாக விளங்கியவர் ஸ்ரீ துவாரம் அவர்கள். சம்பிரதாய சுத்தம், நூதன உத்திகள் இவ்விரு வேறுபட்ட வழிகளிலும் விருப்ப முள்ள பலர் அவரது வாத்திய இசையைக் கேட்டு மகிழ்ந்தனர். பரிசயமான ராகங்களில் அபூர்வ சஞ்சாரங்களைக் காட்டிய துவாரம் அபூர்வ ராகங்கள் பலவற்றைப் பரிசயமாக்கியுள்ளார்.



சங்கீத வித்வான் ஒருவர் பெறக் கூடிய புகழை யெல்லாம் அவர் பெற்றார். மியூஸிக் அகாடெமியின் சங்கீத கலாநிதி விருதையும், இந்திய அரசின் பத்மஸ்ரீ விருதையும் பெற்றவர் அவர். ஆந்திர சகோதரர்கள் 'நாயுடுகாரு'வைத் தங்கள் தனிப்பெரும் இசைப் புலவராகப் போற்றி வந்தனர். ஆந்திர சர்வகலா சாலை அவருக்கு டாக்டர் பட்டம் அளித்துக் கௌர வித்தது. இரண்டு மாதங்களுக்கு முன்புதான் ஆந்திர சர்க்கார் அவரை ராஜ்யத்தின் முதல் ஆஸ்தான வித்வானாக நியமித்துப் பெருமை கொண்டது.

ஸ்ரீ துவாரம் தமது ரசிகர்களுக்கெல்லாம் விநயம் கலந்த அன்பைத் தந்ததோடு, தமது பாணியில் தேர்ச்சி வாய்ந்த சீடர்களையும் அளித்திருக்கிறார். இதுவே அவர்களின் துயரத்தை ஓரளவு குறைக்கக் கூடும். ஸ்ரீ துவாரம் குடும்பத்தினருக்கு நமது ஆழ்ந்த அநுதாபங்கள்.

## மிழ்
## பசும்
## ஹாஸ்டெஸ்கள்
## தவை

ழும் ஆங்கிலமும் பேசத் தெரியும் ஏயர் ஹோஸ்டெஸ்கள் தேவை. இதர யோக்கியதாம்சங்கள் மணமாகாதவராயும், 19லிருந்து 25 வயதுக்குள்ளும், ஹைஸ்கூல் படிப்பு முடித்தவருமே ண்டும். கண் பார்வை சரியாக இருக்க வேண்டும் (மூக்குக் கண்ணாடி கூடாது!) பார்ப்பதற்கு ழகாக இருப்பது அவசியம். சமீபத்தில் எடுத்த ஃபோட்டோவுடன், உங்களுடைய வயது, படிப்பு தலிய விவரங்களுடனும், சீஃப் ஏயர்-ஹோஸ்டெஸ், ஏயர்-இந்தியா, ஸாந்தா க்ரூஸ், பம்பாய்-29 ன்ற விலாசத்துக்கு எழுதவும்.

**ஏயர்-இந்தியா**



# தந்தைக்கு ஒப்பானவர்

மைசூர் மகாராஜா ஸ்ரீ ஜயசாமராஜ உடையார்

நான் ராஜாஜியை முதன் முறையாகச் சந்தித்தது 1936ம் ஆண்டில். அப்போது அவர் மைசூருக்கு விஜயம் செய்து 'லேக் வியூ'வில் தங்கியிருந்தார். பெரும் தேச பக்தரும், தேசத் தலைவருமான ராஜாஜியை நான் சந்திக்க வேண்டுமென அப்போது மைசூர் மன்னராயிருந்த மதிப்புக்குரிய என் பெரிய தகப்பனாரும் என்னுடைய பிதாவும் விரும்பினார்கள். அப்போது நான் ஒரு கல்லூரி மாணவன். இந்திய சுதந்திரமும், இந்திய கவர்னர்–ஜெனரல் என்ற உன்னத ஸ்தானத்தை ராஜாஜி எய்துவதும் அப்போது எதிர் காலத்தின் கருவிலேயே மறைந்திருந்த விஷயங்கள். மைசூருக்கும் இந்தியாவுக்கும் நான் பல ஸ்தானங்களில் புரிய வேண்டிய பணிகளும் அவ்வாறே எதிர் காலத்துக்குள் பொதிந்து கிடந்த காலம் அது.

ராஜாஜியுடன் நிகழ்ந்த முதல் சந்திப்பு என்னுடைய நினைவில் நீங்காமல் பதிந்த ஒரு சம்பவமாகும். புது விஷயங்களை எளிதில் பதிப்பிக்கக் கூடிய எனது இளம் மனத்தில் அவருடைய தனிப் பண்பு பெரும் சக்தியுடன் பாய்ந்தது. அந்தச் சக்தி நிரந்தரமான நினைவுகளை என்னுள் விட்டுச் சென்றது. என் தலைமுறையைச் சேர்ந்த எல்லோரையும் போல, நான் அவரது தியாகங்களைப் பற்றியும், சாதனைகளைப் பற்றியும், மகாத்மா காந்திக்கும் அவ
ருக்குமிடையே இருந்த நெருக்கத்
பற்றியும் அறிந்திருந்தேன். அ
மகத்தான ஞானத்தாலும், ஈடும் இ
யும் இல்லாத சிந்தனைத்தெளிவு மொ
தெளிவு இவற்றாலும், கொழுந்து
டொளிரும் தேச பக்தியாலும், சக
ராசிகளின் க்ஷேமத்தில் அவருக்கு
கவலை சிரத்தை இவற்றாலும் ஈர்
படுவது தவிர அப்போது நான் வேறெ
வும் செய்வதற்கில்லை. அவரும்
விடம் என்ன இயல்புகளைக்
டாரோ அவற்றை விரும்பினார். அன்
ருந்து இன்றுவரை சுமார் மு
தாண்டுகளாக அவர் என்னிடம்
தைக்கு ஒப்பான பாசம் கொண்டி
பது எனக்குப் பெருமிதமும் உற்சா
மும் ஊட்டும் ஓர் ஆதாரமாக இரு
வந்திருக்கிறது.

ஒரே சமயத்தில் சரித்திரத்தின்
பல துறைகளில் தங்கள் பெயரை
பொறித்துக் கொண்டுள்ள அசாதார
புருஷர்களில் ராஜாஜி ஒருவர்.
நாடு சுதந்திரம் பெறுவதற்காக நட
சரித்திரப் பிரசித்தமான இயக்கத்
கலந்து கொண்டதன் மூலம் அரசி
நடப்புக்களில் அவர் ஒரு மகத்தா
முக்கியத்வம் வாய்ந்த—பங்கு கொ
டார். இந்நாட்டு அரசியல் தலைவர்க
பெறக் கூடிய மிக உயர்ந்த பதவிக
அவர் வகித்திருக்கிறார். சென்னையி
முதல் மந்திரியாகவும், மத்திய மந்தி
யாகவும், மேற்கு வங்காள கவர்னரா



பாரதத்தின் கவர்னர் — ஜெனர யும் இருந்திருக்கிறார். நகர சபை ரகத்திலிருந்து பாரத தேசத்தின் ரம்ப பீடம் வரையில் பல ஸ்தா கள அவர் அலங்கரித்திருக்கிறார். ய சரித்திரம் கண்டுள்ள சாதனை ர என்றும் அழியாத குறிப்பேடு தமது முத்திரையைப் பொறித் கிறார்.

தமிழ் ஆங்கிலம் இரண்டிலுமே ஓர் அருள் பெற்ற நூலாசிரி பேசும்போதும் எழுதும் தும் விஷயங்களின் அந்தராத் ருக்குள் பனிரெனப் புகுந்து, அவ்விஷ களையும், அவற்றின் உள் விளைவு யும் ஒருபோதும் தப்பாத விவே டன் கூர்ந்து மதிப்பிட்டு, தமது ந்துக்களை ஸ்படிகம் போன்ற தெளி , எதிர்க்கவொண்ணாத சக்தியும் ண்ட மொழியில் விளக்கும் ாற்றல் படைத்தவர் ராஜாஜி. நம் பொருமைப்படக் கூடிய ாற்றல் இது.

அவரது புத்தியும், ஞானமும் மகத் ன விஸ்தாரம் கொண்டவை; நாலு த் துறைகளில் நிபுணத்துவம் ாண்டவை. இதோடு அவரது ஈடு ட்டுக்குரிய விஷயங்கள் பரந்தும் ந்தும் ஆழ்ந்தும் விளங்குவதால் பற்றின் பிரதிபலிப்பான அவரது கதைகள் சாதாரணக் கதைகளைப் ாலன்றி எவ்வளவோ உயர்ந்து நிற் ்றன. சமூக சீர்திருத்தம், நன்னெறி ாதனை இவற்றை அளிக்கும் கருவிக ாக அக்கதைகள் விளங்குகின்றன.

உபநிஷதங்கள், அவற்றின் மகா ாக்கியங்கள் இவற்றின் பொருளையும் பதேசத்தையும் மக்களுக்கெல்லாம் ரசாரப்படுத்தியது ராஜாஜியின் மகத் ான சாதனைகளில் ஒன்றாகும். மகத் வம் வாய்ந்த உபநிஷதங்களும், மகா ாக்கியங்களும் நமது பண்பாட்டின் ஸ்திவாரத்திலேயே அமைந்தவை. ாம் பூரணமாக அறிந்தாலும் அறியா ட்டாலும் இவையே நம்முடைய றிவின் அமைப்பிலும் தார்மீக மைப்பிலும் பெரும் பங்கு கொண் ருப்பவை. நாகரிகமும் உயிர்த்துடிப் பும் உள்ள மக்களாக நம்மை வாழ வைக்கும் மாபெரும் சக்திகளில் இவை முக்கியமானவை. இவற்றைத் தம் ஒருவருக்கு மட்டுமே உரிய பாணியில் ராஜாஜி தமிழிலும் ஆங்கிலத்திலும் விளக்கியிருப்பதன் மூலம் நம்முடைய பேரொளி வாய்ந்த பெரு மரபைப் பாது காத்துத் தந்திருக்கிறார். அவற்றுக்குப் பொதுமக்களின் மதிப்பைப் பெற்றுத் தரும் பெரும் பணி புரிந்திருக்கிறார். பாரதத்தின் மகிமை வாய்ந்த புத்திரர் களில் ஒருவராக ராஜாஜியின் ஸ்தா னத்தை நிலைப்படுத்துவதற்கு இந்த ஒரு சாதனையே போதுமானது.

நம்முடைய அன்புக்கும் மதிப்புக்கும் உரிய ராஜாஜிக்கு எனது பணிவான வணக்கங்களை அளிக்கிறேன். அவர் நீண்ட காலம் நம்முடன் வாழ்ந் திருந்து நமக்கு அவரது விலைமதிப் பில்லாத அறிவுரையை வழங்கி வழி காட்டி வரவேண்டுமெனப் பிரார்த்திக் கிறேன்.

---

அன்பே ஈசன் திருவுருவம். தாயின் அன்பிலும், மக்களின் ஒப்புரவு, நட்பு, காதல் ஆகியவற்றிலும் ஈசன் திரு வொளியைக் காண்கிறோம். பிராணி யும் பறவையும் பூச்சியும் தத்தம் குஞ்சு களின் மீது காட்டும் அன்பு வெறும் விநோதமோ, இயற்கை விசித்திரமோ அல்ல; உலகம் முழுவதும் பரந்து நிற் கும் கடவுளின் திரு அவதாரமே ஆகும்.

✿

உடலினுள் ஆன்மா மறைந்து நின்று அந்த உடலுக்கு உயிர் தருவது போல் உயிர்களை உடலாகக் கொண்டு அவற்றி னுள் உயிருக்குயிராய் பரம்பொருள் மறைந்து நின்று இயங்குகிறது. உடலில் தங்கும் உயிர் நேராகக் கோசரமாகா மல் உடலின் வினைகளில் காணப்படுகிற தல்லவா? அதைப் போலவே உயிரில் தங்கும் கடவுளும் உயிர்களுடைய அன் பின் வழி காட்சி தருகிறார். அன்பும், அன்பின் ஆனந்தமும் சகல ஜீவன்களி லும் வீற்றிருக்கும் பரம்பொருளின் பிரகாசம்.

✿

தேவர்களும் அசுரர்களும் கடலைக் கடைந்த கதை எல்லோருக்கும் தெரி யும். விஷமும் அமுதமும் இரண்டும் ஒன்றிலிருந்தே உண்டாகும். இரண்டும் ஒரே பொருள்; அணு அமைப்பில் மட் டுமே வித்தியாசம். அன்பும் துவேஷமும் ஒரு நொடியில் உருமாறி ஒன்று மற் றொன்றாகும்.

✿

எவனும் நமக்கு விரோதியல்ல. துவே ஷம் பயனற்ற வேலை. எதிராளி எவ் வாறு நடந்து கொண்டாலும் அன் பென்னும் நோன்பைக் காத்தோமானால் தெய்வம் நம்மோடு சேர்ந்து வேலை செய்யும். இது சத்தியம். —ராஜாஜி

# காந்தித் தத்துவத்தின் காவலர்

ஓரே ரகத்தின் மார்க்கத்தில் இரண்டு ரியர்கள் இருக்க முடியாது என்பது ஆங் லப் பழமொழி. அந்தப் பழமொழியைப் பாய்ப்பித்து இந்திய விடுதலைப் போராட்டத் ன் மார்க்கத்தில் மகாத்மா காந்திஜியும், நம் ாஜாஜியும் ஒரே பொழுதில் இரண்டு சூரியர் ளாகத் திகழ்ந்தார்கள். உறவு முறையில் ம்பந்திகளாக இருந்ததோடு உள்ளத் ாலும் நெருங்கிச் சம்பந்தப்பட்டவர்களாக ருந்தார்கள். 'ராஜாஜி எனது மனச்சாட்சி ன் காவலர்' (Conscience - keeper) என்று ாந்திஜி கூறியதிலிருந்து இவ்வுண்மை தரிசனமாகிறது. ராஜாஜியிடம் அடிகள் காண்டிருந்த அன்புக்கும் மரியாதைக்கும் )தோ உதாரணங்கள் :

## அவரிடமே சொல்லுங்கள்'

காலஞ்சென்ற ஹரிஜனத் தலைவரான ரீ எம். ஸி. ராஜா ஒரு முறை ராஜாஜி மீது புகார்செய்து காந்திஜிக்குக் கடிதம் எழுதினர்.

அதற்குக் காந்திஜி எழுதிய பதில்:

''ராஜாஜி மீது சாட்டப்படும் குற்றத் தைப் பற்றி நானு விசாரணை செய்ய வேண் டும்? ராஜாஜியிடமே அந்த வழக்கைத் தாக்கல் செய்தால், அவர் குற்றச்சாட்டு செய்திருப்பது தம்மீது என்பதையும் கருதா மல் நியாயமாகவே விசாரணை செய்து நேர்மையாகத் தீர்ப்புக் கொடுக்கக் கூடியவ ராயிற்றே! ஆகையால் அவரிடமே இதைச் சொல்லுங்கள்.''

## மகாத்மாவின் கோபம்

1944-ம் ஆண்டு மத்தியில் ஒரு பம்பாய்ப் பத்திரிகை ராஜாஜியை வரம்பின்றித் தாக்கி, அவர் காந்தி மகானை ஏமாற்றி விட்டார் என்றும் பொருள்பட எழுதியிருந்தது.

இதைப்பற்றி மகாத்மா மகாகோபம் கொண்டு ஆசிரியருக்கே எழுதினர்:

''உமது 12-7-44 இதழை மிகவும் வருத்தத் துடன் படித்தேன். அதில் ராஜாஜியைப் படுமோச மாகத் தாக்கி விருப்ப துடன் மற்றும் பல பிரமுகர்களையும் தாக்கி யிருக்கிறீர்கள்.

**'' ராஜாஜி சுயநல நோக் கம் எதுவும் அறவே இல் லாதவர். தேச நலத்துக் காகச் சகலத்தையும் தியா கம் செய்த உத்தமர். பொது ஜனங்களின் பிரி யத்தை இழந்தாலும் பாதக மில்லை என்று மனச்சாட்சி யின்படி நடக்கத் துணிந்த வர். அத்தகையவரைக் கேவலமாகத் தாக்குவத னுல் நீர் உமக்கே அகீர்த்தி இழைத்துக் கொள்வதோடு தேசத்துக்கும் அவமானம் விளைவிக்கிறீர்!''**



## 'நானே....அல்லது ராஜாஜி'

1946ம் ஆண்டுத் தொடக்கத்தில் காந்திஜி தமிழகத்தில் சுற்றுப்பயணம் செய்து திரும்பும் போது அவர் ராஜாஜியைச் சென்னையின் முதன் மந்திரியாக்குவதற்காகவே சென்னைக்கு வந்ததாகச் சிலர் பிரசாரம் செய்தார்கள். இதில் உண்மை இம்மியும் இல்லை. எனினும் காந்திஜி '' ஹரிஜன்'' பத்திரிகையில் பின்வரு மாறு எழுதினர்:

''தென் மாகாணத்தில் முதன் மந்திரி பதவிக்கு எல்லாரினும் அதிகமாகத் தகுதி வாய்ந்தவர் ராஜாஜிதான். என் வசத்தில் அப்பதவி நியமனம் இருந்தால், அதை எனக்கு நானே கொடுத்துக் கொள்ளாவிடில், ராஜாஜி யைத்தான் அழைத்துக் கொடுப்பேன்.''

## அண்ணலின் எச்சரிக்கை

1946-ம் வருட ஆரம்பத்தில் 'ஹரிஜ'னில் காந்திஜி இவ்வாறு எழுதினர் :

''என்னுடைய மிகப் பழைய நண்பர் களில் ராஜாஜி ஒருவர். என்னுடைய இலட்சியங்கள் கொள்கைகள் எல்லாவற் றுக்கும் வாக்கினுலும் செயலினுலும் சிறந்த முறையில் விளக்கம் கொடுப்பவர் அவர் என் பது பிரசித்தமான விஷயம். 1942ல் அவர் என்னோடு மாறுபட்டார் என்பதை நான் அறிவேன். அந்த வேறுபாட்டைப் பகிரங்க மாக வெளியிட்ட அவருடைய தைரியத்தைப் போற்றுதல் வேண்டும். ராஜாஜி சிறந்த சமூக சீர்திருத்தக்காரர். தமது கொள்கை யின்படி நடப்பதற்கு ஒரு நாளும் அஞ்சாத வர். அவருடைய அரசியல் ஞானமும் நேர் மையும் அனைவரும் ஒப்புக் கொண்டவை. ஆகவே, அப்படிப்பட்டவருக்கு எதிராக ஒரு கோஷ்டி இருப்பதைக் கண்டு எனக்கு வேதனை உண்டாயிற்று. சென்னை காங்கிரஸ் நிர்வாகத் தில் மேற்படி கோஷ்டி செல்வாக்குப் பெற்றிருக் கிறது. ஆனுல் பொது மக்கள் ராஜாஜியிடம் பக்தி கொண்டிருக்கிறார் கள். தென்னாட்டுக் காங் கிரஸ் வாதிகள் தங்க ளுக்கு எது உசிதமென்று படுகிறதோ, அப்படிச் செய்யட்டும். ஆனுல் அவர்களுக்கு ஓர் எச்ச ரிக்கை செய்யாவிடில் காங்கிரஸ் ஸ்தாபனத் துக்கு என்னுடைய கடமையைச் செலுத்திய வனுக மாட்டேன். தற் போதைய நிலைமையில் ராஜாஜியைப்போல் காங் கிரஸ் தொண்டின் பொறுப்பை வகித்து நடக்கக் கூடியவர் யாரு மில்லை. அவருடையவழி யத்தைத் தென்னுட்டுக் காங்கிரஸ் காரர்கள் இழந்துவிடக் கூடாது.''

# அருள் கலந்த அறிவு

## எச். வி. ஆர். ஐயங்கார்

**அ**ன்றைக்கு ராஜாஜியிடம் எனக்கு மகா கோபம். உடல் சோர்ந்து, உள்ளம் சோர்ந்து ஒரே ஆத்திரமாக ஆபீஸிலிருந்து இரவு வெகு நேரத்துக்கப்புறம் வீடு வந்து சேர்ந்தேன். கையிலிருந்த காகிதக் கட்டுக்களை ஒரு நாற்காலியின் மீது வீசி எறிந்தேன்.

"இந்தத் தேசம் குட்டிச்சுவராகப் போகிறது. இம்மாதிரி நடத்திவிட்டு, ஆபீஸர்களிடம் நல்ல முறையில் வேலை வாங்க முடியும் என்று அவர்கள் எப்படி எதிர்பார்க்க முடியும்?" என்று என் மனைவியிடம் கத்தினேன்.

நான் அப்போது சொன்ன அவர்கள் ராஜாஜியைக் குறிப்பிடும். அச்சமயம் ராஜாஜி பாரத அரசாங்கத்தின் உள்நாட்டு மந்திரியாக இருந்தார். நான் உள்நாட்டு இலாகாவின் காரியதரிசி. மதிப்பு வாய்ந்த ஓர் அந்நிய நாட்டுக்கு என்னைச் சர்க்காரின் ஸ்தானிகராக நியமித்தால் நான் அதனை ஏற்றுக் கொள்வேனா என்று அந்நிய விவகார இலாகாவின் தலைமைக் காரியதரிசி என்னைப் பிரத்தியேகமாக ஆழம் பார்த்து வந்த சமயம் அது. யாருக்குமே சுலபம் தட்டுகிற வாய்ப்புத்தான் அது. நான் சிறிது காலமாக அதைப் பெறுவதில் என் மனத்தை ஈடுபடுத்தியிருந்தேன். பிரதம மந்திரியும் என் நியமனத்துக்கு இணக்கம் தெரிவித்திருந்ததாகக் கேள்விப்பட்டேன். என்றாலும் என் இலாகா மந்திரியான ராஜாஜியின் யோசனையைக் கேட்க வேண்டும் என்று சொல்லி வந்தாராம்.

நான் ஆரம்பத்தில் கூறிய அந்த ஆத்திர தினத்தில்தான் தலைமைக் காரியதரிசி என்னிடம் தெரிவித்தார்: ராஜாஜி என் நியமன யோசனையில் தண்ணீரைக் கொட்டி அணைத்து விட்டாரென்று. இதற்கு ஓரளவுக்குக் காரணம் என்னை உள்நாட்டு இலாகாவிலிருந்து வேறு இலாகாவுக்கு விடுவிக்கப் பிரியப்படாததாகும். ஆனால் இது கடக்கவொண்ணாத சிரமம் அல்ல. முக்கியமான காரணம், ராஜாங்கதூதர் பதவிக்குரிய தனிப்பட்ட குண விசேஷங்கள் என்னிடம் உள்ளனவா என்பதில் ராஜாஜி ஐயம் கொண்டிருந்ததேயாகும். பலவிதங்களில் நான் திறமைசாலியாக இருக்கலாம்; ஆனாலும் என்னைக் குறித்து யோசிக்கப்பட்ட அந்த உயர் பதவியில் வெற்றி பெறுமளவுக்கு என்னிடம் சமயோசிதமும், சாதுரியமும், விஷயங்களை நுட்பமாகக் கவனிக்கும் திறனும் இல்லை என்று ராஜாஜி எண்ணியிருக்கிறார்.

அப்புறம் என்ன? எனக்கு அந்த நியமனம் கிடைக்கவில்லை. வேறு ஒருவரை நியமித்தார்கள். என்னை அநியாயமாக நடத்தி விட்டார் என்ற ஆத்திரத்திலேயே பல நாட்கள் சித்தாகுலமாக இருந்தேன். பிறகு தான் என்னை நானே கேட்டுக் கொள்ளத் தொடங்கினேன். ஒருவேளை ராஜாஜி கருதியது சரிதானோ?

யார் அந்தப் பதவியைப் பெறுவதானாலும் ராஜாஜியின் சொந்த நலனை அது இம்மியும் பாதிக்கப் போவதில்லை; தேச நலனுக்கு யாரைத் தேர்ந்தெடுத்தால் சிறப்பாக நன்மை செய்யும் என்ற கோணத்திலேயேதான் அவர் சிந்தித்திருக்கிறார். அப்படி எண்ணிப் பார்க்கும்போது பதவிக்குரிய சில விசேஷ இயல்புகள் என்னிடம் குறைவு என்று அவர் கருதியிருப்பின், அவருடைய கருத்தில் ஓர் உண்மை இருக்கக் கூடுமல்லவா? – இவ்வாறு எனக்கு நானே சொல்லிக்கொண்டேன்.

இதன் பின் நானே என்னைக் கூர்ந்து ஆத்ம பரிசோதனை செய்து கொள்ளலானேன். நல்ல விழிப்போடு சுய பரிசோதனை செய்து கொள்ளும்போது, இதுவரை கவனம் செலுத்தாத பழைய மறந்து போன நினைவுகள் எப்படிப் பளிச்சிடுகின்றன என்பது ஓர் அசாதாரணமான அநுபவம். இந்தப் பின்னோக்கத்தில் என் மனத்தில் பல பழைய சம்பவங்கள் தோன்றின. மென்மையாக நடந்து கொண்டு என் கருத்துக்களைப் பதிய வைக்காமல், நான் பலமுறை சண்டை மனப்பான்மையுடன் நடந்துகொண்டிருக்கிறேன் என்று தெரிந்து கொண்டேன். சில சந்தர்ப்பங்களில் அவசியமே இல்லாமல் நான் தாக்கப்பட்டதாகத் தப்பர்த்தம் செய்துகொண்டதாகவும் கண்டேன். ராஜாஜியின் மந்திராலய அதிகாரி என்ற முறையில் பழகும்போதே அவரது வயதுக்கோ, ஞானத்துக்கோ, அநுபவத்துக்கோ நான் போதிய மதிப்புத் தராமல் நடந்ததுண்டோ என்று எண்ணலானேன்.

சில வாரங்கள் இப்படி எண்ணத்தில் ஓடிய பின் நியமன விஷயமாக ராஜாஜியின் கருத்து அயுக்தமானதல்ல என்ற நிச்சயமான முடிவுக்கு வந்தேன். அவரது கருத்து எனக்குப் பூரண நியாயம் செய்ததாக நான் கருதவில்லையானாலும், ஒப்புக்கொள்ளக் கூடிய அம்சம் அதில் இருந்ததை நான் உணரலானேன். என்னைப் பற்றி அவரது கருத்து எடுத்துக் காட்டிய குறைகளை நீக்கிக்கொள்ள முயல ஆரம்பித்தேன். இந்த முயற்சியில் வெற்றியடைந்து விட்டேன் என்று இன்னமும் சொல்வதற்கில்லைதான்.

இதுவரை நான் சொல்லி வந்த 'கதை' ஒரு சின்னஞ் சிறு விஷயத்தைப் பற்றியது. நமது தேசத்தில் நாம் மகத்தான சம்பவங்களுக்கிடையே சென்று கொண்டிருக்கும் போது எந்தத் தனியொரு மனிதர் குறிப்பிட்ட ஒரு பதவிக்குத் தேர்ந்தெடுக்கப்படாவிடினும் அதனால் பெரிய விளைவு எதுவும் நேர்ந்துவிடப் போவதில்லை. ஆனாலும் இந்தக் கதையில் இரண்டு முக்கியமான விஷயங்கள் அடங்கியுள்ளன. முதலாவதாக ராஜாஜி எவ்வளவு நுண்மையாக முடிவெடுக்கிறார் என்பதற்கும், தனி மனிதர்களின் தனிப் பண்பை அலசிப் பார்ப்பதில் அவருக்கு உள்ள நிட்சண்யத்துக்கும் இச் சம்பவம் ஓர் உதாரணம். இரண்டாவ

க, நான் தனிப்பட்ட முறையில் இநி
நந்து பெற்ற சிறிய விளக்கத்தைப் பொதுப்
டையாக்கித் தருகிறேன். அதாவது எடுத்த
ஒப்பில் அவரது கருத்துக்கு ஆத்திரமான
ஒர்ப்புத் தோன்றக் கூடும். (அடிக்கடி அப்
டித் தோன்றியும் வருகிறதே!) எனினும்
அவர் ஏன் இந்தக் கருத்தைக் கொண்டிருக்
றார்? அவர் சொல்வதில் உள்ள உண்மை
யப் பார்ப்போமே!'' என்று மக்கள் நிதான
ாகவும், உணர்ச்சி வசப்படாமலும் என்
ணிப் பார்த்தால் எல்லோருக்கும் நிரம்ப
ன்மை கிட்டும்.

ராஜாஜி செய்வதவ்வளவும் சரியானது,
க்கள் நின்று நிதானமாக யோசித்துப்
ார்க்க வேண்டும் என்று அவர் திட்டமிட்டே
ந்தக் கருத்தையும் தெரிவிக்கிறார் என்று
றினால் அது ராஜாஜியின் பெருமையைப்
பூரணமாகச் சொல்வதாகாது. கடந்த பல
ண்ட ஆண்டுகளை ராஜாஜியே பின் நோக்
ிப் பார்ப்பாரேயானால், 'நான் கொள்கை
யிலோ, கருத்திலோ தவறே செய்ததில்லை'
ன்று சொல்வாரா என்பது சந்தேகமே.
பல சந்தர்ப்பங்களில் அவர் எதிர்ப்பைத்
தூண்டிவிடும் முறையில் நடப்பதுண்டு.
மக்கள் விழிப்புடன் உன்னிப்பாகப் பிரச்னை
யைக் கவனிக்க வேண்டும் என்பதற்காக
அவர் இவ்விதம் செய்கிறார் என்று
தோன்றுகிறது. அவர் தமது கருத்துக்களை
உறுதியாகவும், சில சமயங்களில் அடித்தாற்
போல் அப்பட்டமாகவும் சொல்வது வாஸ்
தவம். அவர் இவ்வாறு நடந்து கொண்டா
லும் அந்தரங்கத்தில் மிருதுவானவர், வீம்புக்
கொள்கையற்றவர் என்பதை அவருடன்
பிரத்தியேகத் தொடர்பு கொண்டவர்கள்
அறிவார்கள். அந்த வாய்ப்பு இல்லாதவர்கள்
ராஜாஜியின் பெருமையை முழுவதும் அறியத்
தவறி விடுவார்கள்.

எனக்கு நன்முக நினைவிருக்கிறது: ஒரு நாள் நான் அவரிடம் பேசும்போது, திட்டமிட்டு அமைக்கும் பொருளாதாரத்தைத் தமது பேச்சிலும் எழுத்திலும் அவர் போதிய அளவுக்கு ஒப்புக்கொள்ளவில்லை; சிற்சில கன்ட்ரோல்கள் இருக்கவேண்டிய அவசியத்தை அவர் போதிய அளவுக்கு அங்கீகரிக்கவில்லை என்று நான் நினைப்பதாகக் கூறினேன். ''ஏராளமான கன்ட்ரோல்கள் இருந்து உபத்திரவிப்பதையும், கன்ட்ரோல்களைத் தவறான முறையில் நிர்வகிப்பதையும் நீங்கள் ஆட்சேபிக்கலாம். என்றாலும் இன்றைய நிலைமையில் எல்லா ஆதாரப் பொருட்களிலும் கட்டுப்பாடு இருக்கும்போது, சில பொருட்களின் உற்பத்திக்கு அரசாங்கம் முதலிடம் தருவதும், அதற்கேற்ப உற்பத்தி நடைபெறுவதற்காகச் சில 'கன்ட்ரோல்'கள் விதிப்பதும் தேவைதான். இவை இல்லாமல் எப்படி முடியும் என்று எனக்குப் புரியவில்லை'' என்றேன். ராஜாஜி உடனடியாகக் கூறியது எனக்கு ஆச்சரிய மூட்டியது. ''இதைப் பற்றி நீங்கள் ஏன் ஒரு கட்டுரை எழுதக் கூடாது? அதை நான் மகிழ்ச்சியுடன் ''ஸ்வராஜ்யா''வில் பிரசுரிக்கச் செய்வேன்'' என்றார். ''உங்களுடைய கோட்பாடு என்று நான் நினைப்பதற்கு முரணான அம்சங்களை நான் அக்கட்டுரையில் சொல்ல வேண்டி யிருக்குமே?'' என்று எடுத்துக் காட்டினேன். அப்போதும் அவர் தமது சஞ்சிகையில் என் கட்டுரைக்கு இடம் தந்து உபசரிப்பதாக அழுத்தமாகக் கூறினார்.

அம்மாதிரி ராஜாஜி முன்வந்ததைத் தனி நான் ஆச்சரியப்பட்டே இருக்கக் கூடாது. ஏனெனில் நம் நாட்டின் மகத்தான புத்தி

ஞான கம்பீரமும், கருணையின் உருக்கமும் கொண்ட இமயமலையில்
ஞானமும் கருணையும் கலந்த ராஜாஜி.



மான்கள் முற்காலத்தில் எதை விரும்பினர்களோ அதையேதான் இன்று ராஜாஜியும் விரும்புகிறார். ஆழ்ந்த சிந்தனை, பகுத்தறிவுக்கேற்ப அச் சிந்தனை எம்முடிவுக்குச் செல்கிறதோ அதையே பட்சபாதமின்றிப் பின்பற்றுவது, சம்பிரதாயத்துக்கு மாறுபட்ட முடிவாயிருந்தாலும் அதனை ஏற்கும் திறன் — சுருங்கச் சொன்னால் பழைய பல்லவியையே பாடிக் கொண்டு குருட்டுத்தனமாகக் கட்டுப்பட்டிராமல் தீரத்துடன் அறிவாராய்ச்சி செய்ய வேண்டும் என்பதே அவரது விருப்பம்.

ராஜாஜியின் அரசியல் வாழ்வில் அவர் பலரின் விரோதத்தைப் பெற்றிருக்கிறார். முன்பு அவரது நண்பர்களா யிருந்து இன்று அவரைத் தீவிரமாக வெறுப்பவர்களை நான் அறிவேன். அவர்களில் ஒருவர் 'ராஜாஜி என்னை விஷமாக வெறுக்கிறார்' என்று என்னிடம் சொல்லி யிருக்கிறார். இதை நான் ராஜாஜியிடமே தெரிவித்தேன். அவர் என்னை அடர்ந்த உணர்ச்சியுடன் நோக்கினார். ஒரு கணம் மௌனமாக இருந்து விட்டு ஆழ்ந்த குரலில் கூறினார்: ''அவர் நல்ல திறமைசாலி. நாட்டுக்கு மகத்தான சேவை செய்யும் ஆற்றல் பெற்றவர். அரசியல் கோஷ்டிகள் அவரைச் சுற்றிக் கொண்டு நெரிக்காமல் அவர் பார்த்துக் கொள்ளவேண்டும் என்பதே என் விருப்பம்; அவ்வாறு செய்வார் என நம்புகிறேன்.'' மீண்டும் ஒரு கணம் மௌனமாக இருந்துவிட்டுத் தொடர்ந்தார்: ''அவர் வெகு நல்ல பணிகள் புரிவார் என்று நம்புகிறேன். அதற்கு வேண்டிய அறிவும் ஆற்றலும் அவருக்கு உண்டு.'' ராஜாஜியின் குரலில் கடுகளவேனும் கடுப்பு இல்லை. நாங்கள் யாரைப் பற்றிப் பேசிக் கொண்டிருந்தோமோ அவருக்கு இழுக்குக் கற்பிக்க ராஜாஜி சிறிதுகூட முயலவில்லை.

நமது பொதுவாழ்வின் ஒரு துரதிர்ஷ்டமான அம்சம் என்னவெனில், கருத்து வேற்றுமை கொண்ட பெருமக்கள் சிநேகப் பா... மையுடன் விவாதியாமல் தப்பெண்ணத்... லும், பகைகளாலும் தங்கள் தொட... களை நீக்கிப் பிரிந்து போய் விடுவதாக... இவர்களின் சிநேகம் குலைவதால் தே... பல நன்மைகளை இழக்க நேரிடுகிறது. ராஜா... யைக் குறித்த இத்தகைய தப்பெண்ணத்... லும், பகை உணர்ச்சியாலும் அவரைப் பத... மோகக்காரர் எனச் சிலர் என்னு... ரர்கள். இந்த வயதில் அவர் அரசியல் அ... காரத்துக்கு ஆசைப்படுகிறார் என்பது மு... டாள்தனமான விசித்திரக் கற்பனை. அ... ரோடு ஒருவர் இணங்கலாம், இணங்காம... மிருக்கலாம். எனினும் ஒன்று மட்டும் சர்... நிச்சயம்: அவர் நாட்டு நலனிலேயே ஆழ்ந்... கடுபாடுள்ளவர்; அவரது கருத்துக்கள் சி... சமயங்களில் மிகவும் தீவிரமாயிருப்பினு... ஒருகால் தவறாகவே யிருப்பினும் கூட, அ... அடர்ந்து செறிந்த தேசப் பற்றிலே... பிறந்தனவாகும் — அவற்றில் சுயநல நோக்க... அறவே கிடையாது.

அரசியல் விவகாரங்களையும், லௌகி... விஷயங்களையும் விவாதிப்பதில் ராஜா... ஆழ்ந்திருப்பது போல் காணப்படுவதா... அவரது ஆத்மிக அறிவைச் சிலர் மறந்... விடுகிறார்கள். அவர் நமது புராதன சம... கிரந்தங்களில் புலமை வாய்ந்தவர். வாழ்... கையின் அன்றாடப் போக்கையும், அதிலுள்... அலட்சணமான அம்சங்களையும் சிந்திப்ப... தோடு ராஜாஜி நிற்பதில்லை. வாழ்க்கை... தத்துவத்தின் ஆழ்ந்த இரகசியங்களை... பற்றியும் அவர் சிந்தனை செய்கிறார். பொ... நோக்குக்கு அப்பாற்பட்ட தியானத்திலு... அவர் காலத்தைச் செலுத்துகிறார்.

ராஜாஜிக்கு ராணுவக் காரியதரிசியாகவு... வைத்திய ஆலோசகராகவும் இருந்த கர்ன... (பிற்பாடு மேஜர் ஜெனரலானவர்) சாட்டர்ஜ... என்னிடம் கூறிய ஒரு சம்பவம் என் நினைவி... பதிந்துள்ளது. ஒரு சமயம் ராஜாஜி உட... சுகவீனமுற்றிருந்தார். அப்போது ஓர் இர... அவர் உறங்கிவிட்டாரா என்று நிச்சயப்படு... திக்கொள்வதற்காக ஸ்ரீ சாட்டர்ஜி ராஜாஜ... யின் அறைக்குச் சென்றாராம். ''இர... அப்போது வெகு நேரமாகி விட்டது. அவ... எழுப்பி விடக் கூடாது என்பதற்காக நா... மிகவும் மெதுவாகக் கதவைத் திறந்து பார்... தேன். அவர் படுக்கையில் படுத்திருக்க... காணோம். மாறாகத் தமது நாற்காலியி... ஆழ்ந்த சிந்தனையில் லயித்துப் போய் அமர்... திருந்தார். அவர் அரசியலைப் பற்றி எண்ண... யிருக்கலாம்; அல்லது ஆண்டவனைத் தியா... னித்திருக்கலாம். அவரது சிந்தனைக்கு... இடையூறு செய்ய விரும்பாமல் திரும்பிவிட... டேன்'' என்று ஸ்ரீ சாட்டர்ஜி என்னிட... கூறியிருக்கிறார்.

இரவின் மௌனமான கவனிப்பில் ராஜாஜ... ஆழ்ந்து சிந்திக்கிறார். அப்போது அவ... நாட்டுக்குத் த...போது ஏற்பட்டுள்ள சோ... னைகளையும், இடுக்கண்களையும் பற்றி மட்டு... சிந்திக்கவில்லை; மனித குலம் முழுவதன்... எதிர்காலத்தைப் பற்றியும் சிந்திக்கிறார். அவரது அந்தச் சிந்தனையில் தீட்சண்யமான... பகுத்தறிவு மட்டுமின்றி அதனுடன் ஆழ்ந்... கருணையும் கலந்துள்ளது.



# உங்கள் கேசம் உதிருகிறதா?

## இந்த மாதிரி அபாயக் குறிகள் அதை அறிவிக்கின்றன.



**கேசம் உதிருதல்**

உங்கள் ரோமம் உதிருகிறது, ஏனெனில், ரோமக்கால்களுக்குப் போதிய ஊட்டமில்லாததுதான்.



**இளமையில் வழுக்கை**

இந்நிலையை நீங்கள் அநேகமாகத் தவிர்த்திருக்கக்கூடும்

பொடுகு, ரோமம் உதிருதல் மற்றும் கேசம் குறைதல் முதலிய உபாதைகளால் நீங்கள் சிரமப்பட்டால் இன்றே ப்யூர் சில்விக்ரீன் உபயோகிக்கத் தொடங்குங்கள். ப்யூர் சில்விக்ரீனில் உங்கள் ரோமத்தின் வளர்ச்சிக்குத் தேவையான எல்லா பதினெட்டு 'அமினோ ஆஸிட்'களும் தீவிரமான வகையிலிருக்கின்றன. தலையில் நன்றாக அழுத்தித் தேய்ப்பதன் மூலம் ப்யூர் சில்விக்ரீன் ரோமக்கால்களில் புகுந்து அவைகளுக்குத் தேவையான இயற்கையான ஊட்டத்தையளித்து, கேசத்தை மறுபடியும் ஆரோக்கியமாக இருக்கச் செய்கிறது.

'ஆல் எபௌட் ஹெயர்' (All About Hair) என்ற, படங்கள் கொண்ட, இலவசப் புத்தகத்தை நீங்கள் பெற விரும்பினால் தயவுசெய்து கீழ்க்கண்ட விலாசத்திற்கு எழுதவும்: டிபார்ட்மென்ட் K-2, சில்விக்ரீன் அட்வைஸரி சர்வீஸ் தபால் பை 10022, பம்பாய்-1

# Silvikrin

**சில்விக்ரீன்—கேச ஆரோக்கியத்துக்கான வழி**




**ப்யூர் சில்விக்ரீன்**

கேசம் சம்பந்தமான உபாதைகளுக்குக் குணமளிக்கும் ஓர் மிகத் தீவிரமான தயாரிப்பு. ஒரு மாதகால வைத்தியத்துக்குப் போதுமானது.

---

**சில்விக்ரீன் ஹேர் டிரெஸிங்**

உங்கள் கேசத்தை நாள் பூராவுக்கும் நன்கு சீவியபடி வைக்கிறது. பொடுகு ஏற்படாமல் தடுப்பதற்குப் போதுமான ப்யூர் சில்விக்ரீன் கலந்துள்ளது.



SP/1/P/7/64




**ப**ள்ளிக்கூடத்தில் கீழ் வகுப்புக்களில் நான் படித்துக் கொண்டிருந்த காலத்துச் சம்பவம். எங்கள் ஊரில் இரண்டு 'தாலீம்கானு'க்கள் இருந்தன. 'தாலீம்கானு' என்றால் 'கெரடி', அதாவது நாட்டு முறையில் தேகாப்பியாசம், குஸ்தி முதலியன பயிலுமிடம். எங்கள் பள்ளிக்கூடத்துத் தேகப் பயிற்சி வாத்தியார் மகம்மது கவுஸ் ஒரு தாலீம்கானுவை நடத்தி வந்தார். மற்றொன்று இதற்குப் போட்டியாக, கரடிபாவி கப்பன் என்பவன் பெங்களூரிலிருந்து வந்து ஏற்படுத்தியது. எங்கள் கெரடியில் ஒரு சிவப்பு அனுமார் சுவரில் எழுதப்பட்டு விளங்கினார். அந்த உருவத்தை இப்போது நினைத்தாலுங்கூட என் உடம்பெல்லாம் ஒரு வீரிய உணர்ச்சி உண்டாகிறது. கரடிபாவி கப்பன் கெரடியில் அதே மாதிரி ஒரு கறுப்பு அனுமார் சுவரில் எழுதப்பட்டிருந்ததாகச் சொல்லுவார்கள். அதை நாங்கள் பார்த்தது கிடையாது. விரோதிகளுடைய தாலீம்கானுவுக்குள் நாங்கள் எப்படிப் போவோம்? சொல்லத்தான் கேள்வி. இரண்டு அனுமார்களுக்குள் இந்த 'வண்ண பேதம்' ஏற்பட்டதற்கு வேறொரு காரணமுமில்லை; தற்செயலாக ஏற்பட்டதுதான். கப்பன் சீடன் ஒருவன் அடுப்புக் கரியால் எழுதி விட்டான்; எங்கள் தாலீம்கானுவைச் சேர்ந்த எழுத்துக்கார முத்துசாமி காவி மண்ணைக் கரைத்து எழுதினான். போட்டிகள் மும்முரமாக நடந்த போது கறுப்பு அனுமார் கட்சி, சிவப்பு அனுமார் கட்சி என்று இரு அனுமார்களுக்குமே யுத்தம் நடப்பதுபோல் இருக்கும். எங்கள் உற்சாகமும் ஜயித்தபோது உண்டான மகிழ்ச்சியும், தோற்றபோது உண்டான கோபமும் அனுமாரின் ஆவேசமாகத் தான் பொங்கும்.

எங்கள் உஸ்தாது கவுஸ் சாயபு என் மனத்தில் ஒரு தெய்வம் போல் விளங்கினார். படிப்பு வாத்தியார்களில் ஒருவர் பாடங்கள் எல்லாம் தீர்ந்த பின் எங்களுக்கு மாலைப் பொழுதில் பாரதக் கதை சொல்லுவார். (பள்ளிக்கூட வேளையில் இம்மாதிரியான பாட்டி கதைகள் சொன்னால் ஹெட்மாஸ்டர் ஆட்சேபிப்பார்.) பீமனைப் பற்றி வெகு உற்சாகமாகக் கதை சொல்லுவார். அப்போது என் கண் முன் கவுஸ் சாயபுதான் நிற்பார். துரியோதனனைப் பற்றிச் சொல்லும்போது கரடி பாவி கப்பனைப் போலிருந்தான் என்று வைத்துக் கொள்ளுவேன். எனக்கு அப்போது ஒன்பது வயது முடியவில்லை. என் வகுப்பில் மற்றவர்கள் எல்லாரும் என்னைவிட நாலு வயதுக்கு மேல் மூத்தவர்களாகவே இருந்தார்கள்.

கப்பனுடைய கெறடியைச் சேர்ந்தவர்களோடு அநேகமாக நாங்கள் பேசவே மாட்டோம். ஜன்மவிரோதிகளைப் போலத்தான் பாவிப்போம். அசுரர்களுக்கும் தேவர்களுக்கும் உள்ள விரோதம் போல் இந்த இரண்டு கெறடிகளைச் சேர்ந்த சீடர்களுக்குள் உணர்ச்சி இருந்தது என்றால் மிகையாகாது. இது தாலிம்கானாவில் பயிலாதவர்களுக்கு விளங்காது.

அல்லாப் பண்டிகையில் ஒவ்வொரு வருஷமும் எங்கள் உஸ்தாது புலி வேஷம் போடுவார். ஒரு தடவை எதிர்க் கட்சி கப்பனும் வேஷம் போட்டான். ஆனால் அவன் போட்டது கரடி வேஷம். புலிக் கட்சியும் கரடிக் கட்சியுமாக ஊரே இரண்டு கட்சியாகப் பிரிந்தது. ''இன்றிரவுக்குள் பிரமாதம் நடக்கப் போகிறது'' என்று எல்லோரும் எதிர்பார்த்தார்கள்.

ஊர்வலம் இரண்டு மணி நடந்தது. எங்கள் உஸ்தாதுதான் வென்றார் என்பது எங்களுடைய தீர்மானம். புலியாட்டம் அந்த வருஷத்திற்கு முன் என்றும் அவ்வளவு நன்றாக அமைந்ததில்லை என்று எல்லோரும் சொன்னார்கள். சந்தைப்பேட்டையில் ஒரு ஆட்டைக் கொண்டு வந்து புலிக்குக் கொடுப்பது வழக்கம். அவர் அதை வாயில் கவ்வித் தூக்கி எறிவார். பிறகு சீடன் ஒருவன் அதை எடுத்துக் கொண்டு போய் உஸ்தாது வீட்டில் சேர்ப்பான். இந்த வருஷம் புலி வேஷத்தின் ஆவேசம் மிகவும் அளவு கடந்து போயிருப்பதால் ஆட்டின் ரத்தத்தை உறிஞ்சி அங்கேயே சாப்பிட்டு விடுவார் என்று சிலர் சொன்னார்கள்.

இம்மாதிரி நடக்கும் என்று நானும் நினைத்தேன். அதற்கு முன் வீட்டுக்குப் போய்விடலாம் என்பது என் எண்ணம். என் நண்பன் அப்துல் ரஹிமான், ''பயப்படாதே, நான் கூட இருக்கிறேன்'' என்று எனக்குத் தைரியமும், உற்சாகமும் ஊட்டி, நடுவில் போய்விட வேண்டாம் என்று சொல்லிக் கொண்டிருந்தான்.

எங்கள் புலியைச் சுற்றி ஏராளமான கூட்டம். கரடி கப்பனைச் சுற்றிச் சிறு கூட்டம்தான் சென்றது. அதுவும் அநேகமாக அவனுடைய கெறடி சீடர்கள்தான். கூட்டம் குறைந்து போனதற்கு ஒருவாறு ஈடாகச் சத்தம் அதிகமாகப் போட்டார்கள். ஆனால் அது பலிக்கவில்லை. தோற்றுப் போனதாகக் கப்பனுக்கே உணர்ச்சி ஏற்பட்டது. இதனால் அவனுக்குக் கோபம் அதிகரித்தது. அவன் கொஞ்சம் கள்ளும் குடிப்பது உண்டு. அன்று பலமாகக் குடித்து விட்டிருப்பதாகவும், எப்படியாவது எங்கள் உஸ்தாதைக் கலகத்துக்கு இழுப்பான் என்றும் எங்கள் கூட்டத்தில் பேச்சு. தன் தோல்வியை மறைத்துக் கொள்ள வேண்டுமென்று எண்ணிக் கப்பன் நம்முடைய புலி வேஷக் கூட்டத்தையும் தன் கூட்டத்தையும் ஒன்றாகச் சேர்த்துவிட யோசனை செய்தான். மெள்ள மெள்ள ஊர்வலத்தில் அவன் முந்திக் கொண்டே சென்று, கடைத் தெருவில் பிள்ளையார் கோயிலண்டை வந்தபோது இரண்டு வேஷங்களும் ஒரு கூட்டமாகச் சேர்ந்து போயின. இப்போது இரண்டு உஸ்தாதுக்களுக்கும் இடையில் எட்டு கஜ தூரம்தான் இருந்தது. பாயும் பாய்ச்சல்களில் ஒருவரோடொருவர் மோதிக் கொள்ளும் நிலையில் இருந்தார்கள். இரண்டு பேர்களுக்கும் சங்கிலிகள் போட்டு ஒவ்வொருவருக்கும் பக்கத்துக்கு இருவராக நான்கு பேர்கள் இழுத்துப் பிடித்துக் கொண்டிருந்தார்கள். கூட்டம் பெரும் கூட்டமாக இருந்தாலும் வேஷத்தைச்சுற்றி விசாலமாக இடம் விட்டு ஆட்டத்தைப் பார்த்துக் கொண்டே சென்றது. இரண்டு மிருகங்களுக்கும் யுத்தம் எந்த நிமிஷத்தில் நடக்கப் போகிறதோ என்று பார்த்துக் கொண்டிருந்த எல்லோருக்கும் படபடவென்று மார்பில் அடித்துக் கொண்டிருந்தது. நானும் என் நண்பன் அப்துல் ரஹிமானும் கை கோத்துக் கொண்டு கண் கொட்டாமல் பார்த்துக் கொண்டே சென்றோம்.

''ரஹிமான், சண்டையானால் நம் உஸ்தாதுதானே ஜயிப்பார்?'' என்று பொறுக்க முடியாத கவலையுடன் என் நண்பனைக் கேட்டேன். கப்பன் எங்கள் உஸ்தாதை விடக் கொஞ்சம் உயரம் அதிகம். நல்ல தடியன். அவனையும் அவனது அட்டகாசங்களையும் பார்த்து என் மனத்தில் கொஞ்சம் சந்தேகம். ஆனால் ரஹிமான் ''கட்டாயம் புலிதான் ஜயிக்கும்! பார், இன்னும் ஒரு நிமிஷத்திற்குள்!'' என்றான்.

நான் ஆஞ்சநேயனை (அதாவது எங்கள் வெப்பு ஆஞ்சநேயனை) மனத்தில் தியானித்தேன். எப்படியாவது எங்கள் உஸ்தாதுக்கு வெற்றி தரவேண்டுமென்று பிரார்த்தித்தேன்.

''ஹா!'' என்று ஓர் இரைச்சல் கேட்டது. துள்ளி விழுந்தேன். ''பயப்படாதே!'' என்



றான் ரஹிமான். அவன் கையைக் கெட்டியாகப் பிடித்துக் கொண்டேன்.

அடுத்த கணத்தில் கப்பன் பாய்ந்து எங்கள் உஸ்தாது பேரில் குதித்து அவரைக் கீழே வீழ்த்தப் பார்த்தான். எங்கள் உஸ்தாது அவன் வந்த பக்கம் திரும்பித் தலையை முட்டுக் கொடுத்தார். இருவரும் குஸ்தியில் கலந்தார்கள். கூட்டத்தில் பேரிரைச்சல் கிளம்பிற்று. கப்பனுடைய சீடர்களின் ஜய கோஷம் எல்லாக் கூச்சலுக்கும் மேல் காதைப் பிளந்தது.

நான்கு போலீஸ் ஆட்கள் திடீரென்று பிரசன்னமாகி இரண்டு உஸ்தாதுக்களையும் பிரித்தார்கள். சங்கிலி பிடித்துக் கொண்டிருந்த சீடர்களின் பாடு வெகு பாடாகப் போயிற்று. கரடிமேல் பாய்ந்து பழி வாங்கப் புலி ஒரு பக்கம் இழுப்பதும், அவர்கள் அப்படிப் பாய்ந்துவிடாமல் இழுத்துப் பிடிப்பதும், கூட்டத்தில் 'சங்கிலியை விடு, விடு' என்று பலர் கூச்சல் போடுவதும், போலீஸார் 'போ! போ!' என்று தடிப் பிரயோகம் செய்வதும், சில நிமிஷங்கள் வரையில் ஒரே அமர்க்களமாக இருந்தது. பிறகு நான்கு போலீஸ்காரர்களில் மூவர் ஜனக்கூட்டத்தைச் சமாளித்துக்கொண்டு சென்றார்கள். ஒருவன் புலிக்கும் கரடிக்கும் மத்தியில் கையும் தடியுமாகச் சென்றான். கொஞ்ச தூரம் போனதும் அந்தப் போலீஸ்காரனுடன் தங்க சரிகை கொண்ட சிவப்பு உருமாலை தரித்த போலீஸ் உத்தியோகஸ்தர் ஒருவர் வந்து சேர்ந்தார். ரஹிமான் என் காதில் மெள்ள ''அவர் தான் ஹெட் கான்ஸ்டபில் வரதராஜுலு'' என்றான். (ரஹிமானுக்குத் தெரியாத விஷயம் ஒன்றுமில்லை. அவன் என்னைவிட எட்டு வயது பெரியவன். என் வகுப்பிலேதான் படித்துக் கொண்டிருந்தான்.) 'ஹெட்டு வரதராஜுலு' என்றால் ஊரே நடுங்கும். அவருடைய உடையும் அவருடைய தலைப்பாகையின் சரிகையின் மினுமினுப்பும் என் மனத்தைக் கவர்ந்தன.

தான் ஜயித்துவிட்டதாகக் கப்பனுடைய எண்ணம். அவனுடைய சீடர்களின் எக்களிப்புச் சத்தம் எங்களுக்குப் பொறுக்க முடியாததாக இருந்தது.

''ரஹிமான்! பார்த்தாயா, என்ன அவமானம் செய்து விட்டான் கரடி பாவி கப்பன்!''என்றேன். அவனுக்கும் மிகுந்த கோபம். பல்லைக் கடித்து, பதில் சொல்லாமல் நின்றான்.

புலி உறுமிக் கொண்டு மெதுவாகவும் கம்பீரமாகவும் சென்று கொண்டிருந்தது. அவ்வப்போது பின் காலில் நிமிர்ந்து நின்று பேரிரைச்சல் போடும். மறுபடி கம்பீரமாக நகர்ந்து செல்லும்.

''பார், இன்னும் கொஞ்ச நேரத்தில்'' என்றான் ரஹிமான்.

''எப்படியாவது அந்தக் கப்பனை அவமானப்படுத்திப் பழி வாங்க வேண்டும்''என்று என் உள்ளம் முழுதும் பக்தி பரவசமாகி எங்கள் அனுமாரின் தியானமாகவே இருந்தது. புலி அனுமாராகத் தோன்றினார். அனுமார் புலியைப் போல் மஞ்சள் பட்டைகளுடன் என் மனத்தில் தோன்றினார்.

''பார்த்தாயா, உங்கள் புலியின் க என்னவாயிற்று!'' என்று இந்தச் சமயத்தி என் காதண்டை திடீரென்று யாரோ ஒ வன் சொன்னான். திரும்பிப் பார்க்க, செக்குகாரத் தெருவு சஞ்சீவி. இவன் கப்பனுடை தாலீமைச் சேர்ந்தவன். என் வகுப்பி படித்துக் கொண்டிருந்தான். ரஹிமா வயது. குஸ்தியில் நல்ல கெட்டிக்காரன் ரஹிமானைப் பல தடவை தோல்வியுறச் செ தவன். படிப்பு சூன்யம்.

''என்னத்தைப் பார்ப்பது? போலீஸ்காரர்கள் இல்லாதிருந்தால் உங்கள் கப்பன் கதி இன்று என்னவாகுமோ தெரியுமா?'' என்றேன்.

''எங்கள் கறுப்பு அனுமாருக்குத் தேங்காய் உடைத்திருக்கிறேன். அது வீணாகுமா? அதுதான் இப்படியாச்சு'' என்றான்.

இதைக் கேட்டதும் எனக்குத் தாங்க முடியவில்லை. ''நாளைக்கு உனக்கு இரண்டு தேங்காய் உடைப்பேன்'' என்று எங்கள் அழல் வண்ணை ஆஞ்சநேயனைத் தியானித்தேன்.

''அதோ!'' என்றான் ரஹிமான்.

திரும்பிப் பார்த்தோம். எங்கள் உஸ்தாது தேகத்தைச் சுருக்கிக் கொண்டு பின் கால்கள் மடங்க, பாயும் வண்ணமாக நின்று ஓர் உறுமல் உறுமினார். அப்போது அவர் காட்டிய காட்சி பெங்களூரில் லால்பாகில் நான் பார்த்த உண்மை வேங்கையைப் போலவே இருந்தது. சங்கிலி பிடித்தவர்கள் என்ன காரணமோ சங்கிலியை விட்டு விட்டார்கள். அடுத்த கணம் ''அய்யய்யோ! புலி புலி!'' என்று கூட்டத்தில் ஒரு பேரிரைச்சல் கிளம்பிற்று. காளியம்மனுக்கு எருமையைப் பலி கொடுக்கும்போது இந்த இரைச்சல் போடுவது வழக்கம். எங்கள் புலி ஒரு தாவு தாவிற்று. போலீஸ் ஹெட் வரதராஜுலுவின் தலைமேல் புலி இறங்க, அவர் தரையில் விழுந்தார். மறுபடியும் ஒரு தாவுத் தாவி, கப்பன் கழுத்தின் மேல் இறங்கிற்று. அவனும் தரையில் தலைகீழாக விழுந்து உருண்டான். விழுந்த கரடியின் தோளைப் புலி கவ்விக் கொண்டு வீரக் காட்சி தந்தது. கூட்டத்தில் அடங்காத மகிழ்ச்சி. ''செத்தான்! செத்தான்!'' என்று பேரிரைச்சல் கிளம்பிற்று. கீழே விழுந்த ஹெட் கான்ஸ்டேபில் வரதராஜுலு மெள்ள எழுந்து உருமாலையைத் தட்டித் தலையில் மீண்டும் கம்பீரமாக அணிந்தது அனுமார் தட்டிக் கொடுத்த மைனாக பருவதக் காட்சியாக இருந்தது. தன்னுடைய வெட்கத்தை மறைக்க வாயில் ஊதுகுழாய் வைத்து 'விஸில்' அடித்தார். அதற்குள் நம்முடைய புலி இன்னொரு தாவுத் தாவி எங்கேயோ மறைந்து போயிற்று.

''எங்கே? எங்கே?'' என்று கூட்டமெல்லாம் ஒரே கலவரம். அடுத்த கணத்தில் நாங்கள் இருந்த இடத்துக்கு இருபது கஜத்துக்கு முன்னால் தன் சீடர்களுடன் முன்போல் கம்பீரமாகச் சென்று கொண்டிருந்தது.

ரஹிமானைக் கட்டிக் கொண்டு ஆனந்தக் கண்ணீர் விட்டேன்.

''பார்த்தாயா?'' என்றான் ரஹிமான்.

''நானே அனுமாருக்கு இரண்டு தேங்காய் உடைக்கப் போகிறேன். நீ தப்பாமல் வர




நிச்சிதமான மென்மை, கதகதப்பு ... உங்கள் கம்பளித் துணிகளின் பண்புகளைக் காப்பது: சலவையிலே நருவிசாகப் பராமரிக்கும் லக்ஸ். பட்டு, நைலான், ரெயான், டெரிலீன் ... பாங்கான துணிகள் எல்லாமே பார்க்கப் புதிதாய்ப் பன்னெடுநாள் நீடித்திருக்கத் துணைபுரிவது: தூய, மெல்லிளம் லக்ஸ் தூள்களால் சலவை!

அத்தனை நருவிசாக ஆடைகளைக் காப்பது லக்ஸ் ஒன்றே!

1-140 TM

இந்துஸ்தான் லீவர் தயாரிப்பு

ண்டும்" என்றேன்.

த் சம்பவத்தின் ணமாக எங்கள் உஸ் ் மகம்மது கவுஸைக் கச்சேரியில் விசாரணை ந்து ஐந்து ரூபாய் ராதம் போட்டதாக கள் பள்ளிக்கூடத்தில் ் ருக'ப் பேச்சு. ங்கள் யாரும் அவரைக் ்க வில்லை. போலீ ர் கப்பலுடைய கட்சி சேர்ந்து கொண்டு டார்கள். பெரிய ியாயம் செய்து விட் ர்கள் என்று நாங்கள் எல்லோரும் எண்ணி னும். 'அபராதம் போட்டால் என்ன?' று எங்கள் உஸ்தாது மேல் இரு மடங்கு ரவமும் அன்பும் செலுத்தினோம்.

> அனுமான் 'சிரஞ்சீவி' என்கிறார்கள் பெரியோர்கள். அதாவது எப்போதும் எங்கேயும் நமக்கு உதவக் காத்திருக்கிறான். துக்கம் ஏற்பட்டால், "ராம ராம" என்று சொல்லிக் கொண்டு, பொறுப்போம். அனுமான் வந்து நிவாரணம் செய்வான் என்பதில் சந்தேகமில்லை. –ராஜாஜி

இது நடந்து ஐம்பது ஆண்டுகள் ஆயின. னும் அதிகமாகவே இருக்கும். காலம் ்டமாக ஓடுகிறது. நேற்று நடந்ததுபோல் ருக்கிறது. சென்ற வாரம் எங்கள் தாலீம் ு இருந்த இடத்திற்கு முன் நின்றேன். ந்த இடத்தில் ஒன்றும் இல்லை. எல்லாம் ாழாகக் கிடந்தது. முள் செடிகள் வளர்ந்து ங்கே ஒரு வெள்ளாடு மேய்ந்து கொண் ருந்தது. இப்போது மகம்மது கவுஸ் லுவகத்தில் இருக்கிறார். அவர் வீட்டில் று யாரோ குடியிருக்கிறார்கள். அவரைச் சார்ந்தவர்கள் கூட இல்லை.

செடி இருந்த இடத்தில் மேய்ந்துகொண் ருந்த ஆட்டைப் பார்த்த வண்ணமாகவே வெகு நேரம் நின்றேன். அந்த ஆட்டின் ரில் என்னை அறியாத ஓர் அன்பு எனக்கு ண்டாயிற்று. என் மனக் கற்பனையில் தன் முகம் வர வர மாறிக் கவுஸ் உஸ்தாதே ங்கே நின்றார். அவர் கவரைப் பிடித்துக் கொண்டு "ஊட் பைட்" தேகாப்பியாசம் செய்வது போல் மனக் காட்சி கண்டேன்.

"போகலாமே!" என்றார் என் கூட இருந்த கூட்டுறவு இன்ஸ்பெக்டர் சீதாபதி ராவ். என் பகற் கனவிலிருந்து இறங்கினேன்.

"உமக்கு ஜிம்னாஸ்டிக்ஸ் இன்ஸ்பெக்டர் மகம்மது கவுஸ் தெரியுமா?" என்று கேட்டேன்.

பாவம், சீதாபதி ராவ் அவரை எவ்வாறு அறிவார்? உத்தியோகத்திற்காக இந்த ஊருக்கு எங்கிருந்தோ நாலு ஆண்டுகளுக்கு முன்தான் வந்தவர்.

"அது யார்? எனக்குத் தெரியவில்லையே?" என்றார்.

இவரிடம் எங்கள் உஸ்தாதைப் பற்றிப் பேசி என்ன பயன்? நானும் எத்தனையோ வாத்தியார்களிடம் எத்தனையோ பாடங்கள் படித்தேன். அவர்களில் யாரும் எங்கள் மகமது கவுஸ் உஸ்தாதுக்குச் சமானமாக மாட்டார்கள்.

அங்கிருந்து கிழக்கே சென்று அவ்விடமுள்ள ஒரு குன்றண்டை போனோம். குன்றின் அடிவாரத்தண்டை ஒரு பாறையில் ஒரு பெரிய அனுமார் செதுக்கப்பட்டிருந்தது. அங்கே ஊரார் வேண்டுதல்கள் வேண்டிக்கொண்டு தேங்காய் உடைத்துப் பூஜைசெய்வதுண்டு. அந்த அனுமாரும் செங்காவி பூசி எங்கள் தாலீமில் வரைந்திருந்தது போலவே இருந்தபடியால் அவர் மீது எங்களுக்கெல்லாம் அதிக பக்தி. அந்த அனுமாரையாவது பார்த்துக் கொஞ்சம் ஆறுதல் அடையலாம் என்று அவ்விடம் சென்றேன். சுற்றிச் சுற்றிப் பார்த்தும் அவர் காணப்படவில்லை.

"இங்கே ஒரு பெரிய அனுமார் பாறையில் இருக்குமே, அது என்னவாயிற்று?" என்று சீதாபதி ராவரைக் கேட்டேன்.

"அதோ பாருங்கள், அதுதான் அனுமார் கோவில்" என்றார். ஒரு மண்டபம் தென்பட்டது. யாரோ பக்தர்கள் அசட்டுத்தனமாக எங்கள் அனுமாரைச் சுவர் கட்டி அடைத்துப் போட்டு ஒரு கோவிலாகச் செய்துவிட்டிருப்பதைப் பார்த்தேன். ஊரெல்லாம் பாழாய்ப் போன மாதிரி இந்த மலையடி அனுமாரும் கோயிலுக்குள் மறைந்து போனாரே என்று வருத்தப்பட்டேன். கோயிலுக்குள் போனேன். அனுமார் என்னமோ இருந்தார். ஆனால் முன் மாதிரி ஜொலிக்கவில்லை. அடங்கி ஒடுங்கி அரக்கர் கையில் சிக்கின மாதிரி இருந்தார்.

ரஹிமான் வீட்டைக் கண்ணால் பார்க்கலாம் என்று ஆசை தோன்றிற்று. அந்தத் தெருவுக்குப் போனேன். வீடு மட்டும் முன் போலவே செம்மண் பூசிய வண்ணமாக இருந்தது. ஆனால் யாரோ குடியிருந்தார்கள்.

ரஹிமான் தன் வீட்டு வாசலில் சமையலுக்காக விறகு வெட்டுவது வழக்கம். அதைப் பார்த்து அனுபவித்துக் கொண்டு சில சமயம் நான் நிற்பதுண்டு. எத்தனையோ சிநேகிதர்களைப் பார்த்திருக்கிறேன். என் ரஹிமானுக்குச் சமானம் யாரும் இருக்க மாட்டார்கள்! அவன் இப்பொழுது எங்கே என்ன தொழிலில் இருக்கிறான் என்பது கூட எனக்குத் தெரியாது; சொல்லுவாரும் இல்லை. உயிரை வேண்டுமானாலும் தருவான். ஒரு பரீக்ஷையும் அவன் சரியாகத் தேறவில்லை. என் படிப்பில் முடியுமானால் அவனுக்குப் பாதி தந்திருப்பேன்; இருவரும் பாஸ் செய்திருக்கலாம். பாவம்! அவனை வாத்தியார்கள் எல்லாரும் சேர்ந்து கோளாறு செய்துவிட்டார்கள். பள்ளிக்கூடம் விட்ட பின், அவன் என்னவானானோ தெரியவில்லை. என்ன விலை கொடுத்தால் அத்தகைய நண்பன் எனக்குக் கிடைப்பான்?

குழந்தைகாள், உங்கள் நண்பர்களைப் பற்றிக் கவனமாயிருங்கள். என்னைப் போல் ஏமாற்றமடையாதீர்கள். நட்பைப் போல் ஒரு செல்வமுமில்லை. மற்றதெல்லாம் பொய்; காற்றைப் போல் பறந்து போகும். அன்பும் நட்புமே வாழ்க்கையில் பெருத்த செல்வம். **(நீண்ட காலம் முன்பு எழுதியது)**

'தம்மைக் குறித்துப் பிறர் செய்யும் கேலிகளைக்கூட ரஸித்துச் சிரிக்குமளவு நகைச்சுவை உணர்வு படைத்தவர் ராஜாஜி' என்று காந்தி மகான் ஒரு முறை கு பிட்டார். இடுக்கண் வருங்கால் தாமும் நகைத்துப் பிறரையும் நகைக்க வைப்ப ராஜாஜிக்கு ஈடு ராஜாஜியேதான். ஒப்பற்ற அவரது நகைச்சுவைக்கு உதாரணமாக இ ஒருசில துளிகளை அளிக்கிறோம் :

# சிரிக்க வைக்கும் சிந்தனைச் சிற்

சுமார் இருபத்தைந்தாண்டுகளுக்கு முன் திருச்சி சிறையில் ராஜாஜி ராமாயணம் படித்து விளக்கி வந்த காலம். "சத்ருக்னனுக்கு ஏன் சத்ருக்னன் என்று பெயர் வந்தது; அவன் ஒரு சத்ருவையும் ஜயிக்கவில்லையே?" என்ற கேள்வி பிறந்தது. ஸ்ரீ அனந்தசயனம் அய்யங்கார் 'பொருத்தமில்லாமல் பெயர்கள் வைப்பது' பற்றி விஸ்தாரமாகப் பேச ஆரம்பித்தார். அவர் நிறுத்துவதாகவே தோன்றவில்லை. அப்போது ராஜாஜி, "பொருத்தமில்லாமல் பெயர் வைப்பதற்கு ஓர் உதாரணம், பாம்பைக் கண்டு காதவழி பயந்து ஓடுபவர்களுக்கு அனந்தசயனம் என்று பெயர் வைப்பது!" என்றார். அதற்கு முதல் நாள் ராத்திரிதான் சிறையில் பாம்பு வந்திருந்தது!

ஃ ஃ ஃ

சித்திரகூடத்தில் பரதன் ராமரைச் சந்தித்து எவ்வளவோ வருந்தி வருந்தி அழைக்கும் கட்டத்தை ராஜாஜி தமது சிறைவாசத்தின்போது உடனிருந்த காங்கிரஸ் தொண்டர்களுக்கு விளக்கினார். இராமர் பரதனுடன் அயோத்தி திரும்புவதற்கு மறுத்து விடுகிறார் அல்லவா? "ராமருக்குத்தான் ஏன் இவ்வளவு பிடிவாதம்? சிவனே என்று பரதனுடன் திரும்பிப் போயிருந்தால் எவ்வளவு கஷ்டங்கள் இல்லாமற் போயிருக்கும்!" என்று ராமாயண சிரவணம் செய்தவர்களில் ஒருவர் பரிதாபப்பட்டார்.

"அதற்கென்ன செய்வது? சீதையின் தலைவிதி!" என்றார் வேறொருவர்.

இன்னொருவர் "இல்லை, இல்லை! ராவணனுடைய தலை விதி!" என்றார்.

அப்போது ராஜாஜி குறுக்கிட்டு, "ராவணனுடைய தலைகளின் விதி என்று சொல்லுங்கள்" என்று திருத்தினார்.

ஃ ஃ ஃ

பல ஆண்டுகளுக்கு முன் சென்னையில் ஒரு பொதுக் கூட்டத்தில் ராஜாஜி பேசிக்கொண்டிருந்த பொழுது சில காலிகள் ராஜாஜியின் மீது கற்களை வீசி எறிந்தனர். பக்கத்திலிருந்த பலருக்குப் பயமாகப் போய்விட்டது. கற்களை வீசி எறிந்தவர்களை அடக்கப் போனார்கள். அப்போது ராஜாஜி, "அவர்களை விட்டுவிடுங்கள். அவர்களுக்கு அவ்வளவு தூரம் குறி பார்த்து அடிக்கத் தெரிந்தால் நமக்கு எப்பொழுதோ சுயராஜ்யம் கிடைத்திருக்குமே!" என்றார்.

ஃ ஃ ஃ

தவிர்க்க முடியாமல் போனால் பொதுஜ வாக்கெடுப்புக்குப் பிறகு பாகிஸ்தானைப் பி வினை செய்ய வேண்டும் என்று ராஜாஜி தி டம் சமர்ப்பித்திருந்த சமயம். இது பற் அவர் தாம்பரம் கிறிஸ்தவக் கல்லூரியி பேசினார். அவர் பேசி முடித்த பின், அக்கூ சனம் வகித்த மாணவர் ஒரு சந்தேகத்தை கிளப்பினார்: 'ஐரோப்பாவில் பல நாடுக இருப்பதை ராஜாஜி குறிப்பிட்டார். ஆன ஐரோப்பாவின் நிலைமை என்ன? அங்கு விடாி யுத்தம்தானே நடக்கிறது?' என்றார்.

உடனே ராஜாஜி, 'ஆம். அக்கிராசன சொல்லுவது ரொம்பவும் சரி. அதற்காகவே தான் பிரிந்து போவதா வேண்டாமா என்று சர்வஜன வோட்டு எடுக்கு முன் இரண்டு தரப்பினரும் பிரசாரம் செய்ய உரிமை பெற வேண்டும் எனக் கேட்டிருக்கிறேன். அப்போது நமது அக்கிராசனர் போன்றவர்கள் ஒவ் வொரு பொதுக் கூட்டத்துக்கும் ஐரோப்பா படத்தைக் கையில் எடுத்துக் கொண்டு போய், பிரிந்து போவதிலுள்ள தீமைகளை ஜனங்களுக்கு எடுத்துக் கூறலாம். அப்படியும் அந்த ஜனங்கள் கேட்காவிட்டால் நாம் என்ன செய்யலாம்?' என்றார்.

ஃ ஃ ஃ

இரண்டாவது உலக யுத்த காலத்தில் காங்கிரஸ் அரசாங்கங்கள் பதவியிலிருந்து விலகத் தேவையில்லை என்று ராஜாஜி கூறியதால் அவருக்குப் 'பதவி மோகம்' என்று பலர் பெயர் சூட்டினார்கள். ஐந்தாண்டுகளுக்குப் பின் – 1945ல் – அவரது வாதமே சரி என்று நிலைப்பட்ட பின் சென்னை கோகலே மண்டபத்தில் பேசிய ராஜாஜி தமக்குப் 'பதவி மோகம்' என்று குற்றம் சாட்டிய பிருகஸ்பதிகளுக்கு இப்படிப் பதில் சொன்னார்:



"பதவி மோகம் என்று சொன்னால் மட்டும் போதாது. பதவி இல்லையே என்று எனக்குப் பெரும் கோபம் என்றும் சேர்த்துக்கொள்ள வேண்டும். ஆமாம். எனக்குப் பதவி மோகம்தான். இந்தத் தேசம் இப்படிப்பட்ட கேவலமான நிலையில் இருக்கிறதே,

இதற்கு நல்ல பதவி வரவேண்டுமே என்று எனக்கு அசாத்திய மோகம்தான்; மோகம் மட்டும்தானா? அதற்குப் புத்திசாலித்தனமாக நூவனாமலிருக்கிறீர்களே என்று கோபம்கூட வருகிறது!''

ஃ ஃ ஃ

1952ம் ஆண்டு ராஜாஜி சென்னையில் முதன் மந்திரி பதவி ஏற்ற பின் திருநெல் வேலிக்குச் சென்றிருந்தார். ரேஷனை ஒழித்து மக்களின் வயிற்றில் பாலை வார்த் திருந்த மகானுக்கு மக்கள் மாலை மேல் மாலையாகப் போட்டபடி இருந்தார்கள். "இந்த மாலை சூட்டும் வைபவத்துக்கு முடிவே கிடையாதோ என்று தோன்றி விட்டது. பூமாலைகள் மேலும் மேலும் சேர்ந்து மேடை யில் பூமலையாகக் குவிந்துவிட்டன' என்று இத னைப் பேராசிரியர் 'கல்கி' வர்ணித்திருக் கிறார். இவ்வளவு அன்புத் தொல்லைகளையும் "பொறுத்து'க் கொண்டிருந்த ராஜாஜி முடி வில் கூறியதாவது:

''உலகத்தில் தெய்வ பக்தி அதிகமான தனால் கடவுளுக்கு எவ்வளவு கஷ்டம் அதி கரிக்கக் கூடும் என்பதை இன்று தெரிந்து கொண்டேன். கடவுளிடம் பக்தி செய்யா தவர்கள் கடவுளுக்குக் கஷ்டம் கொடுக்காம லிருக்கிறார்கள். உங்களுடைய அன்பினால் எனக்கு இப்போது ஏற்பட்ட கஷ்டத்தி லிருந்து கடவுளுடைய கஷ்டங்களைப் பற்றி நினைக்கும்படி நேர்ந்தது. இந்தக் கூட்டத்தி லுள்ளவர்களில் எனக்கு மாலை போடாதவர் களுக்கெல்லாம் நன்றி செலுத்துகிறேன்!''

ஃ ஃ ஃ

1950ம் ஆண்டு காரைக்குடியில் நடந்த கம்பர் விழாவில் தற்பெருமை பிடித்த சில தமிழ் எழுத்தாளர்களுக்கு ராஜாஜி இப்படி ஒரு 'குட்டு' வைத்தார்:

''ராமாயண காவியத்தைப் படித்துக் கண்ணோடு பார்க்காத சிலர் ராமாயணக் கதையில் குறைகள் இருப்பதைக் கண்டு பிடிக்கலாம். இன்று எத்தனையோ எழுத் தாளர்கள் குறையே இல்லாத கதைகள் எழுத முடியும். ஆனால் எழுதி என்ன பயன்? காலப் போக்கில் அவை எல்லாம் நிற்குமா? நிற்காது என்றும் விஷயம் எழுதிய எழுத்தா ளர்களுக்குத் தெரிந்தாலும் தெரியாவிட்டா லும், அந்தக் கதைகளுக்கே தெரியும், அவை நிலைத்து நிற்க முடியாது என்று.''

ஃ ஃ ஃ

சென்னையில் ஒரு முறை தமிழ் விழாவைத் தொடங்கி வைத்த ராஜாஜி தமிழின் வரி வடிவத்தை மாற்றுவதைக் கண்டித்து இவ் வாறு ஹாஸ்யமாகக் கூறினார்:

''என்னைத் திராவிடக் கழகத்தார் திட்டி எழுதும்போது நான் வருத்தப்படுகிறேன். திட்டி எழுதுகிறார்களே என்றில்லை. இப்படிப் புதிய 'லை'யும், 'னை'யும் போட்டுத்தானா திட்ட வேண்டும் என்று வருத்தப்படுகிறேன்.''

ஃ ஃ ஃ

எத்தனையோ இன்னல்களுக்கிடையே ராஜாஜி இன்றும் சிரித்துப் பேசுகிறார். சமீ பத்தில் அவர் செய்த மூன்று ஹாஸ்யங்களைப் பார்ப்போம்:

கம்யூனிஸ்ட் கட்சியின் இரு பிரிவுகளும் எந்தச் சின்னத்தை வைத்துக்கொள்வது என்று சர்ச்சை செய்கின்றன அல்லவா? 'கம்யூனிஸ்ட் கட்சிக்குத்தான் அதிர்ஷ்டவச மாகச் சுத்தி அருவாள் இரண்டும் சேர்ந்த சின்னம் இருக்கிறதே; ஒரு பிரிவு சுத்தியை யும் இன்னொரு பிரிவு அருவாளையும் வைத்துக் கொள்ளட்டும்; இது பல விதங்களில் அர்த்த புஷ்டியுள்ளதாயிருக்கும்' என்கிறார் ராஜாஜி.

இந்திய இசைப் பண்பின் உருவமாகிய வீணையின் பெருமையையும், இந்திய அரசாங் கத்தின் சிறுமையையும் நன்கு உணர்ந்துள்ள ராஜாஜி, வீணையைத் தேசிய வாத்தியமாகச் சர்க்கார் அங்கீகரித்த போது இவ்வாறு கூறினார்: ''யாரும் கேள்விப்படாத சிறிய சர்வகலாசாலைகள் புகழ்பெற்ற பெரியவர் களுக்கு டாக்டர் பட்டம் அளிப்பதுண்டு. இந்திய சர்க்கார் வீணைக்குத் தேசிய அங்கி காரம் அளித்திருப்பதும் இதுபோலத்தான்.''

நேரு அவர்களின் தலையை ரூபாய் நாண யத்தில் பொறிப்பதில் எவ்வளவோ உசிதக் குறைவு இருப்பினும் அதிலும் ஒரு 'பொருத் தத்தை'க் கண்டு சமயோசிதமாகக் கூறினார் ராஜாஜி: 'பதினேழாண்டு ஆட்சி நடத்தி ரூபாயின் மதிப்பைப் பதினேழு பைசாவாகக் குறைத்தவரின் உருவத்தில் ரூபாய் நாணயம் வெளியிடுவது அவருக்கு நல்ல ஞாபகார்த்தம் தானே?' என்று அவர் கேட்டார்.

ஃ ஃ ஃ

ஒரு முறை ராஜாஜியே தமக்கு ஏன் பிறந்த நாள் கொண்டாடவில்லை என்று கேட்டார் எனில் அது விந்தையாக இருக்கிறதல்லவா? விஷயம் இதுதான்:

1950ல் இந்தியா குடியரசாகப் பிரகடன மானவுடன், அதுவரை கவர்னர்-ஜெனர லாக இருந்த ராஜாஜி பாரதத்தின் முதல் ராஷ்டிரபதியாகப் பதவி ஏற்க வேண்டும் என்று நாட்டில் பலர் விரும்பினார்கள். தமிழ கத்தில் இந்த விருப்பம் வெகு தீவிரமாக இருந்தது. அச்சமயத்தில் சென்னைக்கு விஜயம் செய்த ராஜாஜி பின்வருமாறு கூறினார்:

''சென்ற வருஷம் நான் வேண்டாதபோது எனக்குப் பிறந்த நாள் கொண்டாடினீர் களே! இந்த வருஷம் ஏன் கொண்டாட வில்லை? எனக்கு வயது எழுபதுக்கு மேல் ஆகிறது என்பதை நீங்கள் ஞாபகப்படுத்திக் கொண்டு மற்றவர்களுக்கும் ஞாபகப்படுத் துங்கள். என்னிடம் மேலும் வேலை வாங்க யத்தனிக்க வேண்டாம். இதற்காகவே பிறந்த நாளைக் கொண்டாடி என் பிராயத்தை நினைவில் வைத்துக் கொள்ளுங்கள்.''

இப்படிச் சொன்னவர்தான் அதற்குப் பதினைந்து ஆண்டுகளுக்குப் பின் இன்று தேசத்தின் தேவையை உணர்ந்து, ஓயாமல் ஒழியாமல் உழைக்கிறார். அன்று போலவே சிரித்துக் கொண்டும், மற்றவர்களைச் சிரிக்கச் செய்துகொண்டும், சேவை செய்கிறார்!



# கந்தன் கருணை

திருமுருக கிருபானந்தவாரியார்

## 5. ஆசை அழிந்தது!

ரதியும் மன்மதனும் தங்கள் பரிவாரங்களுடன் கயிலை மலைக்குச் சென்றனர். கயிலையைக் கண்டதும் மன்மதன் தேரை விட்டிறங்கினான்; தன்னுடன் வந்த பரிவாரங்களை அங்கேயே விட்டு விட்டு ரதி தேவியை அழைத்துக் கொண்டு வில்லும் அம்புமாய் கயிலை மலை மீது ஏறினான்; கரும்பு வில்லை வளைத்து மலர்க் கணை பூட்டி அங்கிருந்த பறவைகள் மீதும் விலங்குகள் மீதும் விடுத்துக் காம இச்சை உண்டாக்க நினைத்தான். கிழக் கோபுர வாயிலில் இருந்த நந்தியெம்பெருமான் மன்மதனின் எண்ணத்தை அறிந்து ஆத்திரங் கொண்டார் 'உ...ம்' என்று சினந்து ஹுங்காரம் செய்தார். அந்த ஒலியைக் கேட்ட மன்மதனுடைய பாணங்கள், பறவைகள் மீதும் விலங்குகள் மீதும் செல்லாமல் ஆகாயத்திலேயே நின்று விட்டன. நந்தி தேவர் முன் சென்று அவரது காலிட மதனன் விழுந்தான்.

காவல்காரரிடமே காதட தெய்வத்தின் காரியம் இயட வில்லை என்றால் யஜமானனை பற்றிக் கேட்க வேண்டுமா மதனன் நடுங்கியவாறு, "நந்தியம்பெருமானே! தேவர்களின் துயர் துடைக்கும் பொருட்டு பிரமதேவர் உத்தரவுப்படி சிவபெருமானிடம் வந்திருக்கின்றேன்" என்றான்.

"அப்படியானால் மேலக் கோபுர வாயில் வழியாகப் போ" என்றார் நந்தி.

மன்மதன் நந்தி தேவரை வணங்கி விடை பெற்றுக் கொண்டு மேலக்கோபுர வாயிலின் உள்ளே, தூங்குகின்ற புலியை எழுப்பும் மானைப் போல் சிவபெருமானிடம் சென்றான். நீறு பூத்த நெருப்புப் போல் இருக்கும் இறைவன் தென்திசை நோக்கி மோனத் திருக்கோலத்தில் அமர்ந்திருந்ததைக் கண்ட மன்மதன் நடுங்கினான். அவன் உடல் எல்லாம் வியர்த்தது. கையில் வைத்திருந்த வில் அம்புகளுடன் களைத்துக் கீழே விழுந்தான். ரதிதேவி மன்மதனைத் தன் கரத்தால் தாங்கி, ஆறுதல் கூறித் தேற்றினாள். மன்மதன் களைப்பு நீங்கி எழுந்தான். "ஈசனைக் கண்டவுடனேயே உயிரை இழந்தவன் போலாகி விட்டேனே! இனி எம்பெருமானை எதிர்த்துப் பாணம் விடுத்தால் உய்ய முடியுமா? இன்னும் சிறிது நேரத்தில் சிவபெருமானின் நெற்றிக் கண் பார்வையால் வெந்து அழியப் போகிறேன். உரலில் தலையைக் கொடுத்து விட்டு உலக்கைக்குப் பயந்தால் முடியுமா? விதியை யாராலும் வெல்ல முடியாது. இறைவன் திருவுள்ளம் எப்படியோ, அப்படியே நடக்கட்டும்" என்று மன்மதன் தனது வில்லை வளைத்து நாணேற்றிக் கண்ணுதற் கடவுளை அணுகினான்.

அங்கே, இந்திரன் மனோவதி நகரத்துக்குச் சென்றான். அங்கிருந்த பிரமதேவரை வணங்கி, "எம்பெருமான் மீது மன்மதனைத் தனித்து ஏவிவிட்டீர்களே, அவன் போர்த் திறத்தைப் பார்க்க நாமும் செல்லுவோம்" என்று வேண்டிக் கொண்டான். பிரமன், இந்

...ரன் முதலிய தேவர்கள், மன்மதன் மலர்க் கணை விடுப்பதைக் காணப் புறப்பட்டுக் கயிலை வந்தடைந்தனர். கயிலை மலையின் ஒரு புறத்தே அவர்கள் சிவபெருமானைத் துதித்துக் கொண் டிருந்தார்கள்.

சிவபெருமான் மீது குறி வைத்து ஐந்து மலர்க் கணைகளை விடுத்தான் மன்மதன். அந்தக் கணைகள் எம்பெரு மான் மீது பட்டதும், நெற்றிக் கண் ணைச் சிறிதே திறந்து பார்த்தார்.

அவ்வளவுதான்! வெல்ல வந்தவன் வெந்து போனான். பெருமானின் பார் வையிலிருந்து எழுந்த தீ மன்மதனின் உடலை எரித்தது. அதனால் உண்டாகிய புகை கயிலை மலை முழுவதையும் சூழ்ந்தது. மன்மதன் சாம்பலாகி விட்டான்.

**விட்ட வெம் பகழி**
**ஐந்தும் வியந்தரு விமலன்மீது**
**பட்டலுஞ் சிறிதே வேளைப்**
**பார்த்தனன் பார்த்த லோடும்**
**கட்டழல் பொத்த நெற்றிக்**
**கண்ணது கடிதே காமற்**
**சுட்டது கயிலை முற்றுஞ்**
**சூழ்புகை பரவிற் றன்றே**

மதனன் ஒருவன் எரிந்து தோன்றிய புகை கயிலை முழுவதையும் சூழ முடி யுமா என்று வியக்க வேண்டாம். சின் னஞ்சிறு அணுவை ஆயுதத்தால் சிதைக் கும்போது எழும் புகைக் கொண்டல்கள் எவ்வளவு பரிமாணம் வியாபிக்கின்றன? இந்த அணு ஆயுதத்தைக் காட்டிலும் கொடிய ஆசை ஆயுதமல்லவா அனங்கன்?

எல்லாருக்கும் ஆசை உண்டாக்கு வது மன்மதனுடைய வேலை. சிவபெரு மான், தாம் ஆசையை அறவே களைந்த தோடு மட்டுமின்றி, ஆசையை அனைத் துலகுக்கும் உண்டாக்கும் அதிதேவதை யையே அழித்து விட்டார்.

இந்துக்களுக்கு ஒரு மன்மதன், கிறிஸ் தவர்களுக்கு ஒரு மன்மதன், சோஷ லிஸ்டுகளுக்கு ஒரு மன்மதன், கம்யூ னிஸ்டுகளுக்கு ஒரு மன்மதன் என்று இல்லை. எல்லோருக்கும் ஒரே மன் மதன், மண்ணவர்க்கும் விண்ணவர்க் கும் அவன் பொதுவானவன். எனவே ஆங்கில மொழிப்படியும் அவன் காமன் (common). காமன் எரிந்த போது எழுந்த புகை, அரி அயனாதி தேவர்கள் பாற் கடலைக் கடைந்த சமயம் ஆலகால விஷம் தோன்றியதைப் போலிருந்ததாம். அது கண்ட நந்தி தேவர் 'மன்மதன் எரிந்து விட்டான்' என்று தம்மைச் சூழ்ந்திருந்த கணங் களிடம் கூறினார். ''சிவபெருமானின் நெற்றிக் கண் மன்மதனைச் சுட்டது என்று நினைக்காதீர்கள். கருணாமூர்த்தி யான அவரை மலர்க் கணையால் மயக்கி விடலாம் என்றெண்ணிய மறச் செயலை சுட்டு விட்டது. ரதி தேவி பதியை இழந்த சோகத்தால் வருத்த முற்று எம்பெருமானிடம் வேண்டிக் கொள்வாள். கண்ணுதற் கடவுள் மன் மதனை மீண்டும் எழுப்பித் தருவார்.

---

காலஞ்சென்ற சர்தார் படேலுக்கும் ராஜாஜிக்குமிடையே இருந்த நட்பின் வரலாறு தூய்மை மிக்க ஒரு சகாப்தமாகும். ''மாசில்லா ஒழுக்கமும் சிறந்த நிர்வாகத் திறமையும் தெளிந்த அரசியல் ஞானமும் படைத்தவர்'' என்று ராஜாஜியை வாயார வாழ்த்தியவர் சர்தார். பவநகர் மகாராஜா நம் மாநில கவர்னராயிருந்தபோது சென்னைக்கு விஜயம் செய்த படேல், ''நான் அரச வம்சத்தில் பிறந்த ஒரு மகாராஜாவை உங்களுக்குக் கவர்னராகத் தந்திருக்கிறேன்; நீங்களோ ஒரு சக்கரவர்த்தி ராஜாவையே எங்களுக்குக் கவர் னர்ஜெனரலாகத் தந்திருக்கிறீர்கள்'' என்றார்.



ராஜாஜியின் தலைமையை நம் ராஜ்யத்தில் சிலர் எதிர்த்தபோது படேலுக்கு உண் டான சீற்றத்துக்கு அளவே இல்லை. இதில் படேலையும் சம்பந்தப்படுத்தி, அவர் பட் டாபி சீதாராமையாவின் தலைமையை ஆத ரிக்கிறார் என்ற வதந்தி பரப்பப்பட்டது. இதைக் கேள்வியுற்ற சர்தார்ஜி, ''என்ன, ராஜாஜிக்குப் பதில் இன்னொருவரா? நான் சொன்னேனா? முழுப் பொய், மூடத்தனம்'' என்று அழுத்தம் திருத்தமாகக் கூறினார்.

ஆளும் கட்சியைக் கட்டுப்படுத்த படேல் இல்லாமற் போனாரே என்பதுதான் ராஜாஜி யின் பெரும் துயரம்.

> மனிதன் ஏன் தவறான வழியில் செல்கிறான் என்பதன் உண்மையான காரணத்தை அடிக்கடி நினைவுக்குத் தந்து கொள்ள வேண்டும். தீய செயல்கள் செய்தவர்களைக் கண்டு சாந்தம் இழக்காமல் அவர்கள் பால் அன்பு பாராட்ட இது பயன்படும்.
>
> தன்னைத் தான் அடக்கியாளாமல், எண்ணங்கள் போனபடி விட்டுவிட்டால் பிறப்புடன் வந்திருக்கும் கர்ம மூட்டையின் வேகம் வேலை செய்யும். குண ரூபமாக அது அனைவரையும் வேதனைப்படுத்துகிறது. அந்த சுபாவம் காரிய ரூபமாக வெளிப்படுகிறது. இதை ஒருவனிடம் கண்டு நாம் கோபிக்கலாமா? மற்றவர்கள் செயலைக் கண்டு வெறுப்படையும்போதெல்லாம் அவனவன் தன் குறைகளை நினைவுக்குத் தந்து கொள்ள வேண்டும். 'உன் மனம் சுத்தமாக இருக்கிறதா? உன் சுபாவம் உனக்குத் தெரியுமே! மற்றவர்களுக்கு வெளிப்படையாகாவிடினும் அது உன்னை செய்யும் வேலையை நீ கண்டிருக்கிறாயே! அதை அடக்கினது உன் பாக்கியம். மற்றவர்கள் அந்த பாக்கியத்தை அடையாமற் போனதற்கு வருந்த வேண்டும். கோபம் வேண்டாம்' என்று தனக்குள் எச்சரிக்கை செய்து கொள்ள வேண்டும். பாவம் செய்தான் என்றும் ஒருவனையும் நாம் துவேஷிக்கக் கூடாது. நாம் அந்தப் பாவம் செய்யவில்லை என்று கர்வப்படவும் கூடாது.
>
> — ராஜாஜி

இந்தக் காட்சியை நீங்கள் பாருங்கள்'' என்றும் முக்காலமும் உணர்ந்த நந்தி தேவர், சுரகணங்களுக்குக் கூறினார்.

முப்புரத்தை எரித்த முக்கட்பெருமான் தமது அடியார் மூவரையும் எரிக்காது விட்டது போலத் தென்றல் தேருடைய மன்மதனை எரித்த எம்பெருமான் ரதி தேவியை எரிக்கவில்லை. சிவபெருமான் மன்மதனை எரித்துவிட்டு முன் போலவே மோன நிலையில் வீற்றிருந்தார். சிவபெருமானின் நெற்றிக் கண் மன்மதனை எரித்தது நிக்ரஹ சக்தியைக் காட்டுகிறது. இதே நெற்றிக் கண் முருகரைத் தோற்றுவித்து, அரக்கரை அழித்து நல்லோரை வாழ்விக்கிறது. இது அநுக்கிரக சக்தியைக் காட்டும். மாரனை அழித்த அதே கண்கள்தாம் குமாரனைத் தந்தருளின.

ரதி தேவி துயரக் கடலில் ஆழ்ந்தாள். அவள் கண்களிலிருந்து வழிந்த நீர் ஆறுபோல் ஓடிற்று. அவள் உடல் வியர்த்தது: ஆவி ஒடுங்கியது.

''பிராணபதி! பிராணபதி!'' என்று கதறிக் கீழே விழுந்தாள்.

**செம்பதுமை திருக்குமரா! தமியேனுக்கு**
**ஆருயிரே! திருமால் மைந்தா!**
**சம்பரனுக் கொருபகைவா! கன்னல்வில்**
**சிலைபிடித்த நடக்கை வீரா!**
**அம்பவளக் குன்றனைய சிவன்விழியால்**
**வெந்துடலம் அழிவுற்றாயே!**
**உம்பர்கள்தம் விழியெல்லாம் உறங்கிற்றோ?**
**அயனாரும் உவப்புற் றாரோ?**

''திருமகள் பெற்ற செல்வப் புதல்வரே! என் ஆருயிரே! 'மன்மதனும் ரதியும் போல்' என்று உலகத்தார் ஒற்றுமைக்கு நம்மைச் சொல்வார்களே! அப்படியிருந்தும் சிவபெருமான் மீது போருக்குச் செல்ல வேண்டாம் என்று நான் சொன்னபோது கேட்கவில்லையே! கரும்பை வில்லாகக் கொண்டு இரும்பையும் உருக்கிய தாங்கள் கடைசியில் கருணாமூர்த்தியான கயிலைநாதரின் நெற்றிக் கண் பட்டு இறந்து விட்டீர்களே!'' என்று கதறினாள் ரதி.

மறைந்தவர்களின் உடலையேனும் பார்த்துத் துக்கத்தை முழுவதும் வெளிப்படுத்தும் பாக்கியம் கூட ரதிக்கு இல்லை; அவன் பஸ்மமாகிவிட்டான். இதை எண்ணி, ''வெந்துடலம் அழிவுற்றாயே!'' என்று கதறினாள்.

''சுவாமி! 'சிவபெருமான் மீது போருக்குப் போ; போ' என்று உங்களைப் பிடித்துத் தள்ளினார்களே அந்த தேவர்கள் உம்மை ஈசன் எரித்தபோது எப்படிப் பார்த்துக் கொண்டிருந்தார்களோ? 'தொலைந்தான் தம்பி; பங்காளி பங்கு கேட்க மாட்டான்' என்று உங்கள் அண்ணா பிரமதேவருக்கு உவப்பாக இருந்திருக்கும்.

''சுவாமி! நீங்கள் அலங்காரம்செய்து கொண்டு நிற்கும்பொழுது உங்களைக் கண்டு விம்மிதம் அடைவேனே! 'மன்மதனைப் போன்ற அழகு' என்று அழகுக்கு உங்களை யல்லவா இந்த உலகம் சொல்லுகிறது? உங்களுடைய மலை போன்ற தோள்களைத் தழுவிக் கொண்டிருந்த நான், அன்பு பொழியும் உங்கள் திருமுகத்தை இனி எந்தக் காலத்தில் பார்ப்பேன்? போன ஜன்மத்தில் ஒற்றுமையாக வாழ்ந்த கணவன் மனைவியரிடையே கலகம் செய்து அவர்களைப் பிரித்துவிட்டேன் போலும்! அவ்வினைதான் இப்போது வந்து வருத்துகிறதோ? எதுவும் தெரியாமல் வருந்துகிறேனே சுவாமி'' என்று பலவாறாகப் புலம்பினாள் ரதி. (தொடரும்)

# கல்லூரியில் சுறுசுறுப்பு கட்டாயம் வேண்டும்

# வெள்ளை உடைகளுக்கு டினோபால் தருவது

## துல்லிய வெண்மை துலங்கும் மேன்மை

**கண்டோர் வியக்கும் கன்னி! கல்வியில் கருத்துள்ளவள். கல்லூரியே பெருமை கொள்ளும் இவள் என்றும் அணிவது மிகமிக வெண்மையான ஆடைகளே — எல்லாம் டினோபால் சலவை!**




வெள்ளைத் துணிகளைக் கடைசியாக அலசுவதற்கு முன் நீரில் சிறிதளவு டினோபால் சேர்த்தால் போதும் — ஷர்ட்டுகள், பிளவுசுகள், புடவைகள், ஃப்ராக்குகள், படுக்கை விரிப்புகள் மற்றும் வீட்டு உபயோகத்திற்கான துணிகள் கூடத்தான் — வெண்மை பளிச்சிடும்! இத்தனைக்கும் செலவு மிகமிக சொற்பம், ஒரு துணிக்கு ஒரு பைசாவுக்கும் குறைவே!

உங்கள் உடைகள் இணையற்ற வெண்மையுடன் விளங்க இன்றே வாங்குங்கள் டினோபால் — விஷயமறிந்தவர்கள் எப்போதும் வாங்குவது டினோபால்தான்! எவ்விதமான துணிகளுக்கும் கெடுதலின்றி உபயோகிக்கக் கூடிய நவீன சலவை சாதனம் டினோபால்.



டினோபால் என்ற பெயர் ஜே. ஆர். கெய்கீ, எஸ். ஏ., பால், ஸ்விட்ஜர்லாந்து ஸ்தாபனத்தாரின் ரிஜிஸ்டர்ட் ட்ரேட் மார்க் ஆகும்.

சுஹ்ரித் கெய்கீ லிமிடெட், P.B. 965, பம்பாய்-1 பி.ஆர்.

Shilpi SGT 122 Tam

# ருஷ்ய மொழியில் அலை ஓசை

[அமரர் 'கல்கி' அவர்களின்
படைப்பான ''அலை ஓசை''
யில் தொடர்கதையாக வெளி
போது தமிழ்ப்பெரு மக்கள்
களித்த வரவேற்பு யாவரும்
ததே. மேற்படி நவீனம் சாஹித்
அகாதெமியின் பரிசைப் பெ
தோடு, இப்பொழுது ருஷ்ய மொழி
வெளிவந்துள்ளது. அமரர் 'க
மறைந்து பத்தாண்டு பூர்த்தியா
இத்தருணத்தில், மேற்படி ரு
மொழிபெயர்ப்புப் பற்றி ஒரு ருஷ்ய
எழுதியுள்ள கட்டுரையை மகிழ்
யுடன் வெளியிடுகிறோம். —ஆசிரிய

இந்திய நூல்கள் சோவியத் நாட்டில் இரண்டு கோ
பிரதிகள் பிரசுரமாகியுள்ளன. ஏறக்தாழ எழுபது இந்
எழுத்தாளர்கள், கவிஞர்களின் படைப்புக்களான இந்நூல்
32 சோவியத் மொழிகளில் பெயர்க்கப்பட்டிருக்கின்றன
சோவியத் நாட்டில் இந்திய இலக்கியம் பெற்றுள்ள செ
வாக்கினையும் சோவியத் இந்தியவியலாளர்கள் மொழிபெய
பாளர்களாக ஆற்றியுள்ள அரும் பணியையும் இது தெள
படுத்துகிறது. அண்மைக் காலம்வரை, சோவியத் வாச
களுக்கு இந்தியாவின் பல தேசிய இலக்கியங்களைப் பற்
முழுமையாகத் தெரிந்துகொள்ள வாய்ப்பு இருக்கவில்
சமீபத்தில்தான் தமிழ், மலையாளம், தெலுங்கு, மராத்
குஜராத்தி, பஞ்சாபி மொழி நூல்கள் எங்கள் நாட்
மொழிகளில் பெயர்க்கப்பட்டுப் பிரசுரமாகிப் புத்தகக் கடை
களில் விற்பனைக்கு வரத் தொடங்கின.

ஜானகிராமன், தி. ஜ. ர., கி. வா. ஜகந்நாதன், அழகி
சாமி, புதுமைப்பித்தன் ஆகியோரின் சிறுகதைகள் இன்
இங்கு மிகவும் பிரபலமாகி விட்டன. வள்ளுவர் ''குறள்
ருஷ்யனில் உருவெடுத்து இங்கு அமோகச் செல்வாக்குடன்
விளங்குகிறது. மகாகவி சுப்பிரமணிய பாரதியாரின் கவிதை
களும் ருஷிய மக்களை மகிழ்வித்து வருகின்றன. பாரதியாரின்
கவிதைத் தொகுப்புக்குப் புத்தகக் கடைகளில் மிகுந்த கிராக்கி
இருந்து வருகிறது. பாரதியாரின் பெயரைச் சோவியத்
மக்கள் போற்றிப் புகழ்வதற்கு ஒரு காரணம் மாபெரும் அக்
டோபர் சோஷலிஸப் புரட்சிக்கு வாழ்த்துரைத்து வர
வேற்ற முதல் இந்தியக் கவிஞர் பாரதியாரே! 1917
''கலி வீழ்ந்தான்....கிருதயுகம் எழுக மாதோ!''
என்று பாடினார்.

அமரர் கல்கியின் ''அலைஓசை'' ருஷ்யனில் வெளி
வந்துள்ள முதலாவது தமிழ் நாவலாகும். இது
முக்கிய நிகழ்ச்சியாகக் குறிப்பிடத்தக்கது. அலை
ஓசையைச் சோவியத் இந்தியவியலாளர் அ. இப்ராகி

வி. ஷிரொக்கோவ்







டால் ருஷ்யனில் மொழிபெயர்த்திருக்கிறார். 7,000 பிரதிகள் வெளியிடப்பட்டுள்ளது. ல்கியின் பெயர் சோவியத் நாட்டில் நெடு ாட்களாகவே நன்கு அறிமுகமாகி யிருக் றது என்றாலும், அவரது படைப்பு ஆற்ற ப் பற்றிச் சோவியத் வாசகர்கள் ஓரளவு அறிந்து கொள்வதற்கு இன்றுதான் நல்ல ாரு வாய்ப்புக் கிட்டியிருக்கிறது. கல்கி ின் தலைசிறந்த ஆக்கம் ''அலை யோசை'' ன்பதாகச் சோவியத் இந்தியவியலாளர்கள் மதிப்பிடுகின்றனர். இந்த நாவில், 'கல்கி' டந்தகால வரலாற்றைச் சொல்லோவிய ாக வடித்துத் தந்து, தமது தாயகத்து மக்களுக்குத் தேசப் பற்றும் பெருமிதமும் திரும்படி செய்கிறார். மக்கள் தமது சொந்த ஆற்றலிலும் நெஞ்சுறுதியிலும் அசையாத நம்பிக்கை கொண்டு சுதந்திரத்துக்குப் போராடியதை விவரிக்கிறார். இந்த நவீனத் தின் தனிச் சிறப்பும் கருப்பொருளும் தேச பக்தியே என்று சோவியத் இந்தியவியலா ளர்கள் அபிப்பிராயம் தெரிவிக்கிறார்கள்.

ஃ ஃ ஃ

'அலையோசை' இந்திய மக்களின் விடுதலைப் போராட்ட காலத்தை வாசகரின் கண் முன் கொண்டு வந்து நிறுத்துகிறது. நவீன இந்திய வரலாற்றின் புகழ்மிக்க நிகழ்ச்சிகளை அறி முகம் செய்து வைக்கிறது. இந்திய மக்களை வாட்டி வதக்கிய பயங்கரப் பஞ்சத்தை, குறிப்பாக 1943ம் ஆண்டு வங்காளப் பஞ் சத்தை நமது நெஞ்சு பிளந்திடும் வகையில் ஆசிரியர் சித்திரித்திருக்கிறார். கடைசி அத்தி யாயங்கள் இந்திய நாட்டின் பிரிவினையைப் பற்றித் தெளிவாக எடுத்துச் சொல்கின்றன. இதில் வரும் நிகழ்ச்சிகளின் வீச்சைப் பார்க்கையில், இது இந்தக் காலத்துக்குரிய மாபெரும் காவியமாகவே அவரது சிந்தனை யில் உதித்துள்ளது என்பது தெளிவு. இந்திய வரலாறு, பண்பாடு இவற்றைப் பற்றி அலை ஓசை தெரிவிக்கும் தகவல்களையும் செய்திகளை யும் கருத்தில் கொண்டு மதிப்பிட் டால், இது ஒரு வகையில் சுருக்க மான கலைக் களஞ்சியமே யாகும்.

இதன் காரணமாகவேதான், இந்தியாவைப் பற்றி அதிகம் தெரியாதோருக்கு இந்த நாவல் சுவையும் பயனும் மிக்கதாக இருக்கிறது.

''அலையோசை''யின் மொழிபெயர்ப்பாளர் அலெக் இப்ராகிமோவ் திரு சோமசுந்தரத் திடமும் திரு சுப்பிரமணியத்திடமும் தமிழ் பயின்றவர். தமிழ் நாவல்களை ருஷ்யமொழி யில் பெயர்ப்பதில் செயலூக்கமுடன் பாடு பட்டு வருகிறார். இவர் மொழிபெயர்த்த புதுமைப் பித்தன், ரகுநாதன், மற்றும் பல தமிழ் எழுத்தாளர்களின் சிறுகதைகள் முன்பே சோவியத் யூனியனில் வெளியிடப் பட்டுள்ளன. இந்தச் சிறுகதைகள் சிலவற் றைத் தழுவி எழுதப்பட்ட வானொலி இசை நிகழ்ச்சிகளும் நடந்தேறின.

ஜெயகாந்தனின் 'வாழ்க்கை அழைக்கிறது' என்ற நாவலையும், இலங்கைத் தமிழ் எழுத் தாளர்களின் சிறுகதைகள் பலவற்றையும், இப்ராகிமோவ் மொழிபெயர்த்துள்ளார். இவை அச்சேறும் நிலையில் உள்ளன.

''யானை வரும் பின்னே, மணியோசை வரும் முன்னே'' என்ற தமிழ்ப் பழமொழியை இங்கு குறிப்பிடுவது பொருத்தமாயிருக்கும். ருஷ்யனில் வெளி வந்துள்ள முதலாவது தமிழ் நாவல் ''அலையோசை''யின் மணி யோசை சோவியத் நாட்டில் ஒலிக்கத் தொடங்கி இனி நிகழ இருக்கும் இலக்கிய உறவை அறிவிக்கிறது.



# சத்தியத்துக்காகத் தனித்தும் நிற்பவர்

ஃபிலிப் ஸ்ப்ராட்

மகாத்மா காந்தியின் முக்கியமான ஆலோசகர்களிலும், சகாக்களிலும் ஒருவரான ராஜாஜி சரித்திரத்தில் இடம் பெற்றவர். அதோடு தமது பெரும் தலைவரான காந்திஜியிடமிருந்தே பேதப்படுமளவுக்கு அவர் மனத்திட்பமும், தெளிவும் கொண்டிருந்தார் என்பதற்காக நினைவில் போற்றப்படுபவர்.

இரண்டாவது உலக யுத்தம் தொடங்கிய போது காங்கிரஸ் முக்கியமான, சிரமமான முடிவுகள் எடுக்க நேரிட்டது. அப்போது அதன் சொல்லும் செயலும் முரண்படலாயின. எனினும் ஏதோ ஒரு மார்க்கத்தில் தன்னையும் மீறி நிர்ப்பந்தப்பட்டாற்போல் அக்கட்சி இயங்கிற்று. இதன் பலனாக முதலில் ராஜ்ய மந்திரி சபைகள் ராஜிநாமாச் செய்தன. பிறகு 1940 – 41ல் தனி நபர் சத்தியாக்கிரகம் நடைபெற்றது. முடிவில் 1942ல் 'வெள்ளையனே வெளியேறு' என்ற இயக்கம் தோன்றியது. இவற்றுக்குக் காரணமான கொள்கையின் சிற்சில அம்சங்களை அவ்வப்போது பல தலைவர்கள் ஏற்க மறுத்தார்கள். எனினும் கடைசியில் எல்லோரும் அதை ஆதரிக்கத் தொடங்கினார்கள். அந்தப் பழைய காவல்நாயகர்களில் விதிவிலக்காக நின்ற ஒரே தலைவர் ராஜாஜி.

1940ம் ஆண்டில் பிரான்ஸ் தோல்விக்கு மேல் தோல்வியுற்று விழுந்து, இங்கிலாந்தில் சர்ச்சில் பிரதம மந்திரி பதவியைப் பெற்ற சமயத்தில் ராஜாஜியின் கருத்து வேற்றுமை வெளிப்படப் புலப்படலாயிற்று. மற்றவர்கள் இந்தியாவுக்குச் சுதந்திரம் வேண்டும் என்பதை வலியுறுத்தியபோது ராஜாஜி இந்தியாவுக்குப் பாதுகாப்பு வேண்டும் என்பதை வலியுறுத்தினார். மேலும் முஸ்லிம் லீகின் உள் சக்தியையும், அதற் சாதகமாக ராஜதந்திரம் பயனுவதை ராஜாஜி உணர்ந்திருந்தார். எனவே மு லிம் லீகுடன் ஓர் ஒப்பந்தம் செய்துகொள் வேண்டும் என்பதற்காகத் தொடர்ந்து முயற்சிகள் செய்தார். அவர் முன் நின் தொடங்கிய இந்தப் பணி ஒரு பலனை பெறவில்லை. அவரும் தனி நபர் ச துழையாமையில் சேர்ந்தார். ஆன 1942ல் கிரிப்ஸின் தூது தோல்வியடைந் பின் அவர் முன்னிலும் துணிச்சலாக முய சியைத் தொடங்கினார். அவரது பிரேரனை யில் சென்னையின் சட்டசபைக் காங்கிர கட்சி கூடி முஸ்லீம் லீகின் பிரிவினைக் கோர் கையைச் சில நிபந்தனைகளுடன் ஏற்று கொள்வதெனத் தீர்மானித்தது. இத மேல் லீகுடன் சேர்ந்து தேசிய சர்க்கார் அமைப்பதற்காகப் பேச்சு வார்த்தை நடத் வேண்டும் என்றும் சென்னை சட்ட சபை கட்சி 'வோட்' செய்தது. இந்த யோசனையை ஏற்க அகில இந்தியக் காங்கிரஸ் கமிட் மறுத்துவிட்டது. எனவே சென்னைச் சட்ட சபைக் கட்சி தீர்மானத்தை வாபஸ் பெற்றது ராஜாஜி காங்கிரஸிலிருந்து ராஜிநாமா செய்தார்.

சில மாதங்களுக்குப் பின் ஸ்ரீ கே. சந் தானம் ஒரு சிறு புத்தகம் வெளியிட்டார். ராஜாஜியின் கருத்தையே இப்புத்தகம் வெளியிட்டதாகக் கருதப்படுகிறது. இந்நூலில் அவர், ''சட்ட சபையின் ஆட்சியுரிமையை ஒப்புக்கொள்ளும் பிரதேசங்கள் தவிர மற்றவற்றுக்கு அச் சட்டசபை மூலம் சட்ட சாஸனம் நிறைவேற்றுவது இயலாத காரியம்.... சரித்திரம் என்ற பிரவாகம் கொண்டு

---

ராஜாஜி எத்தகையவர் என்பதை ஒரு வார்த்தையில் கூறுமாறு கேட்டால் நான் இதைத் தான் சொல்வேன்: 'அவர் இணையற்றவர்.' ஒருவரோடு அவர் இணங்கும் போதும் இணையற்றவர்; இணங்காமலிருக்கும்போதும் தமக்கு இணையாக இன்னொருவர் இல்லாதவர். சிந்தனையில் இணையற்றவர் அவர்; செயலிலும் அதேபோல் இணையற்றவர். அவருடைய அன்பையும் நல்லெண்ணத்தையும் நாற்பது ஆண்டுகளுக்கு மேலாகச் சிறு முறிவு கூட இல்லாமல் நான் அடைந்து வந்திருப்பது என் பாக்கியமாகும். நாங்கள் நோக்கும் கோணம் மாறுபட்டதுண்டு. எனினும் ஒரு கண நேரம் கூட எங்களது நட்பு சிறிதும் குறைந்ததில்லை. ராஜாஜிக்காக நான் நம்பிக்கையுடன் பிரார்த்திப்பதெல்லாம் இதுவே: அவர் இன்னும் எத்தனையோ ஆண்டுகள் வாழ வேண்டும். வாழ்ந்து நம் தாய்நாட்டுக்கு ஒப்பற்ற தலைமையைத் தந்து வழிகாட்டி உதவ வேண்டும்.



—காலஞ்சென்ற ராஜன்பாபு (1962 'கல்கி' ராஜாஜி மலரில்)



'ராஜாஜிக்கும் நேருஜிக்
இடையே இருந்த
த்து வேற்றுமை நமக்கு
ருகத் தெரியும். எனி
ம் பல்லாண்டுகளுக்குமுன்
ங்கிரஸில் இரண்டு பிரி
ள் தோன்றியபோது
ரு அவர்கள் ராஜாஜி
ர் தலைமையின் கீழ் தமது
தையாகிய மோதிலால்
ருவையே எதிர்த்திருக்
ஏர்! அரசியல் கருத்துக்கள்
படியாயினும் நேருஜிக்
ம் ராஜாஜிக்கும் இடையே பரஸ்பரமாக அன்பும் மதிப்பும் நிலவி வந்தன. சென்னை
ல் ராஜாஜியின் உருவப் படத்தைத் திறந்துவைத்த நேருஜி, ''நான் அவரது கருத்துகளை
முழுவதும் ஏற்றுக் கொள்ளாமலிருக்கலாம். என்றாலும் எவ்விஷயத்திலேனும் எனக்குக்
குழப்பம் ஏற்பட்டால் ராஜாஜியைத்தான் நான் கலந்தாலோசிப்பேன்'' என்று கூறினார்.
ராஜாஜி கடைசியில் பாரதத்தின் உள்துறை மந்திரிப் பொறுப்பை விட்டுத் தில்லியிலிருந்து
மிழகம் திரும்பியபோது அதற்குச் சிறிதும் மனமொப்பாதவர் நேருஜி. 'ராஜாஜி பதவியி
ருந்து விலகிவிட்டாலும் அவருடைய புத்திமதி எங்களுக்கு எப்போதும் கிடைக்குமென
ம்புகிறேன்' என்று கூறினார். 1954ல் ராஜாஜி மந்திரி சபையைக் குறைகூறிச் சில புண்ணி
ஆத்துமாக்கள் 'கையெழுத்து இயக்கம்' நடத்திப் பிரதமர் நேருஜிக்கு மகஜர் அனுப்பி
வைத்தபோது அவர் அடைந்த அருவருப்புக்கு எல்லையேயில்லை. அவரது அன்பு இதயத்தைப்
பூரணமாகப் புரிந்து கொண்ட ராஜாஜி, ''பண்பாளர்களில் தலைசிறந்தவரை இழந்தோம்''
ன்று நேருஜியின் மறைவின்போது துக்கித்தார். இவ்வாண்டு தமது பிறந்த தின விழாவில்
ராஜாஜிக்கு விருப்பமில்லாததற்கு ஒரு முக்கியமான காரணம் அவர் நேருஜியின் மறைவுத்
யரிலிருந்து இன்னும் விடுபடாததுதான்.

---

பந்து தன்னும் தடைகளை நம்முடைய அபிலாஷைகளால் மந்திரம் போட்டு அகற்ற முடியாது.... அஹிம்சைக் கிளர்ச்சியும், சத்தியாக்கிரகமும் எவ்வளவு தொலைவுக்கு நம்மை இட்டுச் செல்ல முடியுமோ அவ்வளவுக்கு இட்டுச் சென்றாயிற்று... 'நம்முடைய முயற்சியாலேயே நாம் சுதந்திரம் பெற்று, பெற்ற சுதந்திரத்தைக் காப்பாற்றுவோம்' என்றுசொல்லுவது ஒரு நாகரிகமாகிவிட்டது; ஆனால் நடைமுறையில் காரியம் சாதிக்க வேண்டுமெனில் நாம் சுதந்திரத்தைப்பெற்றுக் காப்பதற்குச் சில வலிமை வாய்ந்த நாடுகளின் நட்பும், அநுதாபமும் தேவை... எனவே (யுத்தத்தின்) இரு தரப்பில் ஒன்றுடன் சேர்ந்து அவர்களின் கஷ்ட நஷ்டங்களில் பங்கு கொண்டு அவர்களின் நட்பைப் பிற்காலத்துக்கு உறுதிப்படுத்திக் கொள்வதே இப்போது காரிய ரீதிக்கு உகந்த கொள்கை.... இரண்டு தீமைகளில் எது குறைந்ததோ அதைத் தேர்வு செய்ய வேண்டும்'' என்று கூறியிருக்கிறார்.

இதுபோன்ற கருத்துக்கள் விரோதத்தை மூட்டின. ஆனால் அன்று காங்கிரஸ் திட்டத்துக்கு இணங்காதவர்கள் இருபதாண்டுகளுக்குப் பின் இன்று, அப்போது தாங்கள் எடுத்த நடவடிக்கை விவேகமானதே என திருப்பணமானதாகக் கருதுவார்கள்.

பிரிட்டனை விரோதியாகச் செய்து கொள்ளாமலே இந்திய விடுதலையை வலியுறுத்துவதற்காகத்தான் 1940க்கு முன்பெல்லாம் சத்தியாக்கிரகம் உத்தேசிக்கப்பட்டது. 1920 – 22லும், 1930–34லும் நடந்த சத்தியாக்கிரகங்கள் இவ்வாறுதான் நிகழ்ந்தன. 1942ல் உத்தேசிக்கப்பட்ட அநாவசிய எதிர்ப்பு பகை உணர்ச்சியைத் தான் உண்டுபண்ணிற்று. அப்போது நடத்திய சத்தியாக்கிரகத்தைப் பிரிட்டிஷ் சர்க்கார் தொழிலாளரின் வேலை நிறுத்தம் போலவே கருதிற்று. 'சமாதான காலங்களில் சத்தியாக்கிரக நடவடிக்கைக்காக வருந்த வேண்டுமெனினும், அதில் உள்ள நியாயத்தை ஒப்புக் கொள்ளலாம்; ஆனால் மகாயுத்தத்தின் போது இவ்வாறு எதிர்ப்பது பொறுப்பற்ற செயல்; அனுமதிக்க வொண்ணாத காரியம்' என்றே பிரிட்டிஷார் கருதினர். (ஏன், அதுகாறும் காந்திஜியே அப்படித்தான் எண்ணினார்.)

நாம் சுதந்திரம் பெற்ற பின்னும் பிரிட்டன் பாகிஸ்தானுடன் நட்பாக இருந்து கொண்டு நம் விஷயத்தில் விரோத பாவம் காட்டுவது மக்களுக்கு ஒரு புதிராக உள்ளது. பிரிட்டன் இவ்வாறு நடக்கக் காரணம் மேற்சொன்னவாறு அவர்கள் மகாயுத்தத்தில் ஈடுபட்டிருந்த போது நாம் 'வெள்ளையனே வெளியேறு' என்று இயக்கம் நடத்தியதும், நேச நாட்டுப் படைகளுக்கு எதிர்த்து சுபாஷ் போஸ் இந்திய தேசியப் படையை அமைத்ததும்தான். இவற்றை இங்கிலாந்து இன்னமும் மறக்கவில்லை. இவ்விஷயங்கள் நம்பால் அமெரிக்கரின் மனோபாவத்தையும் ஓரளவுக்குப் பாதித்திருக்கக் கூடும்.

ராஜாஜியின் கருத்தை அநுசரித்து, காங்கிரஸ் 1940ம் ஆண்டிலோ, 1942ம் ஆண்டிலோ லீகுடன் சமரஸம் செய்து கொண்டிருந்தால் தேசப் பிரிவினையைத் தடுத்திருக்கலாம். ஏனெனில், அச்சமயத்தில் பாகிஸ்தான் கோரிக்கை என்பது வெறும் புரளியாகவே இருந்தது. லீகும் பலவீனமாக இருந்த காலம் அது. சிறிது விட்டுக் கொடுத்திருந்தால் அதைக் காங்கிரஸ்



**"ராஜாஜியின் சந்திப்பு என்னைப் பண்படுத்திய மகத்தான சக்திகளில் ஒன்று." — கென்னடி**

கட்டுப்படுத்தி யிருக்க முடியும். யுத்த காலத்தில் இயக்கம் ஆரம்பித்துச் சிறை புகாமல் ராஜாஜியின் யோசனையை ஏற்றிருந்திருந்தால் மந்திரி சபை அமைத்து அரசாங்க நிர்வாகத்தில் பிரவேசித்திருக்கும். ஆனால் காங்கிரஸ் தலைவர்கள் மாற்று வழியைப் பின்பற்றிச் சிறை புகுந்தார்கள். எனவே யுத்த காலம் முழுவதிலும் லீக் எவ்வித எதிர்ப்பும் கட்டுப்பாடும் இல்லாமல் வளர்ச்சியடைந்தது. முஸ்லிம்கள் மட்டுமே தங்களுக்கு நண்பர்கள் எனக் கருதிய பிரிட்டிஷாரும் லீகின் வளர்ச்சிக்கு உதவி புரிந்தனர். 'வெள்ளையனே வெளியேறு' என்று ஓர் அந்நிய இனத்தின் மீது தொடங்கிய இயக்கம் முஸ்லிம்களின் மனத்தை இந்தியர் விஷயமாகக் கல்லாக்கிற்று. சுருங்கச் சொன்னால் யுத்தத்தில் ஈடுபட்டுப் பிரிட்டனுக்கு உதவாமல் அச்சமயத்தில் எதிர்ப்புத் தந்தது ஒரு பயங்கரமான தவறு என்று காலக்கிரமத்தில் நிரூபணமாயிற்று. இம்மாதிரி நடக்கும் என்று தீர்க்கதரிசனத்துடன் கண்ட ஒரே காங்கிரஸ் தலைவர் ராஜாஜி.

நேருஜியும் ராஜாஜியும் பல முறை எதிரெதிர் கட்சிகளில் இருந்தாலும் அவர்கள் பரஸ்பர நேயமும் மரியாதையும் கொண்டிருந்தனர். காந்திஜியின் இடத்தை நேருஜி பெற்ற பின், முன்பு காந்திஜிக்கு மாறாக இயக்கம் நடத்துவது எவ்வளவு சிரமமாக இருந்ததோ, அதே அளவுக்கு நேருஜியை எதிர்த்து இயக்கம் நடத்துவதும் ராஜாஜிக்குச் சிரமமாயிருந்திருக்கும். தம்மை விட வயதில் குறைந்த யாரேனும் இந்த எதிர்ப்புப் பணியைச் செய்யக் கூடாதா என்றே அவர் எதிர்பார்த்திருக்க வேண்டும். ஆனால் இந்தியப் பொதுமக்களுக்கு, இத்தகைய பணி புரியத் தமது புகழை நிலைநாட்டிக்கொண்ட ஒரு பெருந் தலைவர் தேவையா யிருந்தது. அந்தத் தேவையின் அழைப்பை ராஜாஜியால் மறுக்க முடியவில்லை.

சில அம்சங்களில் அவரது புதிய எதிர் இயக்கம் அவருடைய யுத்த காலத் திட்டத்தின் தொடர்ச்சியேயாகும். 'சரித்திர என்ற பிரவாகம் கொண்டு வந்து தள்ளு தடையை மந்திரம் போட்டு நிறுத்திவிடலாம்' என்று சில சித்தாந்திகள் கருதுவதைத் தான் அவர் மீண்டும் எதிர்க்க வேண்டியுள்ளது. மக்களின் மனோபாவம் என்பது எளிதில் மாற்றமுடியாத கடினமான யதார்த்த நிலைமையாகும். சொத்துரிமை, பொருளாதார அமைப்பு இவற்றில் மிகவும் மாறுபட்ட புதிய முறைகளை மக்களால் எளிதில் பின்பற்ற இயலாது. இம்மாதிரி புதிய மாற்றுக் கருத்துக்களை மக்களிடம் பிரசாரம் செய்வதால் அவர்கள் இக் கொள்கைகளைத் தங்கள் மனோபாவத்துக்கு ஏற்பத் திரித்துக் கொள்வார்களேயன்றி, சித்தாந்திகளின் உத்தேசத்தைப் புரிந்து கொள்ள மாட்டார்கள்

உலகத்தில் இந்தியா தனது தனிப் பலத்தில் நிற்க முடியாது என்று யுத்த காலத்தில் தாம் கூறியதையே இப்போது ராஜாஜி மீண்டும் தொடர்ந்து கூறுகிறார். ஸ்ரீ சந்தானத்தின் சிறு புத்தகம், ஜெர்மனியும் ஜப்பானும் தங்களது ராணுவக் கொள்கையால் தமது ஆன்மாவையே அழித்துக் கொள்வதாகக் கூறிற்று. அதே நிலையில் தான் இன்று சீனாவை எதிர்க்கும் நாமும் இருக்கிறோம். அன்று எப்படி காங்கிரஸிடம் ஆட்சேபணை பலனளிக்கவில்லையோ அதே போலத் தான் இன்றும் சீன அபாயத்தைச் சமாளிப்பதில் ராஜாஜியின் கருத்து ஏற்றுக் கொள்ளப்படவில்லை. நாட்டின் நன்மையைக் கருதி உயர்ந்த இலட்சியங்களின் மீது செய்யும் ஆட்சேபணையின் கதி இது. அன்று போலவே இன்றும் இரண்டு நிலைமைகளில் குறைந்த நிலைமையைத் தேர்ந்தெடுத்து, ஒரு வல்லரசுக் கோஷ்டியுடன் சேர்ந்து, அவர்களின் கஷ்ட நஷ்டங்களில் பங்கு கொண்டு, எதிர்காலத்தில் அவர்களின் நட்பை உறுதி செய்து கொள்வதுதான் முறை.

இச்சம்பவங்களை யெல்லாம் எண்ணிப் பார்க்கும்போது நான் காலம் சென்ற எம். என். ராயைத்தான் நினைவு கொள்கிறேன். இந்தியா கவனிக்காமலே விட்ட பெரு மக்களில் அவர் ஒருவர் என்பது என் கருத்து. காங்கிரஸின் யுத்தக் கொள்கையை எதிர்த்துத்தான் அவரும் அதிலிருந்து ராஜிநாமாச் செய்தார். போரில் இந்தியா ஜனநாயக சக்திகளுக்கு வெளிப்படையான ஆதரவு தந்திருக்க வேண்டும் என்பது அவர் கருத்து. ராய் அவர்கள் தத்துவ ரீதியில் சிந்தித்துத் தமது எண்ணத்தைக் கடுமையான எழுத்தில் வெளிப்படுத்தினார். ராஜாஜி இந்திய மரபுக்கு ஒவ்வச் சிந்திக்கிறார்; எளிமையாக எழுதுகிறார்; மனத்தைக் கவருமாறு எழுதுகிறார். ஆனால் இருவரின் முடிவுகளும் பெரும்பாலும் ஒன்றே; ஏனெனில் இருவரும் நீண்ட எதிர்கால திருஷ்டி கொண்டவர்கள்; இருவரும் அதிகார பலத்துக்கு அஞ்ச மறுப்பவர்கள்; யதார்த்த நிலையின் தேவையை வெற்று வார்த்தைகளால் நிரப்பாதவர்கள்.



# பூரிக்குள்ளே என்ன இருக்கு?

ஒன்றுமே இல்லையே !

அப்படியா ! ...... ஆனல் அது சூரியன் மார்க் கோதுமைப் பொருள்களில் தயாரிக்கப்பட்டிருந்தால் அதில் கோதுமையின் பூரண போஷாக்கு சத்துக்கள் நிறைந்திருக்கும்.

சூரியன் மார்க் மைதா, சூஜி, ஆட்டா கிழக்கு நாடுகளிலேயே முதன்முதலாக நிறுவப்பட்ட நியுமாடிக் மாவு மில்லில் கைபடாமல் சுகாதார முறையில் தயாரிக்கப்படுகின்றன.

சூரியன் மார்க் கோதுமைப் பொருள்களில் கோதுமையின் உணவுச் சத்துக்கள் செறிந்துள்ளன.



## சூரியன் மார்க்
## மைதா, சூஜி, ஆட்டா

தயாரிப்பாளர்கள் :

## செஞ்சுரி ப்ளவர் மில்ஸ் லிட்.

330, தம்பு செட்டித் தெரு, சென்னை-1. போன் : 21043-44-45
தந்தி : "MATHOORAN"

EP-CFM-7

# ராம்தீர்த் பிரம்மி ஆயில்

(ஸ்பெஷல் நெ. 1) (ரிஜிஸ்டர்டு)



கூந்தல் உதிர்வதையும், பொடுகையும் தடுத்து கேசத்திற்கு கரு நிறத்தையும் பளபளப்பையும் அளிக்கும் ஓர் ஒப்பற்ற கூந்தல் தைலம். பல உயர்ந்த மூலிகைகளைக் கொண்டு தயாரிக்கப்பட்டது. மூளைக்குக் குளிர்ச்சி யளித்து, ஞாபக சக்தியை அதிகரித்து, கண் எரிச்சலையும் அடிக்கடி ஏற்படும் தலைவலியையும் போக்கி நிம்மதி யான நித்திரையை அளிக்கிறது.

## யோகாசனப் படம்

எங்கள் யோகாசனப் படத்தில் காட்டியுள்ளவாறு ஆசனங்களை முறைப்படி செய்து வந்தால் நீங்கள் உடல் வலிவு பெற்று ஆரோக்கியமாக வாழ்வீர்கள்

விலை ரூ. 3/- (தபால் செலவு உள்பட)

**SHRI RAMTIRTH YOGASHRAM**
**DADAR. BOMBAY-14**

மதராஸ் டிப்போ : 25, நைனியப்ப நாயக்கன் தெரு, மதராஸ்-3

---



# பாலுஸேரி பெனிபிட் சிட் பண்டு
## பிரைவேட் லிமிடெட்

"பாலுஸேரி பில்டிங்ஸ்"

3, சிங்கராச்சாரி தெரு, திருவல்லிக்கேணி
தபால் பெட்டி நெ. 414, மதராஸ்-5
தந்தி : 'EVERMANS' போன் : 65834

சேரக் கடைசி தேதி 17-12-1964 முதல் ஏலத் தேதி 19-12-1964

**25 மாதங்கள் | மாதாந்திரச் சீட்டுகள் (3 வது சனிக்கிழமை ஏலங்கள்) | 25 அங்கத்தினர்கள்**

| வகுப்பு | மாதச் சந்தா | சீட்டுத் தொகை | வகுப்பு | மாதச் சந்தா | சீட்டுத் தொகை |
|---|---|---|---|---|---|
| B | ரூ. 100 | ரூ. 2,500 | E | ரூ. 20 | ரூ. 500 |
| C | ரூ. 50 | ரூ. 1,250 | F | ரூ. 15 | ரூ. 375 |
| D | ரூ. 25 | ரூ. 625 | G | ரூ. 10 | ரூ. 250 |

**40 மாதங்கள் நீண்டகால ஏலச் சீட்டுகள் 40 அங்கத்தினர்கள்**

ஏலத் தேதி : 27-12-1964

| வகுப்பு | மாதச் சந்தா | சீட்டுத் தொகை |
|---|---|---|
| A | ரூ. 500/- | ரூ. 20,000/ |
| B | ரூ. 250/ | ரூ. 10,000 |

விலாசம் தெளிவாக எழுதிக் கேட்பவர்களுக்கு எங்கள் விதிகள் இலவசமாக அனுப்பப் படும். சீட்டில் அங்கத்தினர்களைச் சேர்த்துக் கொள்ளும் உரிமை பண்டைச் சேர்ந்தது.
(போர்டார் உத்திரவுப்படி) எம். வி. சுப்ரமணியம், மானேஜிங் டைரக்டர்

இதர கிளைகள் : புது டெல்லி * பம்பாய் * பெங்களூர் * கல்கத்தா

**எங்கள் சேவை உங்களுக்குத் தேவை**

பேராசிரியர் 'கல்கி' அவர்களின் ''கள்வனின் காதலி''க் கதை டில்லியில் நாடகமாக அரங்கேற்றப்பட்டபோது தலைமை வகித்த ராஜாஜி, ''என்னைக் கேட்டுக்கொண்டும் எனக்குத் தெரிந்தும்தான் 'கல்கி' எல்லாம் செய்கிறார் என்று பலர் எண்ணுகிறார்கள். உண்மையில் அப்படியில்லை. அவர் கதைகள் பலவற்றை நான் படித்ததில்லை. ஆனால் அவர் எழுதுவது எல்லாம் நன்றாக இருக்கும் என்ற நம்பிக்கை எனக்கு உண்டு'' என்றார்.

ராஜாஜியின் நம்பிக்கையைப் பேராசிரியர் 'கல்கி' அவர்கள் நூற்றுக்கு நூறு சதவிகிதமும் நிறைவேற்றி வைத்தார்கள். சரித்திரத் தொடர் கதையானாலும், சமூகத் தொடர்கதையானாலும், சிறுகதையானாலும், பெருங் கதையானாலும், சோகமானாலும், ஹாஸ்யமானாலும், கற்பனையானாலும், நிகழ்கால அரசியலானாலும் அவர் எழுதியது எல்லாம் அற்புதமாக இருந்தன. இவை எல்லாவற்றிலும் அதி அற்புதமாக இருந்தது என்னவெனில் அவர் ராஜாஜியைப் பற்றி அந்தரங்க பக்தியுடன் எழுதிய எழுத்துத்தான் என்று கூறலாம். இப் பத்திரிகையில் அவர் எழுதிய அந்த உயிருள்ள எழுத்தில் பல பகுதிகளை இங்கு தொகுத்து அளிக்கிறோம். இன்றைய நிலைக்கு இவற்றில் பல எவ்வளவு ஆணித்தரமாகப் பொருந்துகின்றன என்பதைப் பார்க்கும் போது, தலைவருக்கு உள்ள தீர்க்கதரிசனம் பேராசிரியருக்கும் குருப் பிரசாதமாகக் கிடைத்ததோ என்று வியக்கத் தோன்றுகிறது.

— ஆசிரியர்

# பேராசிரியர் கண்ட பெருந்தலைவர்

நண்பர் டி. கே. சி. அவர்கள் அடிக்கடி சொல்வார்கள்: ''இப்போதெல்லாம் இராமாயணம் படிக்க ஆரம்பித்தேனானால், இராமர் என்ற பெயர் வந்ததும் ராஜாஜியின் உருவம் எதிரில் வந்து நிற்கிறது'' என்று.

அத்தகைய ராஜாஜியே இராமாயணம் படித்து, அதற்குப் பாஷ்யமும் சொல்கிறார் என்றால், அதைக் கேட்பதற்காகத் திருச்சி சிறைக்குத்தானா போகலாம்? அந்தமானுக்குக் கூடப் போகலாமே! ('மூன்று மாதம் கடுங் காவல்'; அக். 16, 1941)

## சேற்றில் புதைந்த வண்டி

ஜில்லா போர்டுகளும் முனிசிபாலிடிகளுமே சொர்க்கம் என்று நினைப்பவர்களும், குறுகிய புத்தி உள்ளவர்களும், தேச நலத்தை விட சொந்தவைஷம்யங்களையே பெரிதாய்க் கருதுகிறவர்களும் தமிழ் நாட்டுக் காங்கிரஸின் நிர்வாகத்தைத் தற்சமயம் பற்றிக் கொண்டிருக்கிறார்கள். அப்படிப்பட்டவர்கள் சேர்ந்து தமிழ் நாட்டுக்கு ஒப்பற்ற பெருமையளித்தவரும், தியாக மூர்த்தியுமான தலைவரைத் தூஷித்து, அவர் மேல் பழி சுமத்திக் காங்கிரஸிலிருந்து வெளியேற்றி விட்டார்கள். இதனுடைய பலனை அவர்களே அனுபவித்து, பச்சாதாபப்படும் காலம் வரும் என்பதில் நமக்கு எள்ளளவும் சந்தேகமில்லை.

அதுவரையில் தமிழ் நாட்டில் உள்ள தேச பக்தர்கள் — தேசத் தொண்டர்களின் நிலைமை என்ன? அவர்களுடைய மனத்தில் போராட்டம் ஏற்படுவது இயல்பு. இத்தனை நாளும் தமிழ் நாட்டில் காங்கிரஸ் என்றால் ராஜாஜி, ராஜாஜி என்றால் காங்கிரஸ் என்ற எண்ணம் எல்லோருடைய மனத்திலும் வேரூன்றி இருந்தது. இப்போது காங்கிரஸ் வேறு—ராஜாஜி வேறு என்றாகி விட்டது. இந்நிலைமையில் காங்கிரஸிலிருந்து கொண்டு தொண்டு செய்வதா, ராஜாஜியைப் பின்பற்றி வெளியேறுவதா என்ற சந்தேகம் அநேகருக்கு உண்டாகக் கூடும்.

தற்சமயம் தமிழ்நாட்டில் தேச பக்தர்கள் காங்கிரஸுக்குச் செய்யக் கூடிய பெரிய தொண்டு அதை விட்டு வெளியேறுவதுதான் என்று சொல்ல வேண்டும்.

ஏனென்றால், தமிழ் நாட்டில் காங்கிரஸானது அதன் காங்கிரஸ் தன்மையை இழந்து விட்டது. காங்கிரஸின் உயிர்த் தத்துவம் என்று சொல்லக் கூடியது பேச்சு சுதந்திரமும் அபிப்பிராய சுதந்திரமுமாகும்......அப்படி இருபது வருஷத்துக்கு மேலாக எந்தப் பேச்சு சுதந்திரத்துக்காகக் காங்கிரஸ் போராட்டம் நடத்தியதோ, எந்த ஜீவாதார உரிமையை நிலைநாட்டுவதற்காகத் தேசத் தலைவர்களும் தொண்டர்களும் அளவிலாத கஷ்ட நஷ்டங்களை அனுபவித்து மகத்தான தியாகங்களைச் செய்தார்களோ, அந்தப் பேச்சுச் சுதந்திரத்தை இப்போது தமிழ் நாட்டுக் காங்கிரஸ் நிர்வாகிகள் மறுத்திருக்கிறார்கள். வேலியே பயிரை மேய்வது என்னும் பழமொழி தமிழ் நாட்டுக் காங்கிரஸ் விஷயத்தில் உண்மையாகி விட்டது. ஆகவே, தமிழ் நாட்டில் இப்போது உண்மையான காங்கிரஸ் தொண்டு செய்வதற்கு மார்க்கம் அதை விட்டு வெளியேறுவதேயாகும்.

காங்கிரஸிலிருந்து வெளியேறி விட்டால் தேசத் தொண்டே செய்ய முடியாதென்பதில்லை. மகாத்மா காந்தி பல வருஷ காலம் காங்கிரஸின் நாலணா அங்கத்தினராய்க் கூட இல்லாமலிருந்திருக்கிறார். அதை அவர் பெருமையுடன் சொல்லிக் கொண்டதுமுண்டு. அவ்விதமே தற்போது தமிழ் நாட்டில் ''நான் காங்கிரஸின் நாலணா அங்கத்தினன் கூட இல்லை'' என்று சொல்வது பெருமைக்குரிய காரியமாகி விட்டது. காங்கிரஸில் இல்லாமலும் சிறந்த முறையில் தேசத் தொண்டு செய்யலாம் என்பதை நிரூபிக்க வேண்டிய அவசியம் நேர்ந்து விட்டது.

''ஸ்தாபனம் ஒன்று இல்லாமல் தேசத் தொண்டு எப்படித் திறமையாகச் செய்ய முடியும்?'' என்று பலருக்குத் தோன்றக்கூடும். ஒரு தனி ஸ்தாபனம் அவசியமா, அவசியமாயிருந்தால் அதை எப்போது எந்த விதத்

தில் ஆரம்பிப்பது என்று முடிவு செய்யும் பொறுப்பைத் தலைவர் ராஜாஜிக்கே விட்டு விடலாமென்று நாம் கருதுகிறோம்.

ராஜாஜி தாற்காலிகமாக ஒரு தனி ஸ்தாபனம் அவசியம் என்று கருதி ஆரம்பித்தாராஞல், அதில் தமிழ் மக்கள் ஒருமுகமாகச் சேர்வார்கள் என்பதில் சந்தேகமில்லை.

''ராமர் இருக்குமிடம் அயோத்தி'' என்பது போல் ராஜாஜியின் தலைமையில் ஆரம்பிக்கும் ஸ்தாபனமே, தமிழ் நாட்டில் காங்கிரஸ் ஆகிவிடும்.

—'தலையங்கம் கல்கி': ஜூலை 1942

## தியாக சிகரம்

சென்ற இருபத்தைந்து வருடங்களாக ராஜாஜியின் வாழ்க்கை தியாக வாழ்க்கையாக இருந்து வந்திருக்கிறது. 1920ம் ஆண்டில் அவர் காந்திஜியின் ஒத்துழையாமை இயக்கத்தில் ஈடுபட்டு ஆயிரக் கணக்கான வருமானம் தந்து வந்த வக்கீல் தொழிலை விட்டார். அன்று முதல் தேசத் தொண்டுக்காகத் துறவு வாழ்க்கையை மேற்கொண்டார். 1921ம் ஆண்டில் தமிழ் நாட்டில் முதன் முதலாகச் சட்டத்தை மீறிச் சிறை புகுந்தார். அது முதல் ஆறு தடவை சிறை வாசம் செய்திருக்கிறார். 1923ம் ஆண்டில் திருச்செங்கோடு காந்தி ஆசிரமத்தை ஸ்தாபித்தார். சுமார் பத்து வருஷ காலம் அங்கே ஒரு சிறு குடிசையில் வாழ்க்கை நடத்தி வந்தார். தமிழ் நாட்டு முன்னோர்களின் புண்ணியமும் தவமும் உருவெடுத்து வந்தது போல் ராஜாஜியின் வாழ்க்கை இருந்து வந்திருக்கிறது. அந்தப் புனிதமான தியாக வாழ்க்கையின் சிகரத்தை இப்போது அவர் அடைந்திருக்கிறார்.

'கண்ணன் காட்டிய வழி'யை மற்றவர்களுக்கு எடுத்துக் காட்டிய ராஜாஜி தமது சொந்த வாழ்க்கையில் அந்த வழியை இடைவிடாமல் கடைப்பிடித்து வந்திருக்கிறார். ''கடமையைச் செய்; பலனை எதிர்பாராதே!'' என்ற பகவானுடைய வாக்கைப் பரிபூரணமாக நிறைவேற்றி வந்திருக்கிறார். இருபது வருஷமாக ஓய்ச்சல் ஒழிவின்றித் தேசத் தொண்டு செய்திருக்கிறார். தினம் இருபத்து நான்கு மணி நேரத்தில் இருபது மணி நேரம் வேலை செய்து வந்திருக்கிறார். தேக சிரமத்தை ஒரு நாளும் அவர் பாராட்டியதில்லை. தோல்விகளைப் பொருட் படுத்தியதில்லை. எதிர்ப்புகளினால் உற்சாகம் குன்றியதில்லை. பதவிகளை விரும்பியதில்லை; பொறுப்பு வகிக்கப் பின்வாங்கியதுமில்லை.

'கண்ணன் காட்டிய வழி'யைப் பின்பற்றியே இன்று ராஜாஜி இதுவரையில் தாம் செய்திருக்கும் தியாகங்களிலெல்லாம் மகத்தான தியாகத்தைச் செய்திருக்கிறார்.

காங்கிரஸ் ஸ்தாபனத்திலிருந்து ராஜாஜி விலகிக் கொள்ளத் தீர்மானித்திருப்பது அத்தகைய தியாக சிகரமாகும். கால் நூற்றாண்டாக எந்த ஸ்தாபனத்தை வளர்ப்பதற்காக அவர் அரும் பாடுபட்டு இரவு பகல் உழைத்தாரோ அந்த ஸ்தாபனத்தை விட்டு நீங்குவதென்பது லேசான காரியமல்ல. பெற்று வளர்த்த பிள்ளையைப் பறிகொடுப்பதற்கு வேண்டிய மனத்துறவும் வைராக்கியமும் அதற்கு வேண்டும்.

கேவலம் பதவிகளையும், ஸ்தானங்களையும் ராஜாஜி துச்சமாக மதிப்பவர்.... மந்திரி வேலையை நினைத்து நாக்கில் ஜலம் சொட்டிக் கொண்டிருந்த காங்கிரஸ் நிர்வாகிகள் சிலர் மேற்படி கட்சித் தலைமையை மிகவும் பெரிதாக நினைத்து. ''ராஜாஜி ராஜினாமாச் செய்ய வேண்டும்!'' என்று ஓயாமல் அலறிக் கொண்டிருந்தார்கள். இந்தக் கூச்சலைக் கேட்டு ராஜாஜி மனத்திற்குள் சிரித்துக் கொண்டிருப்பார் என்பதை நாம் அறிவோம். ஏனெனில், அவருக்கு அப்பதவியில் எவ்விதப் பற்றும் கிடையாது. ஓட்டாஞ் சல்லியையும் வெள்ளி ரூபாயையும் ஒன்றாக எண்ணிய ராமகிருஷ்ண பரமஹம்ஸரின் மனோநிலையைப் பதவி விஷயத்தில் அடைந்தவர் நமது தலைவர். தேசத் தொண்டு செய்வதற்குச் சாதனமாயிருந்தால்தான் பதவி, இல்லாவிட்டால் பாரம் என்று நினைப்பவர் நமது தலைவர். அவருக்குப் பதவியை விடுங்கள் என்று இன்னொருவர் சொல்லவா வேண்டும்? (ஜூலை 16, 1942)

பெருந்தலைவரும், பேராசிரியரும்



## பதவி மயக்கம்

''ராஜாஜி பதவிக்கு ஆசைப்பட்டுக் கொண்டு வெள்ளைக்காரர்களோடு ஐக்கியமாகி விட்டார்.''

## அன்பு இதயம்!

ஆச்சாரியாரை நன்கு அறியாதவர்கள் சிலர் அவர் சிறந்த அறிவாளி என்றும் ஆனால் இருதயமற்றவர் என்றும் சொல்லக் கேட்டிருக்கிறோம். இதைப் போன்ற அறியாமைக் கூற்று வேறு ஒன்றும் இல்லை என்று சொல்லலாம். ஸி. ஆர். எவ்வளவு அறிவிற் சிறந்தவரோ அவ்வளவு அதிகமான இருதய விசாலமும் தயாள குணமும் உள்ளவர் என்பதை அவருடன் நெருங்கிப் பழகியவர்கள் நன்கறிவார்கள்.

சில மனிதர்கள் தாங்கள் யாரிடமாவது அன்பு கொண்டிருந்தால் அதைப் பறை யறைந்து உலகத்துக்கெல்லாம் தெரியப்படுத்துவார்கள்..... இப்படி அன்பையும் சரி, துக்கத்தையும் சரி, வெளிப்படையாகக் காட்டிக் கொள்வது பண்பாடு குறைந்தவர்கள் செய்யும் காரியங்கள்.

பண்பாடு உள்ளவர்களோ தங்கள் அன்பை இருதய அந்தரங்கத்தில் அரிய பொக்கிஷத்தைப் போல் வைத்துக் கொள்வார்கள்; சமயம் நேரும்போது காரியத்தில் காட்டுவார்கள். அம்மாதிரியே எவ்வளவு பெரிய துக்கம் நேர்ந்தாலும் அதை மனத்துக்குள்ளேயே வைத்துக் கொள்வார்கள். வெளிப்படையாகக் காட்டிக் கொள்ளுகிற துக்கத்தைக் காட்டிலும் உள்ளே அடக்கும் துக்கந்தான் பன்மடங்கு கொடியது; அது பொறுப்பதற்கரிய வேதனை தருவதாகும்.

ஆச்சாரியார் மிகச் சிறந்த பண்பாடு அடைந்தவர். ஆதலின் அவர் எந்த விதமான உள்ளத்து உணர்ச்சியையும் வெளிப்படையாகக் காட்டிக் கொள்ள மாட்டார். அது அவரது இயல்புக்கு மாறானது.

உறவினரிடம் அவர் கொண்டுள்ள பாசத்தையோ, சிநேகிதர்களிடம் கொண்டுள்ள அபிமானத்தையோ ஏழை எளியவர்களிடம் கொண்டுள்ள தயாளத்தையோ அறிய வேண்டுமானால், அவர் செய்யும் காரியங்களிலே பார்த்து அறிய வேண்டும். தம்முடைய குடும்பத்திலோ தமது நண்பர்களின் குடும்பத்திலோ யாருக்காவது நோய் வந்து படுத்தால் அவர் எவ்வளவு சிரத்தையுடன் தம்முடைய உடல்நலத்தைப் பொருட்படுத்தாமல் சிசுருஷை செய்கிறார் என்பதைக் கவனித்துப் பார்த்தால், அவருடைய அறிவைக் காட்டிலும் இருதயமே விசாலமானது என்பது தெரியவரும்.

— **ஆசிரியர் கல்கி:** 'நாட்டுக்கொரு புதல்வர்'

இந்த அபூர்வமான பொன் மொழிகளைத் தமிழ் நாட்டு காங்கிரஸ் கமிட்டியின் தலைவர் ஸ்ரீ காமராஜ நாடார் கூறியுள்ளார்.

ராஜாஜியின் மேல் நாடார் பதவி மோக தோஷாரோபணம் செய்ததைக் குறித்து நமக்குக் கொஞ்சமும் கவலை கிடையாது. ராஜாஜியின் தபோக்கினியில் இம்மாதிரி தூஷணைகள் எல்லாம் பஸ்மீகரமாகி விடும். பெரு நெருப்பின் மேல் எந்தக் குப்பை விழுந்தாலும் நெருப்பை என்ன செய்ய முடியும்? அதன் ஜ்வாலையைச் சிறிது கொழுந்து விட்டெரியச் செய்துவிட்டுத் தான் எரிந்து சாம்பராகிவிடுகிறது. அது போலவே ராஜாஜியை எந்த தூஷணையும் எதுவும் செய்து விட முடியாது.

இன்று ஸ்ரீ காமராஜ நாடார் தமிழ் நாட்டுக் காங்கிரஸ் கமிட்டியின் தலைவராயிருப்பதே ராஜாஜியின் பதவித் தியாக உணர்ச்சியால்தான். சாதாரணமாய் ஒவ்வொரு மாகாணத்திலும், அந்தந்த மாகாணத் தலைவர்தான் மாகாண காங்கிரஸ் கமிட்டியின் பதவியை வகிப்பது வழக்கமாயிருந்து வருகிறது. இந்த வழக்கத்துக்கு மாறாகச் செய்தவர் தமிழ் நாட்டில் ராஜாஜி ஒருவரே.

தமிழ் மாகாண காங்கிரஸ் கமிட்டியின் தலைவராக அவர் மிக அபூர்வமாகவே பதவி வகித்திருக்கிறார். அவர் விரும்பியிருந்தால் 1921ம் ஆண்டிலிருந்து அவரே தமிழ் நாட்டுக் காங்கிரஸ் கமிட்டியின் தலைவராகத் தொடர்ந்து இருந்து வந்திருக்கலாம். பிரதம மந்திரி பதவியை விட்டு விலகியவுடனேயே அவர் தமிழ் மாகாண காங்கிரஸ் கமிட்டிக்குத் தலைவராக வந்திருக்கலாம். அப்படிச் செய்யவில்லை. சென்ற இருபது வருஷத்துக்கு மேலாக மற்றவர்களைப் பதவியில் வைத்து, தாம் தொண்டு செய்வதே ராஜாஜி அனுசரித்து வந்த முறை. அதனால்தான் இன்று ஸ்ரீ காமராஜ நாடார் ராஜாஜியின் மீது ஒழுங்கு நடவடிக்கை நோட்டீஸ் கொடுப்பது சாத்தியமாயிற்று.

சொன்னால் நாக்கு வெந்துபோகும்படியான இத்தகைய அவதூறு மொழிகளை இரண்டு வருஷங்களுக்கு முன்னால் நாடார் சொல்லியிருக்க மாட்டார். நடுவில் ஏதோ மாறுதல் ஏற்பட்டிருக்க வேண்டுமென்பதில் சந்தேகமில்லை. இந்த மாறுதலுக்கு என்ன காரணமாயிருக்கும்? இந்த இரகசியத்தை, 'சர்ச்சிலும், ஸ்டாலினும் சேர்ந்து ஹிட்லரைத் தொலைக்கப் பார்ப்பதுபோல் ராஜாஜி கம்யூனிஸ்ட் வாலிபர்களோடு சேர்ந்து காங்கிரஸை அழிக்கப் பார்க்கிறார்' என்ற ஸ்ரீ காமராஜின் கூற்றிலேயே நாம் காண்கிறோம். அதாவது, காங்கிரஸை ஹிட்லருக்கு அவர் ஒப்பிட்டிருக்கிறார். இதிலிருந்து அவரும் மாகாண காரியக் கமிட்டியிலுள்ள அவருடைய சகாக்கள் சிலரும் தங்களை ஹிட்லராகவும், முஸோலினியாகவும், டோஜோவாகவும் கற்பனை செய்து கொண்டிருப்பதாக நாம் யூகித்துக் கொள்ளலாம். தமிழ் நாட்டு எம். எல். ஏ.க்களை — இருபதி

# எடையினால் ஏக்கமா?

# எடை குறைந்து

# எடுப்பாய் விளங்க

# லிமிகால்

மெல்லிடைப் பெண்மணி, அவள் நாகரீக ஓவியம். உடலோடொட்டிய உடையணிந்தவள்தான் இந் நவீன நாகரீகத்தின் சின்னம். உடல் கனம் குறைவதற்குப் பத்தியமான உணவு தேவை யில்லை. கடினமான தேகப் பயிற்சிகளும் வேண் டாம் — லிமிகால் அருந்தி சுலபமாக இளைக்க முடியும்.

லிமிகால் ஒரு தாவர உணவு—ருசியான, வாழைப் பழ, சாக்லேட் மற்றும் ஆரஞ்சு மணங்களில் கிடைக்கிறது. நீங்கள் லிமிகால் மட்டுமே அருந்தி துரிதமாகவோ அல்லது குறைந்த கலோரியுள்ள உணவுடன் அதை அருந்தி மெதுவாகவோ எடை யைக் குறைக்கலாம்.

மேலும் லிமிகால் உங்கள் பசியைப் பூராவும் தீர்க் கும் — சாப்பாடுகளுக்கிடையே சிறு தீனிகளுக் தேவையில்லை! உங்கள் பசியைக் குறைப்பதற்கான எவ்வித மருந்தும் இதில் கிடையாது. லிமிகால் அருந்திவரும்போது உங்கள் அன்றாட அலுவல் களைக் கவனித்து வரலாம்.

லிமிகாலைப் பரீட்சார்த்தமாக அருந்தியவர்களின் எடை வாரத்திற்கு சுமார் 3 லிருந்து 5 பவுண்டு கள்வரை குறைந்திருக்கிறது.

நீங்கள் செய்யவேண்டியதெல்லாம் இவ்வளவு தான்—ஒரு டம்ளர் நீரில் 4 டேபிள் ஸ்பூன் லிமி காலை நன்றாகக் கரைத்து அருந்திவிடுங்கள்! இது சீரான உணவுக்கு ஒப்பான குறைந்த கலோரி யுள்ள முழு உணவாகும்.




இப்பொழுது சிக்கனமான வகையில் 1.6 கிலோகிராம் டின்னிலும் கிடைக்கிறது. (ஒரு வாரத்திற்குப் போதுமானது)

உங்கள் டாக்டரும்

# லிமிகால்

அருந்தும்படி சிபார்சு செய்வார்.

''ஸ்லிம்மிங் வித் லிமிகால்'' என்னும் இலவசப் புத் தகத்தைப் பெற எழுதுங்கள்:

ஸாராபாய் கெமிகல்ஸ், தபால் பெட்டி எண் 1688 பம்பாய்—1.

சில்லரை விலை: 225 கிராம் டின் ரூ. 6.50, 1.6 கிலோகிராம் டின் ரூ. 33.50. விற்பனை வரி மற்றும் பிராந்திய வரிகள் தனி.

ிரம் முப்பதினாயிரம் வோட்டுக்கள் பெற்ற
ாதுஜனப் பிரதிநிதிகளை — உயிரும் உணர்
் அற்ற மண் பொம்மைகளாக மதித்துச்
வாதிகார உத்தரவுகள் போடுவதற்கும்
ற்கூறிய மனப்பான்மைதான் காரணமா
நக்க வேண்டும்.

துணைக் கல்கி: ஜூலை, 1942

ஃ ஃ ஃ

''ராஜாஜியிடம் நமக்கு ரொம்பப் பக்தி
ண்டு: இது எல்லாருக்கும் தெரியும். ஆகை
ால் அவர் சொல்வதை நாம் ஆதரித்தால்
ாராவது தப்பர்த்தம் செய்து கொள்
ார்கள்'' என்பதற்காக, ராஜாஜி கட்சி
பாயமென்று தோன்றிய போதிலும் அதை
ான் ஆதரிக்காமல் சும்மா இருக்க முடியுமா?

ஜூலை 20, 1943

## ாகபுரியில் ராஜாஜி

நாகபுரியில் ஒரு கூட்டத்தின் ஆரம்பத்
ில் ராஜாஜி மீது முட்டைகளும் தாரும்
ீசியப்பட்டதாகவும், இந்தக் காலித்தனத்
ினால் கூட்டத்தைக் கலைக்க முடிய
ில்லை என்றும், கூட்டம் அமைதியாக நடை
ெற்றதென்றும் செய்தி கிடைத்திருக்
ிறது. அறிவாளிகளின் பேரில் மூடர்களுக்
ும், உண்மை சொல்கிறவர்களின் பேரில்
பொய்யர்களுக்கும் கோபம் வருவது இது
ுதல் தடவையல்ல. ஆனால் ராஜாஜியைத்
தாக்குவதற்குக் கையாளப்பட்ட ஆயுதங்கள்
அவரை எதிர்ப்பவர்களை நன்கு இனம் காட்டு
கின்றன என்பதை மட்டும் குறிப்பிட விரும்பு
கிறோம். அவர்களுடைய மூளையின் பிரமாணத்துக்குக் கோழி முட்டை நல்ல உதாரணம். அந்தச் சின்ன மூளையை எவ்வளவு கன்னங்கரிய அறியாமை இருள் சூழ்ந்திருக்கிறது என்பதைத் தார் எடுத்துக் காட்டுகிறது.

(டிசம்பர் 3, 1944)

ஃ ஃ ஃ

சென்ற மூன்று வருஷத்திய இந்திய அரசியல் சரித்திரம் ஒரு விஷயத்தைத் தெள்ளத் தெளிய வெளிப்படுத்தியிருக்கிறது. அது நமது தியாக மூர்த்திகளான காங்கிரஸ் தலைவர்களுக்குள்ளே தீர்க்க திருஷ்டியிலும் முன்யோசனையிலும் தலைசிறந்தவர் ராஜாஜி என்பதுதான். இதைக் குறித்துத் தென்னாட்டில் பிறந்த நாம் எல்லாரும் பெருமையடைய இடமுண்டு. அப்படிப் பெருமையடைவதற்கு வேண்டிய பெருந்தன்மையும் விசால புத்தியும் இந்தக் காலத்தவர்களுக்கு இல்லா விட்டாலும், நமது பிற்காலச் சந்ததிகள் ராஜாஜியைக் குறித்து அத்தகைய பெருமையை அடையப் போகிறார்கள் என்பதில் சந்தேகமே இல்லை.

(ஆகஸ்ட் 26, 1945)

ஃ ஃ ஃ

ஸ்ரீ கிருஷ்ண பகவான், ஏகநாதர் முதலிய அவதார புருஷர்களைப் போல் வசைமொழிகளுக்கும் அவதூறுகளுக்கும் உள்ளாவது ராஜாஜியின் ஜாதக விசேஷம். ஆனால் எத்தகைய தாக்குதல்களையும் தாங்கக் கூடிய சாந்தம் என்னும் பிரம்ம தண்டத்தை ராஜாஜி பெற்றவராயிருப்பதால், அவரிடம் அன்பு கொண்ட பொதுமக்கள் மேற்படி வசைகளைப் பொருட்படுத்த வேண்டிய இல்லை.

(ஜனவரி 13, 1946)

## ராஜாஜி

ராஜாஜியிடம் அபிமானம் கொண்ட நண்பர்களில் அரசியல் பற்று அதிகம் இல்லாத பலர் ''உங்கள் பேரில் 'பதவி மோகம்', 'அதிகார ஆசை' என்றெல்லாம் வீண் பழி சுமத்துகிறார்களே! இந்த அவதூறையெல்லாம் பொறுத்துக் கொண்டாவது அரசியல் வாழ்க்கை எதற்காக? விட்டுத் தொலைப்பது தானே?'' என்று அடிக்கடி அவரிடம் மனம் வருந்திச் சொன்னார்கள்.

அதற்கெல்லாம் ராஜாஜி, ''பொய்யான பழிகளுக்கும் அவதூறுகளுக்கும் பயந்து என்னுடைய பொறுப்பைத் தட்டிக் கழித்துவிடலாமா?'' என்று சொல்லிக் கொண்டிருந்தார்.

ராஜாஜியின் அபிமானிகள் எந்த மனோநிலையில் அவருக்கு மேற்கண்டவாறு யோசனை சொன்னார்களோ, அதே மனோ நிலை ராஜாஜிக்கும் ஏற்படக் கூடிய சந்தர்ப்பம் ஒன்று நேர்ந்தது.

தமிழ் நாட்டில் சிலர் மகாத்மாவின் அந்தரங்க சுத்தியையே சந்தேகித்துக் கிளர்ச்சி செய்ய ஆரம்பித்த போது ராஜாஜிக்கு மேற்படி மனோ நிலை ஏற்பட்டது. இந்தியாவுக்குள்ளேயே தமிழ் மக்கள் மகாத்மா காந்தியிடம் ஒப்பற்ற பக்தியுள்ளவர்கள் என்பது பிரசித்தம். அந்தப் பக்திக்கு மாசு நேரும்படியான பிரசாரத்தைக் கண்டதும் ராஜாஜி உடனே விதுரர் ஆகி, வில்லை முறித்துப் போட்டு விட்டார். ''எது எப்படியானாலும், தமிழ் மக்கள் மகாத்மாவிடம் கொண்டுள்ள பக்திக்கு மாசு நேரக் கூடாது; அதுவும் என்

---

பத்தரை மாற்றுத் தங்கத்தை வாங்கிக் கொடுப்போம். அதைக் கல்மேல் வைத்துக் கொண்டு தட்டார்கள் என்ன பாடு படுத்துவார்கள் என்பது நமக்குத் தெரியும். சுத்தியலால் இப்படி அடிப்பார்கள்; அப்படி அடிப்பார்கள். இடையிடையே உலையில் காயவைத்து மறுபடியும் மறுபடியும் தட்டுவார்கள். துலைச்சல் கொடுப்பதற்காக அவ்வளவும் செய்கிறார்கள்.

இயற்கைக்கு ஒரு நல்ல ஆன்மாக் கிடைத்து விட்டால் சரி, நல்ல பணிக்கு உதவும் என்று எண்ண ஆரம்பித்து விடுகிறது அது. அந்த ஆன்மாவை என்ன பாடெல்லாமோ படுத்துகிறது.

ராஜாஜி கிடைத்தார்கள். அவர்களை இயற்கை என்னவெல்லாம் செய்தது?...துலைச்சல் ஏற்றிய காரணமாகத் தங்கம் இப்போது பத்தரை மாற்றுத் தங்கமாகப் பிரகாசிக்கிறது. பாரத மாதாவின் சிரசில் அரிய மகுடமாக விளங்குகிறார்கள் ராஜாஜி.

— டி. கே. சி.

---

னால் நேரக் கூடாது!'' என்று தீர்மானித்தார்.

அந்தத் தீர்மானத்தை மாற்றிக் கொள்ளும்படி மற்றவர்கள் தம்மைத் தூண்டுவதற்கே இடம் இருக்கக் கூடாதென்று மகாத்மாவுக்குத் தாம் எழுதிய கடிதத்தை அன்றே பத்திரிகைகளில் பிரசுரப்படுத்துவதற்கும் கொடுத்து விட்டார்.

(மார்ச் 10, 1946)

ஃ ஃ ஃ

இது வரையில் நாம் வெளியிட்டிருக்கும் எந்தக் ''கல்கி'' இதழும் அல்லது விசேஷ மலரும் இந்த ராஜாஜி மலர் வெளியிடுவதன் மூலம் நாம் அடைந்திருக்கும் மகிழ்ச்சியையும் பெருமையையும் அளித்ததில்லை. நமது மகிழ்ச்சியையும் பெருமையையும் 'கல்கி' நேயர்களுடன் பகிர்ந்து கொள்ள விரும்புகிறோம்.......... ராஜாஜியைத் தேசமே நிராகரிக்கிறது என்று தோன்றிய காலத்தில் குருட்டுப் பக்தியுடன் 'கல்கி' அவரை ஆதரித்து நின்றது.... ராஜாஜி சம்பந்தமான வாதப் பிரதிவாதங்கள் ''கல்கி''யின் மூலம் அதிகமாக வளர்ந்தன என்று இரு சாரிலும் சில நண்பர்கள் கருதினார்கள். இந்தக் காலத்துச் சிறந்த தமிழ் மகனுடைய தொண்டைத் தமிழகம் இழந்துவிடக் கூடாதே என்னும் கவலையையும் ஆர்வத்தையும் தவிர வாதப் பிரதிவாதங்களில் ஈடுபட்டதில் நமக்கு வேறு எவ்வித நோக்கமும் கிடையாது.

(1948 ஜூன் மாதம் ராஜாஜி கவர்னர் ஜெனரலானபோது வெளியான மலரில்)

### 'இரண்டு பொன் வருடங்கள்'

இரண்டு ஆண்டு காலத்தில் ராஜாஜியினால் மகத்தான பல நன்மைகளை இந்த ராஜ்யத்துக்குச் செய்ய முடிந்தது; இந்த நன்மைகளினால் பாரத நாடு முழுவதுமே பயன் அடைந்தது.

ராஜாஜி முதன் மந்திரிப் பொறுப்பு ஏற்றுக் கொண்ட பின்னர் செய்த முதற்பெருங் காரியம் தானியக் கண்ட்ரோலை எடுத்தது.

அரசியல் தலைவர் ஒருவர் தமது வாழ்நாளில் இத்தகைய ஒரு காரியத்தைச் செய்தாலே போதுமானது. அவருடைய அரசியல் சேவை பரிபூரணமாகி விட்டது என்று சொல்லலாம்.

1947ம் ஆண்டில் இந்தியா அரசியல் சுதந்திரம் பெற்று விட்டது என்று சொல்லப்பட்ட போதிலும், 1952ல் ராஜாஜி தானியக் கண்ட்ரோலை எடுத்த பிறகுதான் மக்கள் ''உண்மையில் நாம் சுதந்திரம் பெற்று விட்டோம்'' என்று உணரத் தொடங்கினார்கள்.

(1954ம் ஆண்டு புத்தாண்டு மலரில் அமரர் 'கல்கி')

## அவர் தந்திரம் அவ்வளவுதான்!

ராஜாஜியைத் தந்திரசாலி என்று சொல்லுவதைப் போன்ற பரம முட்டாள்தனம் வேறு இல்லை என்பதற்கு அவருடைய வாழ்க்கையிலேயே பல உதாரணங்கள் இருக்கின்றன. அத்தகைய கூரிய மதி படைத்தவர் தந்திரக்காரராயிருந்திருந்தால் சின்னஞ்சிறு மனிதர்கள் அவரை எதிர்த்து வென்றிருக்க முடியாது. அவருடைய அரசியல் வாழ்க்கையில் இவ்வளவு தொல்லைகள் ஏற்பட்டிருக்காது.

ராஜாஜிக்குக் கொஞ்சம்கூடத் தந்திர சாமர்த்தியம் கிடையாது என்பதற்கு திதரிசனமான கடைசி உதாரணம் இப்போது கிடைத்திருக்கிறது.

உள்நாட்டு மந்திரி பதவியிலிருந்து விலகப் போகும் தறுவாயில் 'பத்திரிகை மசோதா' ஒன்றை அவர் கொண்டு வந்து பிடிவாதமாக அதைப் பார்லிமெண்டில் நிறைவேற்றிச் சட்டமாக்கி வைத்தார்.

இதனால் இமயமலையிலிருந்து கன்னியாகுமரி வரையில் உள்ள பத்திரிகைகள் எல்லாம் அவரைத் தாக்கி எழுதும்படியான ஒரு சந்தர்ப்பத்தை ஏற்படுத்திக் கொண்டார்!

தந்திரம் என்பது கொஞ்சமாவது தெரிந்தவராக இருந்தால் உத்தியோகத்திலிருந்து விலகும் சமயத்தில்.... ஒரு புதிய சர்வ சுதந்திர பத்திரிகைச் சட்டத்தைக் கொண்டு வந்து நிறைவேற்றிப் பத்திரிகைகள் எல்லாம் புகழும்படி செய்து கொண்டிருக்கலாமே!

''இப்படி ஏன் செய்கிறீர்கள்? போகிற போக்கில் பத்திரிகைகளிடம் கெட்ட பெயர் வாங்கிக் கொண்டு ஏன் போக வேண்டும்?'' என்று சிலர் பார்லிமெண்டில் கேட்டார்கள்.

அதற்கு ராஜாஜி என்ன சொன்னார் தெரியுமா?

**''நான் ஒரு காரியத்தைச் செய்யும்போது அதனால் நல்ல பெயர் வருமா, கெட்ட பெயர் வருமா என்று யோசிக்கும் வழக்கமில்லை. அந்தக் காரியம் சரியா, தவறு என்றுதான் யோசிப்பேன். நீங்களும் அப்படியே செய்யுங்கள். 'பாபுலாரிடி'யைப் பற்றிச் சிந்திக்காமல் ஒரு காரியம் நல்லதா, கெட்டதா என்று யோசித்து, நல்லதையே செய்யுங்கள். தேசத்துக்கு நன்மையான காரியங்களைச் செய்வதனால் கெட்ட பெயர் வருவதானாலும் அதைப் பொருட்படுத்த வேண்டாம்!''**

என்று உபதேசித்தார்.

ராஜாஜிக்குத் தெரிந்த தந்திரம் அவ்வளவுதான்!

அதாவது நல்லதைச் செய்ய வேண்டும், நல்லதையே செய்ய வேண்டும், நல்லதை மட்டுமே செய்ய வேண்டும் என்பதுதான்.

(அக்டோபர் 14, 1951)

## நடவாதது நடந்துவிட்டது

சென்ற பல ஆண்டுகளில் பல முறைகளில், ''நாம் அன்றைக்குச் சொன்னோம்: அதன்படியே இன்றைக்கு நடந்திருக்கிறது!'' என்று பெருமையுடன் இந்தப் பத்திரிகைத் தலையங்கத்தில் நாம் எழுதியதுண்டு.

இன்றைக்கு முதல் முறையாக, ''நாம் சொன்னபடி நடைபெறவில்லை; அதற்கு

# இப்பொழுதே
# சிந்தால் டாய்லெட் பவுடரை
# வாங்கி
# 30 பைசாவை
# மிச்சப்படுத்துங்கள்

**சிந்தால்** சோப் வாங்குபவர்களுக்கு ஒரு பிரத்யேகமான சலுகை! **சிந்தால்** சோப்பின் உறையில் நீங்கள் ஓர் **சலுகைக் கூப்பனைக்** காண்பீர்கள். இந்தக் கூப்பன், நீங்கள் வாங்கும் சிந்தால் டாய்லெட் பவுடரின் விலையில் உங்களுக்கு 30 பைசா சலுகை அளிக்கும்.




வியர்வை நாற்றத்தைப் போக்கி, பாதுகாப்பளிக்கும் ஜி-11 கலந்த டாய்லெட் பவுடர்

ஜி-11 கலந்த
அழகு சாதன சோப்




*இந்தச் சலுகை 28உ பிப்ரவரி 1965வரை தான்*

Godrej

# கோத்ரெஜ்

சோப்புகளிலும், அழகு சாதனங்களிலும் மிகச் சிறந்த பெயர்.

CTP-9 TAM

**கல்கி பத்திரிகையின் நிர்வாகிகள்: ராஜி, டி.கே.சி., கல்கி, சதாசிவம்**

ாருக நடந்தது பற்றி அளவி ாத மகிழ்ச்சி அடைகிறோம்'' ன்று பெருமையுடன் சொல்லிக் காள்கிறோம்.

சென்ற இதழின் தலையங்கத்தில் ராஜாஜியின் தலைமை; நடவாத வாரும் பேச்சு!'' என்று நாம் ழுதிய பிறகு பல காரியங்கள் வகு துரிதமாக, மூச்சுத் திணறும் வேகத்தில் டந்தேறின......

இம்மாகாணத்தின் நன்மையில் என்றும் ரத்தை கொண்ட ராஜாஜி, ''முடியாது'' ன்று பதில் சொல்வதற்கு முடியாத சூழ் நிலையை மேற்கூறிய முயற்சிகள் உண்டாக்கி விட்டன.

முதலையின் வாயில் சிக்கிய கஜேந்திர னுடைய அபயக் குரலைக் கேட்டுப் பகவான் ஓடி வந்ததாகப் புராணம் சொல்லுகிறது.

அந்தப் பகவானுடைய பக்தர்களில் தலை சிறந்தவரான ராஜாஜியும் இன்று சென்னை மாகாணத்தை அபாயத்திலிருந்து தப்புவிப்ப தற்காக ஓடி வரவேண்டியது இன்றியமை யாததாயிற்று.

சென்னை மாகாணத்துக்கும் இம்மாகாண மக்களுக்கும் ஏற்பட்டிருக்கும் அதிர்ஷ் டத்தை எண்ணும்போது நமக்கு உற்சாகமும் குதூகலமும் உண்டாகின்றன.

ஆனால்.... ராஜாஜி எவ்வளவு வேலை செய் தாக வேண்டும், எவ்வளவு இடையூறுகளைச் சமாளிக்க வேண்டும் என்று நினைக்கும்போது நம் உற்சாகம் அடியோடு குன்றி மறைந்து விடுகிறது. (ஏப்ரல் 6, 1952)

## வரப்பிரசாதம்

தேவர்களே! உங்கள் சொர்க்கலோகத்தில் மலர்கள் இருப்பது உண்மையானால், இப் போது அவற்றை ஏராளமாகத் திரட்டிக் கொண்டு வாருங்கள். பூலோகத்தின்மீது மலர் மாரி பொழிவதற்கு இதைவிட நல்ல சந்தர்ப் பம் உங்களுக்கு வேறு வாய்க்கப் போவதில்லை.

காந்தி அண்ணலே! வானுலகத்தில் தாங்கள் இன்று எங்கேயிருந்தாலும்... தங்கள் திருவுள்ளம் குளிர்ந்திருக்கும் என்பதில் ஐய மில்லை. ''என் தேச மக்கள் பசி பட்டினியால் மடிவதைக் காட்டிலும் பெருந்தீமை ஒழுக்கம் கெட்டு ஆத்ம நாசம் அடைவது அல்லவா? அந்தப் பெருந் தீமைக்குக் காரணமாக உள்ள உணவுக் கட்டுப்பாட்டு முறையை ஒழி யுங்கள்!'' என்று தாங்கள் இம்மண்ணுலகை வாசியாயிருக்கும் போது சொன்னீர்களே! அதை இன்று தங்கள் அருமைத் துணைவர் ராஜாஜி நிறைவேற்றி வைத்து விட்டார். அவருக்கும் எங்களுக்கும் ஆசி கூறுங்கள்!

சென்னைப் பொதுமக்களே! ராஜாஜி யிடம் நீங்கள் வைத்திருந்த இடநம்பிக்கை இன்று நிறைவேறி விட்டது. உங்களை நீங்களே வாழ்த்திக் கொள்ளுங்கள்!....

காங்கிரஸை எதிர்த்த அருமைச் சகோ தரர்களே! உங்களுக்கு நமது மனமார்ந்த நன்றியைத் தெரிவித்துக் கொள்கிறோம். உங் களுடைய எதிர்ப்பினாலேதான் ராஜாஜி சென்னை மாகாணத்தின் முதன் மந்திரிப் பொறுப்பை ஏற்கும்படி நேர்ந்தது. அதனாலே தான் சென்னை மக்களுக்கு இந்த எதிர் பாராத அற்புதமான வரப்பிரசாதம் கிடைத் தது. நீங்கள் அடியோடு வாழ்வீர்களாக!

மேலே குறிப்பிட்ட வரப்பிரசாதம் என்ன என்பதைப் பற்றி நேயர்களுக்குச் சொல்லவும் வேண்டுமா? உணவுக் கட்டுப் பாடு ஒழிப்புத்தான்!

(ஜூலை 15, 1952)

## ராஜாஜி எதிர்ப்பு ஏன்?

ராஜாஜி சென்னை இராஜ்யத்தின் முதன் மந்திரிப் பொறுப்பை ஏற்க வேண்டும் என்று சென்ற ஆண்டு ஆரம்பத்தில் பிரஸ்தாபம் வந்த போது நாம் அதை ஆதரிக்கவில்லை....

''இன்று 'நாங்கள்தான் முதன் மந்திரி பதவி ஏற்று இம்மாகாணத்தை அரசியல் குழப்பத்திலிருந்தும் அராஜகத்திலிருந்தும் காப்பாற்ற வேண்டும்' என்று சொல்கிற வர்கள், நாளைக்கு நெருக்கடி தீர்ந்ததும் உள் விருந்தே குழி பறிக்கப் பார்ப்பார்கள்'' என்று கூறினோம்......

ராஜாஜி முதன் மந்திரி ஆனவுடனேயே சில விஷமமூர்த்திகள் தங்கள் சொரூபத் தைக் காட்ட ஆரம்பித்ததுண்டு. மற்றவர்கள் அவர்களிடம், ''அவசரப்பட வேண்டாம், பொறுத்திருப்போம்; காலம் மாறும்; அப் போது பார்த்துக் கொள்ளலாம்'' என்று உபதேசித்து வந்தார்கள் போலும்!

'காலம் மாறி விட்டது; நெருக்கடி போய் விட்டது; இனி ராஜாஜியை அனுப்பி விட்டு நம்முடைய காரியங்களைப் பார்த்துக் கொள்ளலாம்' என்று கருதிக் கைகோர்த்துப் படலத்தைத் தொடங்கியிருக்கிறார்கள்.

இத்தனை நாள் அவர்கள் பொறுத்துக் காத்திருந்ததே பெரிய காரியம். இனிமேலும் எப்படிக் காத்திருக்க முடியும்? ராஜாஜியே இன்னும் நீடித்திருந்தால் அவரவர்களும் எண்ணி வந்த காரியம் என்ன ஆகின்ற தாம்? -புண்ணியவான்கள் இத்தனை பதினைந்து மாத காலம் சும்மாயிருந்தார்களே, அதற் காகவே பொது மக்கள் சந்தோஷப்பட்டு நன்றி செலுத்த வேண்டியதுதான்.

(நவம்பர் 15, 1953)



# ஞான ஒளி ஊட்டுபவர்

ஸ்ரீ பகவானையும் மகான்களையும் யாவரும் பூஜித்து நமஸ்கரிப்பது நம் மதத்தில் வழக்கம். அந்த ஆண்டவனும் 'நான் ஆறு பேர்களை நமஸ்கரிக்கின்றேன்' எனக் கூறியுள்ளார். பகவானின் பூர்ணாவதாரமாக அவதரித்துக் கலியுகம் ஆரம்பிக்கும் தினத்தன்று வைகுண்டம் சென்ற ஸ்ரீ கிருஷ்ணன் தன்னாலும் நமஸ்கரிக்கத் தகுந்தவர்கள் ஆறு பேர் என்கிறார். அவர்கள் :

பசியெனத் தவிக்கும் மனிதனுக்கு நித்தியம் அன்னம் அளிப்பவன்.

பால்யம் முதல் ஸ்ரீ அக்னி பகவானைப் பூஜித்து ஹோமம் செய்யும் அக்னிஹோத்ரி.

பாவங்களைப் போக்கிக் கொள்ளுவதற்காகத் தவத்தைச் செய்யும் மாஸோபவாஸி.

கணவனுக்கு அன்புடன் பணிவிடை செய்யும் உத்தமி.

வேதத்தில் கூறிய பரமாத்மாவை கண்டறிந்த ஞானி.

ஆயிரம் பிறை ஜீவித்திருந்தவன்.

பிறை என்பது அமாவாஸ்யை கழித்து துவிதியை அன்று மாலையில் புலப்படும் அந்தச் சந்திரனைப் பார்ப்பது மிகப் புண்ணியமாகும். இம்மாதிரி ஆயிரம் பிறை காண்பது என்பது வயதுக்குமே ஜீவித்தவர்களுக்குத்தான் ஆகும். இவ்வாறு ஜீவித்திருப்பவர்கள் தெய்வ நம்பிக்கை, ஸத்யம், தர்மம் இவற்றிலெல்லாம் பற்றுள்ளவர்களாக இருந்தால் சாஸ்திரத்தை உணராதவர்கள் கூட அவர்களை நமஸ்கரித்துப் பூஜிப்பார்கள் ஆண்டவனே அவர்களை நமஸ்கரிப்பதானால் இப்படி என்பது வயதுக்கும் மே ஜீவித்து எண்பத்தாறு வயதையும் கடந்து உலகங்களெல்லாம் போற்றும் புகழையும் ஒருவர் பெற்றிருந்தால் அவரது பெருமையைக் கூறவும் முடியுமோ? அப்படிப்பட்ட உத்தமர் நமது ராஜாஜி அவர்களே!

அம்மகான் உலகிற்குப் பலவிதமான தொண்டுகள் செய்துள்ளார்கள். அதில் மிகச் சிறந்த தொண்டு நமது இதிஹாஸங்களின் உட்கருத்தை உலகங்களெல்லாம் உணரும்படி வெளியிட்டது தான். இதிஹாஸங்களுள் மிகச் சிறந்தவை ஸ்ரீ மகாபாரதம், ஸ்ரீ வால்மீகி ராமாயணம் இரண்டுமாகும். இவைகளில் ஸ்ரீ மகாபாரதம் லட்சம் ச்லோகம் கொண்டது. இதை மஹேதிஹாஸம் என்பார்கள். இதைப் படிப்பதால் மகா பாபங்களெல்லாம் விலகும். சகல மங்களங்களும் உண்டாகும். இதை ''வியாஸர் விருந்து'' என்ற பெயருடன் பலாப்பழத்துச் சுளைகளில் உள்ள தேனைத் தங்கப் பாத்திரத்தில் தருவது போல் ஸ்ரீ ராஜாஜி அவசியமானபடி சுருக்கி எளிய நடையில் எழுதியுள்ளார்.

ஸ்ரீ வித்யாரண்யரவர்கள் மகான்களின் லக்ஷணத்தைக் கூறுமிடத்தில் அவர்கள் எந்தெந்த சாஸ்திரங்களைப் பற்றிக் கூறினாலும் அந்தந்த சாஸ்திரங்களை இயற்றிய முனிவர்களாகவே தோன்றுவர் என வர்ணித்திருக்கிறார்.

ஸ்ரீ ராஜாஜி எழுதிய வியாஸர் விருந்தைப் பார்த்தால் அவர் வியாஸராகவே தோன்றுவார். பாரதத்திற்குள் உள்ள கதைகளில் தர்மபுத்திரர் கூறியவற்றை அவர் எழுதும்போது பார்த்தால் தர்மபுத்திரரே பேசுவது போல் அமைந்துள்ளது. யக்ஷன் தர்ம புத்திரரைப் பார்த்து, 'நான் கேட்ட கேள்விகளுக்கெல்லாம் நன்கு பதில் கூறிவிட்டாய். என்னால் மரணமுற்ற உனது

சேங்காலிபுரம் பிரம்மஸ்ரீ அனந்தராம தீக்ஷிதர்

ன்கு பிராதாக்ளுன் ஒருவரைப் பிழைக்கச் செய்கிறன். வரம் கேள்' என்றார். தர்மபுத்திர், 'நகுலோ யக்ஷ ஜீவது' என்றார்.

'யக்ஷனே! நகுலன் ஜீவித்து எழுந்திருக்க வேண்டும்' என்றார். யக்ஷன், 'பதினாயிரம் யானைகளுக்குச் சமமான பலம் படைத்த பீமசேனன் உனக்கு ரொம்பப் பிரியம் என்றல்லவோ எல்லோரும் சொல்லுகிறார்கள்? அர்ஜுனனுடைய சாமர்த்தியம் அல்லவோ உங்களுடைய பாதுகாப்பு? அவ்விருவரையும் விட்டு விட்டு ஏன் நகுலன் பிழைத்தெழுந்திருக்க விரும்பினாய்?'' என்று கேட்டான். அதற்கு தருமன் கூறிய பதிலை ராஜாஜி வெகு அழகுடன் இவ்வாறு எழுதியுள்ளார்:

''யக்ஷனே! **தருமமே மனிதனைப் பாதுகாக்கிறது. பீமனுமல்ல, அர்ஜுனனும் அல்ல. புறக்கணிக்கப்பட்டால் தர்மமே மனிதனைக் கொல்லுகிறது.** என் பிதாவுக்குக் குந்தியும், மாத்ரியும் இரு மனைவிகள். நான் குந்திக்கு ஒரு புத்திரன் மிஞ்சினேன். மாத்ரி புத்திரனும் ஒருவன் உயிருடன் இருந்தால் சமமாக இருக்கும். எனவே நகுலன் பிழைத்து எழுந்திருக்கட்டும்.'' இவ்வாறு ராஜாஜி எழுதிய இடத்தைக் கல் நெஞ்சம் படைத்தவன் படித்தாலும் மனம் உருகிக் கண் கலங்குவான். தர்மத்தை நம்புவான்.

**கவிமணியின் மணிக்கவி**

விண்ணமுதை யொத்த
வியாச விருந்தளித்த
புண்ணியனே! வேதாந்த
போதகனே! — நண்ணியநீள்
ஆழ்சூழ் இவ்வுலகில்
ஆழியான் இன்னருளால்
வாழ்தி! ஐயா! மகிழ்ந்து.

ஸ்ரீ ராஜாஜி 'கல்கி'யில் எழுதிவந்த திருமூலர் திருமந்திரத்தைப் படித்த போது, திருவாவடுதுறையில் அரசமரத்தடியில் மௌன விரதத்துடன் நவமிருந்து வருஷத்திற்கு ஒருமுறை சமாதி கலைந்து ஒவ்வொரு பாட்டாக மூவாயிரம் வருஷங்களில் மூவாயிரம் பாட்டுப் பாடிய ஸ்ரீ நந்திகேசனின் அவதாரமான திருமூலரே தமது திருமந்திரத்தைக் கூறுவதுபோல் தோன்றிற்று.

ஸ்ரீமத் ராமாயணம் ஸ்ரீ மகாபாரதம் முதலிய நூல்களை உபந்நியஸிக்கும்போது ஸ்ரீ ராஜாஜியைச் சபையில் உள்ளவர்களுக்கு ஆசி கூறி அந்தந்தச் சரித்திரத்தின் ஸாரத்தைக் கூறவேண்டுமென நான் வேண்டுவதுண்டு. நான் கேட்டுக் கொள்ளும்போது ஒரு தடவையாவது அவர்கள் மறுத்துக் கூறியதில்லை. உடனேயே அன்புடன் கதையின் கருத்தைக் கூறிப் பக்தர்களை ஆசிர்வதிப்பார்கள். அவர் கூறுவதைப் பார்த்தால் புராணத்தை எழுதிய முனிவரே கூறுவது போல் தோன்றும். முனிவர்களைப் போலவே இவர் இன்னும் பல ஆண்டுகள் ஜீவித்திருந்து, மகாபாரதத்தில் மற்றுமுள்ள பல சரித்திரங்களை 'வியாஸர் விருந்தின்' இரண்டாவது பாகமாயும், திருமூலர் கூறிய உபதேசங்களில் மேலும் பல பாடல்களின் விளக்கத்தையும் வெளியிட்டு உலகுக்கு உதவி புரிய வேண்டும். ஹிந்து மத நூல்கள்தான் உலகிலுள்ள மக்களுக்கு அழியாத செல்வமாகும். ராஜாஜி விளக்குவதுபோல் வேறு யாராலும் அவற்றின் கருத்துக்களை யாவரும் உணரும்படி எழுத முடியாது. இவற்றுக்கெல்லாம் காரணம் அவர்களுடைய புத்தியும் மனமும் விசாலமாகவும், பரிசுத்தமாகவும் இருப்பதேயாகும்.

ராஜாஜி நமது மத விஷயமாக எழுதியுள்ள கட்டுரைகள் ஆங்கிலத்திலும் வெளி வந்திருப்பதால் உலக முழுவதிலும் உள்ள மக்கள் ஹிந்து மதம் என்ற ஆதாரமான அடிமரத்திலிருந்துதான் மற்ற மதங்களாகிய கிளைகள் தோன்றியுள்ளன என்று உணருவார்கள். அகிலஉலகிலும் ராஜாஜி இவ்வாறு ஞான ஒளியைப் பரப்பி வருவது அவரது லோக சேவைகளில் முக்கியமான ஒன்றாகும்.

அவர்கள் இன்னும் பல ஆண்டுகள் ஆரோக்கியத்துடன் ஜீவித்திருந்து நம் ஹிந்து தர்மத்தை உலகமெல்லாம் பரப்புவதற்கு லக்ஷ்மீபதியான ஸ்ரீ நாராயணன் அருள் புரிய வேண்டுமாய்ப் பிரார்த்திக்கிறேன்.






### இருபத்தொன்பதாம் அத்தியாயம்

## அறம் குலைந்த அரசு

சோழ வள நாட்டுக்குள் உறையூரைக் கடந்து கங்காபுரிக்குச் செல்லும் நெடுஞ் சாலையில் மெதுவாக ஊர்ந்து சென்று கொண்டிருந்தது ஓர் இரட்டை மாட்டு வண்டி. உறையூரை அடுத்துள்ள கண்ணபுரம் (இப்போதைய சமயபுரம்) கோட்டைக்கு வெளியில் சத்திர வாயிலில் அது நின்றது. வண்டியை ஓட்டிக் கொண்டு வந்தவன் ஒரு பாணன்; வண்டிக்குள் அவன் துணைவியாகிய விறலியும் அவள் தந்தையும் இருந்தார்கள்.

சத்திரத்தில் அன்றைக்கு அவர்கள் தங்கினார்கள்.

''கண்ணபுரம் கோட்டைத் தலைவரைக் கண்டு தடாரி முழங்கி, பாட்டுப் பாடிப் பரிசில் பெறலாமென்று வந்தேன். என் மனைவியும் இனிமையாக யாழ் மீட்டுவாள்'' என்று பாணன் சத்திரத்துத் தலைவரிடம் கூறினான்.

''நீ புறப்பட்டு வந்த வேளை நல்ல வேளையில்லை'' என்றார் அவர். ''கோட்டைக்குள்ளிருக்கும் கோசலப் படைகள் எல்லாம் வடக்கே அவசரமாகப் புறப்பட்டுக் கொண்டிருக்கின்றன. வீர நரசிம்மன் படைகளை அனுப்பும்படி துவார சமுத்திரத்திலிருந்து கட்டளை அனுப்பியிருக்கிறாராம். இந்த நெருக்கடியில் உன்னை எப்படிக் கோட்டைத் தலைவர் பார்க்கப் போகிறார்?''

''நான் புறப்பட்ட வேளை பொல்லாத வேளைதான்!'' என்று சொல்லித் தன் தலையில் கையை வைத்துக் கொண்டான் அந்த இளம் பாணன். ''சோழ நாட்டைக் காப்பதற்கென்றே இங்கு வந்து குடியிருக்கும் தியாக வீரர்களாயிற்றே இந்தக் கன்னடச் சிங்கங்கள்? இவர்களுடைய வீரத்தையும் தியாகத்தையும் பாடலாமென்று வந்தேன்.''

''தியாக வீரர்கள்தான்! இல்லையென்று யார் சொன்னது? ஆனால், அவர்களுடைய சொந்த நாட்டுக்கே ஆபத்து வந்திருக்கிறதே? நெல்லூரிலுள்ள தெலுங்கச் சோழர்களும் வடக்கேயுள்ள காகதியர்களும் சேர்ந்து கொண்டு கோசல நாட்டின் மீது போர் தொடுக்கப் போகிறார்களாம். அதனால்தான் புறப்படுகிறார்கள்.''

''புறப்படட்டும், புறப்படட்டும்!'' என்றான் பாணன்; ''திரும்பி வந்தவுடன் அவர்களுடைய வெற்றியையும் சேர்த்துப் பாடுகிறேன்.''

கண்ணபுரத்திலிருந்து அன்று முழுவதும் படைகள் வடக்கு நோக்கிப் புறப்பட்ட வண்ணமாக இருந்தன. வீரமும் வெற்றியும் ஒவ்வொரு போர் வீரனின் பரந்த மார்பிலும் ஒளி செய்வது போல் தோன்றியது. பாணனின் துணைவியான விறலி அந்தக் காட்சியைக் கண்டு நடுநடுங்கினாள். மூர்க்கத்தனம் மிகுந்த படை கோசல நாட்டுப் படை.

மறு நாட் காலையில் பாணனது மாட்டு வண்டி அங்கிருந்து கிளம்பியது. சோழ நாட்டுக்குள் ஒவ்வோர் ஊராக அது ஊர்ந்து சென்றது.

பொன் விளையும் பூமியான சோழ வளநாட்டு மக்களின் முகங்களில் ஏனோ அவர்களுக்கே உரிய அந்தச் செருக்கைக் காணோம். ஊக்கமிழந்து, உற்சாகம் குன்றி ஏதோ குறை யிருந்தவர்களைப் போல் அவர்கள் காணப்பட்டார்கள்.

குடமூக்கு நகரத்தின் சத்திரத்தில் அடுத்த இரண்டாவது நாள் இரவுப் பொழுதை அவர்கள் கழித்தார்கள். பாணனைப் போன்று வேறு பல வழிப் போக்கர்களும் அங்கு குழுமியிருந்ததால் சத்திரம் கலகலப்பாக இருந்தது. சாப்பாட்டுக்குப் பிறகு சத்திரத்துத் திண்ணையில் அமர்ந்து இரண்டு புலவர்கள் பேசத் தொடங்கினார்கள். பேச்சு மும்முரமாக நடந்தது. பாணன் நெருங்கி வந்து ஒரு தூணில் சாய்ந்து கொண்டான். விறலியும் அவள் தந்தையும் படுத்து முடங்கிக் கொண்டார்கள். அவர்களுக்கும் உறக்கம் வரவில்லை.

''புலவரே! கங்காபுரிக்குப் போய்ச் சக்கரவர்த்திகளைப் பார்த்து வருவது தானே?'' என்று கேட்டார் ஒருவர்.

''சக்கரவர்த்திகளை இப்போது புலவர்கள் போய்ப் பார்க்க முடியாது. உமக்கு மருத்துவம் தெரிந்தால் நீர் போய்ப் பார்க்கலாம். அதிலும் ஓர் இரகசியம். உம்முடைய மருந்தினாலோ, எந்த மூலிகைகளாலோ குலோத்துங்கர் மீளப் போவதில்லை.''

''உம்முடைய திருவாயை அடக்கிப் பேசும்! நம் சக்கரவர்த்திகளையா நீர் அவமதிக்கிறீர்?''

''நான் அவமதிக்கவில்லை. உண்மையைச் சொல்லுகிறேன். சக்கரவர்த்திகளுடைய நோய் அவருடைய திருக்குமாரர் இளைய சக்கரவர்த்தியின் உருவத்தில் வந்திருக்கிறது. அதற்கு மருந்து எனக்குத் தெரியவில்லை.''

''யாரை நீர் இப்போது சாகச் சொல்லுகிறீர்? இந்த இரண்டு பேரில் யாரைச் சாகச் சொல்கிறீர்?''

''புலவரே! நாம் இருவருமே இப்போது அரண்மனைச் சோற்றை வயிறு நிறைய உண்டுவிட்டுப் பேசுகிறோம். யாரையும் நான் சபிக்கவில்லை. ஆனால் இளைய சக்கரவர்த்திகள் அதிகாரத்துக்கு வந்தபிறகு இந்தச் சோழவளநாடே பெரிய சக்கரவர்த்திகளைப்போல் நோய்வாய்ப் பட்டுக் கிடக்கிறது. குலோத்துங்கருக்குப் பிறகு இந்த நாடு என்ன கதிக்கு ஆளாகப் போகிறதோ?''

''நம்மைப் போல் புலவர்களுக்கும், கலைஞர்களுக்கும், அறிவாளிகளுக்கும் இந்த நாட்டில் இனி வேலை இல்லை. ஆண்மையும் வீரமும் உள்ள இளம் பிள்ளைகளுக்கும் இனி இங்கு வே இல்லை. வாணிபம் கெட்டுப் போ விட்டது. உழவு செய்வோர் சோம்ப முறிக்கத் தொடங்கி விட்டார்கள் 'அரசு எவ்வழி அவ்வழி மக்கள்' எ பதை நீர் மறக்கக் கூடாது.''

''நாம் புலவர்களாயிற்றே? இடி துரைத்து மன்னருக்கு நேர்வழி காட டுவது நம் கடமையாயிற்றே?''

''குலோத்துங்க சோழரின் ஆட் யென்றால் நீ கூறுவதுபோல் செய்ய லாம். அப்படிச் செய்வதற்கே இடம் வைக்காமல் அவரும் செங்கோல் செலுத்தி விட்டார். அறவோர், புலவர், வீரர், வணிகர், உழவர் இப்படி ஒவ்வொரு துறையில் உள்ளவர்களோடும் பழகி நாட்டு மக்களின் நிலையை ஆராய்ந்து அறிந்தார். தவறு நேரும் போது இடித்துரைக்கும் புலவர்களின் மெய்த் துணிவை அவர் பாராட்டினார். ஆனால் இப்போது இளைய சக்கரவர்த்திகளிடம் இடித்துரைக்கப் போனால் அவர் நம்மையே செம்மையாகப் புடைத்து வெளியே தள்ளுவார். அறிவும் புலமையும் எங்கே இருக்கிறதோ, அங்கே தான் அறிவுக்கும் புலமைக்கும் மதிப்பு!''

''நாளைக்கே நான் போய்க் காணப் போகிறேன், இளைய சக்கரவர்த்திகளை'' என்று வீரம் பேசினார் மறு புலவர். ''போய், 'உம்முடைய நாட்டில் சிவத் துரோகம், இராசத் துரோகம், நாட்டுத் துரோகம் மூன்று துரோகங்களும் தலையெடுக்கின்றன; விழிப்போடு இருந்து கொள்ளும்' என்று இடித்துரைக்கப் போகிறேன்.''

''புதிய செய்திகளைக் கூறுகிறீரே!''

''ஆமாம்'' என்று குரலைத் தணித்துக் கொண்டு மெல்லப் பேசலானார் மற்றவர். ''தஞ்சைக் கோட்டத்துச் சிவபுரம் கோயிலின் தன பண்டாரத்துப் பொருள்களை அங்குள்ளவர்களே களவாடி விட்டனர். அம்மனின் திருமேனியை அழகுபடுத்தும் பொன்னாபரணங்களைத் தங்களுடைய பரத்தையர்களுக்கு வழங்கினர். இன்னும்....''

''சிவத் துரோகம்! சிவத்துரோகம்!'' என்று செவிகளைப் பொத்திக் கொண்டார் புலவர்.

''இது மட்டுமா? அரசரின் ஆணைக்குக் கீழ்ப்படியும் வழக்கம் எங்குமே குன்றி வருகிறது. நாட்டு மக்களுக்குத் துரோகம் செய்து விட்டு, அவரவர்கள் கையூட்டுப் பெற்றுப் பொருள் சேர்க்கிறார்கள். ஆணைகளை நிறைவேற்ற வேண்டியவர்களே ஆணைகளை மீறுகிறார்கள்.''

# கேட்டின்மூலம் நாள்முழுவதும் வாய் துர்நாற்றத்தை
# ற்றி பற்கள் சொத்தையாவதையும் தடுங்கள்!




ஏனெனில், ஒரே தேய்ப்பில் கால்கேட் டெண்டல் க்ரீம் துர் நாற்றத்தையும் சொத்தையையும் உண்டாக்கும் கிருமி களில் 85 சத விகிதத்தை ஒழிக்கிறது.

கால்கேட் உடனடியாக வாய் துர் நாற்றத்தை 10ல் 7 சந்தர்ப்பங்களில் அகற்றுகிறது என்பதையும், உணவு சாப்பிட்டவுடன் கால்கேட்டினால் பற்களைத் துலக்கும் முறையால், பற்பசை வரலாற்றிலேயே இதுவரை கண்டிராத பெருமளவில், ஏராளமான வர்களுக்குச் சொத்தை ஒழிக்கப் படுகிறது என்பதையும் விஞ்ஞான பரீட்சைகள் நிரூபித்துள்ளன: இந்த சாதனை கால்கேட் ஒன்றுக்குத்தான் உண்டு!

சாப்பிட்டவுடன் வாயை கொப்பளித் தால் மட்டும் போதாது—சாப்பிட்ட வுடன் வழக்கமாக கால்கேட் டெண்டல் க்ரீமினால் உங்கள் பற்களை நன்றாகத் துலக்குங்கள். இதன் வீரியமும், ஊடுருவும் தன்மையுமுள்ள நுரை பற்களின் இடைவெளிகளிலே புகுந்து, சொத்தைக்கும், துர் நாற்றத்துக்கும் காரணமாக இருக்கும் அழுகிப்போன ஆகார அணுக்களை அகற்றுகிறது.

கால்கேட்டில் கிடைத்திருக்கும் அதன் நறுமணத்தினால், குழந்தைகள் அதனாலேயே பல் துலக்க விரும்புகிறார்கள்.




கமாக கால்கேட் உபயோகித்தால், அது:

- துர் நாற்றத்தை அகற்றுகிறது
- சொத்தையைத் தடுக்கிறது
- பற்களை அதி வெண்மையாக வைத்திருக்கிறது




நீங்கள் பற்பொடியை விரும்பி னால், இந்த பலன்கள் அனைத்தை யும் கால்கேட் டூத் பவுடர் மூலம் அடையலாம். ஒரு டப்பி பல மாதங்களுக்கு வரும்.

ரிசுத்தத்திற்கும், வாயில் நறுமணம் கமழவும், வெண்ணிற பற்களைப் பெற
யும் உலகத்திலேயே பெரும்பாலான மக்கள் மற்றெல்லா பற்பசைகளையும்
விட கால்கேட்டையே பெரிதும் விரும்புகிறார்கள்.




நீங்களே ஒப்புக்கொள்வீர்கள்



# டாடா-ஃபின்லே

## தேயிலை

ஈடில்லாத தேயிலை!

**புத்தம் புது தேயிலை**

•

**சுவையுள்ள தேயிலை**

•

**சிறந்த தேயிலை**

**டாடா-ஃபின்லே** தேயிலை பருகுவீர்;
உன்னதத் தேயிலை இன்பம் எய்துவீர்!



பின்வரும் ஐந்து
ரகங்களில்
கிடைக்கிறது:

ப்ரெஸ்டிஜ் டார்ஜிலிங்
லலித் இலைத் தேயிலை
மிலாப் இலைத் தேயிலை
பஹாதுர் தூள் தேயிலை
ஷான் தூள் தேயிலை



''தண்டிப்பதற்கு ஆண்மையில்லாத ா இளைய சக்கரவர்த்தி?''

''யாராவது இந்த நாட்டில் முத ் தண்டிக்கப்பட வேண்டும் என்றால் து இராஜ இராஜன்தான்! கோயிலில் த் துரோகம் ஏன் நடக்கிறது? நாட் ் அரசத் துரோகமும் மக்கள் துரோக ம் ஏன் நடக்கின்றன? நம்முடைய ளைய சக்கரவர்த்திகளே இதற்கெல் ாம் வழி காட்டுகிறார். அவருக்குப் ரத்தையரிடம் மோகம் உண்டு. ியாட்டம், ஆடம்பரம், விண் ரயம் இவற்றுக்கெல்லாம் தன பண் ாரத்துப் பொருளை அவர் தண்ணீ ரக வாரி இறைக்கிறார். அவரிடம் ாய் இவ்வளவையும் நான் இடித் ுரைக்கப் போகிறேன்.''

''முதலில் உம்மால் அவரைக் காண டியாது. புலவர்களிடம் அவருக்கு ரே வெறுப்பு. அடுத்தாற்போல் நீர் ும் கூறப் போனால் உம்மை இடித்துப் ுடைத்துப் பாதாளச் சிறையில் தள்ளச் செய்வார். பாண்டிய நாட்டுப் புலவ ுக்கு நேர்ந்த கதி உமக்கே நேரலாம்.''

''சோழ வளநாடு என்ன ஆவது?''

''விஜயாலய சோழனும் உருவாக்கப்பட்டு, இராஜ ராஜன், இராஜேந்திரனைப் போன்றவர்களால் மகோன்னத நிலைக்குக் கொண்டு வரப்பட்ட இந்த மாபெரும் சாம்ராஜ்யத்தை நம்முடைய மூன்றாம் குலோத்துங்கர் எப்படியோ அவருக்கு ஆற்றல் இருந்தவரையில் கட்டிக் காத்து விட்டார். இனி என்ன ஆகுமோ சொல்ல முடியாது. தலைவனில்லாத நாடும் தலையில்லாத மனிதனும் ஒன்றுதானே?''

தூணருகில் இருந்த பாணன் மெல்ல அவர்களின் அருகில் நெருங்கி வந்தான். ''நான் பாடிப் பிழைக்கும் ஒரு பாணன். கங்காபுரியில் இளைய சக்கரவர்த்திகளைக் காண வேண்டும் என்ற ஆவல். காண முடியுமோ?''

''பாணர்களால் காண முடியாது. ஆனால் விறலிகள் மட்டும் அவரைக் காண முடியும். விறலிகளின் யாழ் இசையோ இன்குரலோ அவரை ஈர்க்காது. தோற்றத்தில் கட்டழகிகளாக அவர்கள் இருக்க வேண்டும்!'' என்றார் ஒரு புலவர்.

பாணனின் விழிகள் சிவந்தன.

முப்பதாம் அத்தியாயம்

# பாணனும் பாமினியும்

சோழ நாட்டைத் தாண்டித் திருமுனைப்பாடி நாட்டுக்குச் சென்றார்கள் அவர்கள். அதன் தலைநகரமான சேந்தமங்கலத்தில் அழகியதொரு விருந்தினர் மாளிகையில் தங்கினார்கள். பாணன் பகல் முழுதும் பல இடங்களில் அலைந்து விட்டுத் திரும்பினான். அடுத்த வாரமே காஞ்சிப் பெருநகரை நோக்கி யாத்திரையைத் தொடர்ந்தனர்.

''இப்படியே நாம் தினந்தோறும் ஊர் ஊராகச் சுற்றி வரலாம் போல் தோன்றுகிறது. சோழ வள நாட்டுக் காட்சிகளை என்றால் என்றுமே மறக்க முடியாது'' என்றாள் விறலி.

''அழகான நாடு; வளம் நிறைந்த நாடு; ஆனால் இவ்வளவு செல்வமிருந்தும் இந் நாட்டில் துன்பம் மிகுந்து விட்டதே. நம்முடைய பாண்டிய நாட்டில் இது போன்ற துரோகங்கள் தலையெடுக்காமல் பார்த்துக் கொள்ள வேண்டும். பெரிய பாண்டியர் விழிப்போடுதான் இருக்கிறார். விழுப்பரையரின் விழிகளும் உறங்குவதில்லை'' என்றான் பாணன்.

''சோழ நாடு இந்நிலைக்கு வந்திருப்பது நம் பாண்டியருக்குத் தெரியுமா?''

''தெரிந்து கொள்ள வேண்டியது அவர் கடமை'' என்றான் பாணன்.

காஞ்சிப் பெருநகரத்துக்கு அவர்கள் வந்து சேர்ந்தார்கள். எப்போதும் சுறுசுறுப்பும் கலகலப்புமாக விளங்கக் கூடிய நகரம் அது. சோழசாம்ராஜ்யத்துப் பெரு மாளிகைகளும் அந்த நகரத்தின் அழகுக்கு அழகு செய்தன. பல நாட்டு மக்கள் குழுமியுள்ள இடம் அது. அறச்சாலைகள், கல்விக்கூடங்கள், கோயில்கள், சமணப் பள்ளிகள், அங்காடிகள் எல்லாமே அங்கு உண்டு.

போர்வீரர்களும் அவர்களது குடும்பத்தினரும் நிறைந்திருக்கும் தெருக்கள் அங்கே இருந்தன. கோசலநாட்டுப் படையினருக்கு அது தெற்கு எல்லை. சோழ சாம்ராஜ்யத்துக்கு வடக்கு எல்லை. இரண்டு சாம்ராஜ்யங்களுமே நெருங்கிய உறவு பூண்டிருந்ததால் அங்கே பொருள் வளமும் கலை வளமும் மிகுந்திருந்தன.

திருமுனைப்பாடி நாட்டுக் கோப்பெருஞ்சிங்கனுக்கும் அங்கே ஒரு தனி மாளிகை இருந்தது. அங்கு போய் இறங்கினார்கள் பாணனும் விறலியும்.

அங்கு அவர்களுக்கு நடைபெற்ற விருந் தோம்பலைக் கண்டு திகைத்தாள் விறலி.

''நாம் கற்ற வித்தைகளைக் காட்டும் நாள் வந்துவிட்டது. யாழை எடுத்துக் கொள்'' என்றான். தோலால் இழுத்துக் கட்டப் பெற்ற இசைக் கருவியான தடாரியை எடுத்துக் கொண்டான். விரல்கள் அதில் விளையாடின. நாத வெள்ளம் பொங்கியது. விறலியும் தனது யாழைக் கரத்திலேந்திக் கொண்டு அதன் நரம்புகளை மீட்டி இசை கூட்டினாள்.

அவர்கள் கோசல நாட்டுப் பெரு மாளிகையின் முன்னே போய் நின் றார்கள்; இசையைத் தொடங்கினார்கள்.

சிறிது சிறிதாக அவர்களுடைய விரல்களுக்கு வேகம் பிறந்தது. வீர நரசிம்மனின் பேராண்மையையும் அவ னது தந்தையின் பேராற்றலையும் கூறிக் கணீரெனக் கவி பாடினான் பாணன். வாயிற்காவலர்கள் மெய்ம்மறந்தனர்.

வீர நரசிம்மன் அப்போது துவார சமுத்திரத்தில் இருந்தார். காஞ்சியில் அவர் இல்லை. அந்தச் செய்தியைப் பாண னிடம் கூறுவதற்கு மறந்தவர்களே போல் அவர்கள் இசையில் மூழ்கினர்.

மேல்மாடத்தின் சாளரம் திறக்கப் பட்டது. ஒரு மதிமுகம் மாளிகை வாயிலை எட்டிப் பார்த்தது. பாணனின் குரல் சுழன்று சுழன்று சாளரத்தை நோக்கி மேலே எழும்பிச் சென்றது: குரலு குரியவனை அங்கிருந்த மதிமுகத்தா கண்டு விட்டான் போலும்!

எப்படி அவன் முகப்பு வாயி வந்தடைந்தான் என்பது அவளுக் தெரியாது. படிகளில் தாவித்தா வந்தானா? அல்லது பறந்துதான் வ தானா? சாளரத்தில் தோன்றிய முக நேருக்கு நேர் தோன்றி விட்டது.

வரவேற்கக்கூட மறந்து அ னுடைய பாடலிலும் அதன் இசை லும் ஒன்றிப் போய் நின்றாள் அவள் பாணனின் தடாரி முழக்கத்தில் இ போது ஆனந்தம் துள்ளிக் கொண்டிரு தது. அவனைக் கண்டு புன்முறுவ பூத்துக் கொண்டே அவன் பாடினான்.

பாமினி இன்னும் பாணனை மட் லுமே பார்த்து நின்றாள். அவனருகி விறலி ஒருத்தி வியப்பும் திகைப்புமா நின்று கொண்டிருப்பதையோ, அவள் விரல்கள் இந்தக் காட்சியைக் கண்ட பிறகு, யாழில் தடுமாறித் தவிட் பதையோ பாமினி காணவில்லை.

''வாருங்கள் புலவரே!'' என்று தேனினும் இனிய குரலில் அந்தப் பாணனை உள்ளே அழைத்தாள் அவள்.

'புலவரே!' என்று அவள் அழைத்த சொல் விறலிக்குச் சுருக்கென்று தைத் தது. இவர் புலவர் என்பதை அவள் எப்படி அறிந்தாள்? (தொடரும்)

## அன்றே செய்த எச்சரிக்கை!

பதினான்கு ஆண்டுகளுக்கு முன்பு, 1950ம் வருஷத்தில் இந்தியா குடியர சாக ஸ்தாபிதமானபோது 'கல்கி' வெளியிட்ட சிறப்பு மலரில் 'தருமமே ஜெயம்' என்ற தலைப்பில் ராஜாஜி எழுதியுள்ள கட்டுரையைப் படிக்கும் போது அவரது திர்க்கதிருஷ்டியை எண்ணி ஆச்சரியமடைகிறோம். அக்கட்டுரை யில் சில பகுதிகள்:

தருமத்துக்குப் பயந்து நடக்க வேண்டும். அப்படி நடந்தால் சுதந்திர வாழ்க்கை நிற்கும். இல்லையேல் கட்டாய அரசாங்க விதிகள் வரவரப் பெருகிக் கொண்டே போகும். முடிவில் சுதந்திர வாழ்க்கையை இழந்து அடிமை அடக்குமுறை வாழ்க்கை யில் மறுபடியும் அகப்பட்டுக் கொள்ளுவோம்.

அந்நிய ஆட்சி ஒன்றே அடிமை வாழ்க்கை என்று எண்ண வேண்டாம். அந்நிய ஆட்சியே இல்லாமல் நரகத்துக்குச் சமமான சுதந்திரமற்ற அரக்க சுய ஆட்சியை நாமே உண்டாக்கிக் கொள்ளலாம். ஆத்ம சுதந்திரத்துடன் ஒவ்வொருவரும் கடமைகளை மகிழ்ச்சியுடன் நிறைவேற்றிக் கொண்டு வாழ்க்கையை நடத்துவது ஒரு வழி. வாழ்க்கை அனைத்தும் அரசியல் பார்வைக்கும் கட்டாய விதிகளுக்கும் உட் பட்டு மக்கள் பயந்து பயந்து நாட்களைக் கழிப்பது மற்றொரு வழி. இரண்டில் ஒன் றன்றி வேறு வழியில்லை. முதலாவதான முறை தவறினால் இரண்டாவது அவசியம் வந்தே தீரும்.

கடமைகளைத் தருமத்துக்குப் பயந்து ஆத்ம சுதந்திரத்துடன் மக்கள் நிறை வேற்றுவது மேலா, அல்லது வாழ்க்கையை ஒரு பலாத்கார அரசாங்க அமைப்புக்கு ஆட்படுத்திக் கொள்வது நலமா? குடியாட்சும் ஆத்ம சுதந்திரமும் இரண்டும் வேண்டின் தருமத்தைக் காத்து நடக்க வேண்டும்.

## கணவரின் சுகமே
## உங்கள் சுகம்...

உங்கள் கணவர் ஆரோக்கியத்தோடு, ஆனந்தமாய் இருப்பது அவசியம். அதற்காக நீங்கள் வீட்டு வேலைகளைச் செய்வதோடு, அவருடைய உடைகளை வெளுத்து, அவை மடிப்புக் கலையாமல் இருக்கச் செய்யுங்கள். சத்துள்ள உணவை நேரத்தில் அவருக்கு அளியுங்கள் ... தவிர, தினந்தோறும், கூடுதலான சக்தியைத் தரும் போர்ன் வீடா அவருக்கு அளியுங்கள்.

**BOURN-VITA**

சக்திக்கும் வலிமைக்கும்.

தயாரிப்பாளர்கள்
Cadbury's



தீபம் இதைத்தான் ஒளிரச் செய்யும், இதை ஒளிரச் செய்யாது என்று இடையா ரவைர்? மாயையின் மூட்டத்திலிருந்து விடுபட்ட ஆத்ம தீபத்தின் தன்மையும் இதுவே. த்தன்மையை எங்கு காணலாம் எனில், ராஜாஜியிடம் எனப் பணிச்சென்று கூறலாம். சுயம் காசமான ஆத்ம தீபத்தை ஸ்வச்சமாகக் காத்து வரும் அவரது திருவுரு எந்தத் துறையில் டாலும் அந்தத் துறையை ஒளிரச் செய்கிறது. அரசியலா, ஆத்மீகமா, இலக்கியமா, ிந்த கலைகளா, ஸயன்ஸா எல்லாவற்றிலும் தெளிந்த நீர்போல் அவரது மதி பாய்ந்து வற்றைச் சுத்தப்படுத்தி நமக்கும் தெளிவுற எடுத்துக் காட்டுகிறது. பி. ஸி. ஜி. தடுப்புப் போராட்டத்திலும், அணு ஆயுத எதிர்ப்புப் போராட்டத்திலும் அவர் வெளிப்படுத்தி ள்ள அறிவு வைத்திய நிபுணர்களையும் ஸயன்ஸ் நிபுணர்களையுமே வியப்பில் ஆழ்த்தியிருக் றது. கலைகளின் சூக்ஷ்மங்களில் அப்பெருமகன் பெற்றுள்ள தேர்ச்சிக்கு அடியேன் றனும் அவரது பொன் மொழிகள் சான்று பகர்கின்றன: ★




துவேஷமும் கோபமும் கலைகளுக்குப் பக்கத்திலும் வரக் கூடாது. வெள்ளைத் தாமரைப் பூவில் இருக்கிறாள் கலைத் தெய்வம். அவள் வாகனமும் மெல்லிய அன்னப் பறவை. முரட்டுத்தனத்துக்கும் கலைமகளுக்கும் வெகு தூரம். மலராஸனம் நசுக்கப்படாமலும் அன்னம் மிரண்டு ஓடாமலும் கலைமகளிடம் வரம் பெறச் செல்ல வேண்டும்.

ஃ ஃ ஃ

சரியான முறையில் எழுதப்பட்ட விமரிசனங்கள் மென்மேலும் நல்ல பண்டங்கள் உண்டாவதற்கு வேண்டிய ஊக்கம் ஊட்டி வழி காட்டும் கருவியாகவே பயன்படும். புதிதாகத் தோன்றியதொரு கதையாயினும் பாட்டாயினும் நாட்டியமாயினும் வேறு எதுவாயினும் அது வனத்தில் தோன்றிய ஒரு புது மலரைப் போலாகும். அதை மிக அன்புடனும் கவனத்துடனும் தொட வேண்டும். அநாகரிகமாகப் பிடித்துக் கசக்கி விடக் கூடாது. விருந்தினனைப்பற்றித் திருவள்ளுவர்,

**மோப்பக் குழையும் அனிச்சம்**
**முகம் திரிந்து**
**நோக்கக் குழையும் விருந்து**

என்று அழகாகவும், அழகுக்கு மேல் உண்மையாகவும் சொல்லியிருக்கிறபடி, மலர்ந்த முகத்தோடும் அருமை நீங்கிய உள்ளத்தோடும், வந்த விருந்தினனை உபசரிக்க வேண்டியதைப் போலவே, கலையுலகத்தில் தோன்றிய விருந்தையும் அருமை, பகை ஏதுமின்றி விமரிசனக் கலைஞன் எதிர்கொண்டு உபசரித்து எழுத வேண்டும். அவ்வாறு செய்வதே விமரிசன மரியாதை.

குழந்தையை வளர்த்துப் பாலிப்பதைப் போலவே அன்பின் மூலமாகத்தான் கலையை வளர்க்க வேண்டும்....

அநாகரிகமோ ஆபாசமோ கண்டால் அதைக் கண்டிக்கத்தான் வேண்டும். அநாகரிகமும் ஆபாசமும் கலைக்குப் பகையாகும். அதைப் பற்றித் தாட்சிண்யம் காட்டக் கூடாது...

எது எவ்வாறாயினும் ஒரு விதி உண்டு. மனத்தில் துவேஷமோ, பொறாமையோ இருப்பின் அந்த மனப்பான்மை விமரிசனத்துக்கு உதவாது. விமரிசனம் செய்ய ஒரு விஷயத்தை எடுக்கும்போது தன் உள்ளத்தில் ஒருவன் பொறாமையின் சாயலைக் கண்டாலும் அந்த விமரிசன வேலையில் இறங்கவே கூடாது... துவேஷமானது அறிவுக்கும் உண்மை மொழிக்கும் பெரும் பகை. மனத்தில் பொறாமையோ துவேஷமோ இருந்தால் அந்த எண்ணங்கள் இல்லாத வேறு யாராவது விமரிசனம் எழுதட்டும் என்று இருந்து விடவேண்டும்.

கலை கலையாகவே இருக்கும் வரையில் அபாயமிருக்கவில்லை. யார் எது சொன்னாலும் பண்டத்தின் அழகு தன் வேகத்தைச் செலுத்திக் கொண்டே போகும். உண்மைக்கு அபாயமுண்டாகாது. ஆனால் கலையுடன் பணம் வந்து கூடிற்றெனில், உடனே பொறாமையும் துவேஷமும் தோன்றிவிடுகின்றன.... பண எண்ணம் நிறைந்த மனத்தில் கலை ரஸத்துக்கு இடமேது?

ஃ ஃ ஃ

சமூக வாழ்க்கைக்கு இன்றியமையாதவை எவை என்றால் ரயிலும் தபாலும் என்று சொல்லத் தோன்றும். அது சரியல்ல. ஒரு மரத்துக்கு அவசியமானவை மண்ணும் தண்ணீரும்தான் என்று சொல்வது போலாகும். உண்மையில் தாவரத்துக்கு மண்ணையும் தண்ணீரையும் விட உணவுச் சத்தும் சக்தியும் கொடுப்பது கண்ணுக்குப் புலனாகாத காற்றில் கலந்துள்ள கரியமில வாயுவும் சூரிய வெளிச்சமும்தான். அதைப் போலவே நமது வாழ்க்கைக்கு இன்றியமையாதவை ராமாயணமும் பாரதமும். அந்த நூல்களின் சக்தியைக் கண்ணால் பார்க்க முடியாது. ஆனால் நம்முடைய சமூகாயத்துக்கே சக்தியும் உரமும் அந்தக் காவியங்கள் தருகின்றன.

நூல்களை இரு வகையாக வகுக்கலாம். ஒரு வகைக்குச் சொல்லுக்குள் மூடிக் கிடக்கும் பொருளே உயிர். மற்றொரு வகைக்கு வடிவமே உயிர். விஷயங்களை விளக்கித் தரும் நூல்களான ரசாயனம், வைத்தியம், தேச சரித்திரம், பூகோளம், கணிதம் முதலியவை பொருளில் உயிர் கொண்டவை. பாடல்களும் பெருங் காவியங்களும் பொருளுக்குக் கவிஞர் தந்த வடிவழகிலேயே தம் உயிரை வைத்து நிற்கின்றன.

செய்யுளைப் பிரித்து உரை நடையில் எழுதினால் அந்தப் பொழிப்புரையில் உயிர் இருக்காது. கவிஞர் கொடுத்த வடிவத்தைச் சேதித்து விட்டால் உயிர் மாண்டு போகிறது. ஒரு கணித நூல் அல்லது வைத்திய நூல் அவ்வாறு அல்ல...

கம்பன் பாட்டையோ அல்லது பாரதியார் பாட்டையோ உரை நடையில் எழுதினால் பொருளுக்குச் சேதமில்லை. ஆனால் உயிரில்லாத உடல்தான் நிற்கும்.... அதனோடு பதவுரையும் 'விசேஷ' உரையும் இலக்கணக் குறிப்பும் எழுதிவிட்டாலோ அது சவச் சோதனை ஆலயமாகத்தான் பயன்படும். பிரேத சோதனையில் அறிவு வளர்ச்சிக்கு மிக்க பயன் உண்டு. ஆனால் அழகில்லை; ஒளியில்லை; உயிரில்லை; பாடலின் தனிப் பயன் இல்லை.

யானை இருந்தாலும் ஆயிரம் வெள்ளி, இறந்தாலும் ஆயிரம் வெள்ளி என்பதுபோல் சில நூல்கள் இரு விதத்திலும் பயன் தரும். வால்மீகியை நான் சொல்வதும் இந்தக் கணக்கே. மொழிபெயர்த்த ராமாயணத்துக்கும் இறந்துபோன யானையைப் போல் கொஞ்சம் விலையுண்டு.

—('சக்கரவர்த்தித் திருமகன்' தொடக்கம்)

ஃ ஃ ஃ

1951ம் ஆண்டில் திருவையாற்றில் ஸ்ரீ தியாகராஜ ஸ்வாமிகளின் ஆராதனை உற்சவத்தில் நிகழ்த்திய உரை:

''கர்நாடக சங்கீதத்தில் வழங்கும் ராகங்கள் மணியையும், வெள்ளியையும், தங்கத்தையும் போன்றவை. அந்த ராகங்கள் ஒவ்வொன்றையும் எடுத்துப் பரம பக்தரான தியாகராஜர் தம் இஷ்ட தெய்வமான ஸ்ரீ ராமனின் பிம்பங்களாகச் செய்தார். தியாகராஜ கீர்த்தனம் ஒவ்வொன்றும் ஸ்ரீ ராமனின் ஒவ்வொரு வடிவமாகும்.

''தவனம் (மருக்கொழுந்து) என்கிற பச்சிலை மணம் மிக்கது. கடவுளுக்கு அர்ப்பணம் செய்யக் கூடியது. ஆனால் அதை மாட்டின் முன்னும் வைத்தால் மாடு என்ன செய்யும்? தவனத்தின் மணத்தை அதனால் அனுபவிக்க முடியுமா? அதையும் ஒருவகைப் புல் என்று எண்ணித் தின்னப் பார்க்கும். பக்தி ததும்பும் தியாகராஜ கீர்த்தனங்களை வெறும் பாட்டாகக் கருதி அனுபவிப்பது தவனத்தைத் தின்னப் பார்ப்பது போலத்தான். பக்தி பாவத்தை உணர்ந்து பரவசமடைந்து பாடுவதும் கேட்பதும்தான் உண்மையாகத் தியாகராஜ கீர்த்தனங்களை அனுபவிப்பதாகும்.''

ஃ ஃ ஃ

உலகத்தில் இரண்டு விதமான அற்புதங்கள் இருக்கின்றன. ஒன்று சிருஷ்டியில் புதிது புதிதாகத் தோன்றும் அற்புதம். இன்னொன்று பழைய காரியமாயிருந்தாலும் தினம் தினம் பார்க்கும்போதெல்லாம் புதிய அழகு தோன்றும் அற்புதம். பரதநாட்டியம் இரண்டாவது வகை அற்புதத்தைச் சேர்ந்தது.

ஃ ஃ ஃ

புதிய அறிவை அடைந்து விட்டோம் நவீன நூல்களைப் படித்து விட்டோம் என்று நம்முடைய பழைய விழாக்களை விட்டுவிட வேண்டாம். பாமரர்களும் கல்வி கற்றவர்களும் பணக்காரர்களும் ஏழைகளும் ஒன்று கூடி நடத்தும் விழாக்கள் சமுதாயத்தின் உயிருக்கு உயிர். நாடகத்தில் போட்டுக் கொண்ட பட்சி வேஷத்தை நம்பி ''இனி எனக்கு இறகுகள் இருக்கின்றன, ஆகாயத்தில் பறக்கலாம்'' என்று காலை வெட்டிக்கொள்ளலாமா? புதுக் கல்வியை நம்பிப் பழைய சமுதாய விழாக்களையும் வேடிக்கை விளையாட்டுக்களையும் விட்டுவிடுவது அப்படித்தான் ஆகும். பூவும் காயுமே பிரதானம் என்று இலைகளையெல்லாம் பறித்துவிட்டால் சீக்கிரத்தில் செடியே உலர்ந்து போய்விடும்.

ஃ ஃ ஃ

1949ம் ஆண்டு இடையில் ஒரு முறை அரிசிப் பஞ்சம் உக்கிரமாயிற்று. அப்போது கவர்னர் – ஜெனரலாக இருந்த ராஜாஜி சோளம், ராகி முதலிய புன்செய் தானியங்களை வாய்க்குகந்தபடி சமைத்து உண்ணலாம் என்று யோசனை கூறிவந்தார்.

வாய்ப்பேச்சோடு நில்லாமல் தமது மாளிகையின் தோட்டத்தைத் தாமே உழுது சோளத்தை விதைத்தார். ஜூன் 28ந் தேதி விதைத்த சோளம் ஆகஸ்ட் 8-ந் தேதி அறுவடை செய்யப்பட்டது. அந்த அருமையான சோளத்தை மாவாக அரைத்து எட்டயபுரம் பாரதி விழாவில் நடந்த புன்செய் தானிய சிற்றுண்டி சாலையில் வைப்பதற்காக, காலஞ்சென்ற 'கல்கி'யிடம் கொடுக்க விமான மார்க்கமாக அனுப்பி வைத்தார் ராஜாஜி. அதோடு நளபாகமாக எப்படி அதைப் பக்குவம் செய்வது என்பதையும் சகலகலாவல்லபரான ராஜாஜி அடியிற் கண்டவாறு விவரித்து எழுதினார்:

''ரொட்டியாகத் தட்டி நன்றாய்ச் சுட்டு எடுத்தால் பழ வெல்லத்துடன் சோள அடையும் ராகி அடையும் மிக ருசியாக இருக்கும். கூடக் கொஞ்சம் வெண்ணெய் சேர்த்து—அல்லது நல்ல எள் ஆட்டின எண்ணெயானாலும் சரி, சேர்த்து — நன்றாய்ப் பிசைந்து ஒட்டிச் சுட வேண்டும். சுடும் போது மேலே மூடினால் நல்ல பதனாகப் பக்குவமாகும். நாலுக் ஆசாமிகளுக்கு, புளித்த மோரில் கலந்து தோசையாக வார்த்துக் கொடுக்கலாம். எள்ளுத் துவையல்தான் இந்தப் பண்டங்களுக்கு நன்றாக இருக்கும்.''

# எந்த ஸ்டேஷனையும் தெளிவுடன் கேட்டு ரஸிக்க

## நேஷனல் எக்கோ

## அளிக்கும் கவர்ச்சியான புது மாடல்கள்

இந்தியாவில் ரேடியோ உற்பத்தியில் முன்னோடிகளான நேஷனல்–எக்கோ பெருமிதத்துடன் அளிக்கும் மூன்று புதிய மாடல்கள்: U-819, U/A-806, A-829. நேஷனல்–எக்கோவின் உன்னத தன்மைக்கு உதாரணமான இவை ஒவ்வொன்றும், தர நிர்ணய பரிசீலனைக்கு உட்படுத்தப்பட்டவை. இவற்றின் இயற்கையான, தெள்ளிய, நாதத்தை நீங்கள் பெரிதும் விரும்புவீர்கள். இன்றே உங்கள் அருகில் உள்ள நேஷனல்–எக்கோ வியாபாரியிடம் சென்று, நீங்கள் விரும்பும் ஸ்டேஷன்களை வைத்துக் கேளுங்கள்!

விலைகள் எக்சைஸ் ட்யூடி உள்பட: வரிகள் தனி.

**மாடல் U-819:**
ஏஸி/டிஸி ஸெட். 5 வால்வுகள், 3 வேவ் பாண்டுகள். பேக்லைட் பெட்டி.
ரூ. 298.00





**மாடல் 806:**
6 வால்வுகள், 3 வேவ் பாண்டுகள். நவீன மாதிரி அழகிய மரப்பெட்டி. மாடல் A.806, ஏஸி ஸெட். மாடல் U.806, ஏஸி/டிஸி ஸெட். ரூ. 395.00

**மாடல் A-829:** ஏஸி ஸெட். 6 வால்வுகள், 4 பாண்டுகள். பர்மனெண்ட் மாக்னெட் ஸ்பீக்கர்; பேஸ், ட்ரெபில், மற்றும் மீடியம் நாதத்துக்கான 3 புஷ் பட்டன் டோன் கண்ட்ரோல்கள். பாண்டுகள் தேர்வுக்கு பியானோ கீ அமைப்பு. ரூ. 481.00

**ஜெனரல் ரேடியோ & அப்ளையன்ஸஸ் லிமிடெட்**
பம்பாய் . கல்கத்தா . மதராஸ் . டில்லி - பெங்களூர் - ஸெகந்திராபாத் . பாட்னா

நேஷனல் எக்கோ [illegible] ரேடியோக்கள்

இந்தியாவிலேயே மிகப்பெரிய ரேடியோ ஃபாக்டரியின் தயாரிப்பு

JWT-GRA-3033 A

# லிஸ்டெரின்

## இரட்டிப்புப் பாதுகாப்பு இன்றும் என்றும்

லிஸ்டெரின் ஆன்டிசெப்டிக் பட்டவுடன் கிருமிகள் அழிக்கப்படுகின்றன. பல்லிடுக்குகளில் சிக்கியிருக்கும் உணவுப் பொருட்களை விரைவாகவும் சுத்தமாகவும் அகற்றுவதுடன் நாள் முழுவதும் உங்கள் சுவாசம் தூய்மையாகவும் இருக்க உதவுகிறது. லிஸ்டெரின் பற்பசை பற்களை வெண்மையாகவும் பிரகாசத்துடனும் வைத்திருக்கிறது. மேலும், அவை கெட்டுப்போகாமலும் பாதுகாக்கிறது.

உங்கள் குடும்பத்திலுள்ள அனைவருடைய வாய் ஆரோக்கியத்திற்கு உறுதியுடனும் விவேகத்துடனும் லிஸ்டெரின் அளித்து இரட்டிப்புப் பாதுகாப்புப் பெறுங்கள். காலையிலும் இரவிலும் லிஸ்டெரின் உபயோகியுங்கள்.







வார்னர் - இந்துஸ்தான் லிமிடெட்.

maa WL-3857 TAM

# 19. ரதமும் மனோரதமும்

உருமாறிய யூசப்கானின் உள்ளம்
மகையால் துள்ளிக் கொண்டிருந்தது.
கான்னதமாக விளங்கும் மகத்தான
ஒரு இந்து சாம்ராஜ்யத்தின்
ரகசியங்களை அறிந்து வருவதற்கு
ற்றலும் அனுபவமும் பெற்ற அந்நகர்
நக்கத் தன்னைத் தேர்ந்தெடுக்கச்
ய்த விதியை எண்ணி வியந்தவாறு
றி கடக்கலானான் காசிம்கானுகப்
பெயர் மாறிய யூசப்கான். பகைமை
ராட்டும் பாமினி சுல்தான்களான
தப்ஷாவும் நிஜாம்ஷாவுமே, யூசப்
னுக்கு விஜயநகரத்தின் அமைப்பை
ம் அங்கு நடந்து கொள்ள வேண்டிய
ழி முறைகளையும் பற்றி விளக்கிய
பாதே நகரின் செழிப்பை உயர்வா
த்தான் சொல்ல வேண்டி இருந்தது.
அப்படியானால் அதன் உண்மை நிலை
த்தகையதாக இருக்கும்?' என்று
ந்திக்கலாயிற்று காசிம்கானின்
ள்ளம். போர்ச்சுகீசியர் சிறப்பாகக்
றிப்பிட்ட 'பிஸங்கா' என்ற விஜய
கர சாம்ராஜ்யத்துக்குத் தன் கற்
னையில் ஓர் உருவம் கொடுத்துக்
கொண்டான் யூசப்கான். அந்நிய நாட்
டிலிருந்து வரும் அத்தனை குதிரை
களையும் வாங்கும் அந்த அதிசய நாட்
டின் எல்லையை அடைந்த
போது அந்தி சாயும் வேளை
யாகி விட்டது. விஜய
நகரப் பேரரசின் தாய்
நகரமான, துங்கபத்திரை
யாற்றின் வடகரையில்
உள்ள ஆனகொந்தி
நகரில் இரவு தங்கி
மறு நாள் பகலில்
தலை நகரத்துக்குப்
போகலாம் என்று திட்டமிட்டான்
அவன்.

அகமது நகர், கோல்கொண்டா,
பீஜப்பூர் ஆகிய பிரதேசங்களில் அவன்
கண்ட காட்சிகளுக்கும் விஜயநகரத்தை
அடுத்து வரும் போதே அவன் காணு
கின்ற காட்சிகளுக்கும் எத்தனையோ
வித்தியாசமிருந்தது. வளப்பம் மிகுந்த
தொரு நாட்டின் செழிப்பான இடங்
களையும் அதற்குரியோரின் இதயங்களை
யும் வழியெல்லாம் கண்டு களித்தான்.
விக்கிரக ஆராதனை வேரோடிப்போன
தொரு நாட்டில், வானுற ஓங்கி வசீகர
மான தோற்றத்துடன் கம்பீரமாகக்
காட்சியளிக்கும் ஆலயங்களின் கலை
யழகைக் கண்டு, அதை ஆக்கி வைத்த
பாரதக் கலைஞர்களின் கைத்திறனைப்
பாராட்டிக் கொண்டிருந்தது யூசப்
கானின் ரசிக உள்ளம். யாரிடம்
கேட்டாலும் 'விஜயநகரமா?' என்று
வியப்பும் மதிப்பும் பொங்கி வழியத்
தான் பேசினார்கள். இத்தனை சிறப்
புக்கு உரியதொரு நாட்டுக்கு எதிரா
கத் தான் செயல்பட வேண்டி இருக்
கிறதே என்ற வேதனை யூசப் கானின்
உள்ளத்தின் ஒரு மூலையில் இலேசாக
உறுத்திக் கொண்டுதானிருந்தது.



இருள் பிரியுமுன்னே உறக்கம் பிரிந்து எழுந்த காசிம்கான் ஒட்டகத்தையும் தன் உதவியாளர்களையும் வெப்பப் பிரயாணத்துக்குத் தயாராக்கினான். பட்சிஜாலங்களின் இன்னிசையோடு பகல் மலரும் வேளையில் துங்கபத்திரையாற்றைக் கடக்கும் பாலத்திலே காசிம்கானின் குதிரை விஜயநகரை நோக்கிப் போய்க் கொண்டிருந்தது. அவனுக்கும் முன்பாகவே சாரி சாரியாக மக்களும் மாட்டு வண்டிகளும் அந்தப் பாலத்தில் விஜயநகரை நோக்கிச் சென்று கொண்டிருந்தன. மறு கரையை அடைந்து, எனக்கு நிகர் எவருமில்லை என்ற இறுமாப்புடன் நிமிர்ந்து நிற்கும் கோட்டைச் சுவர்களை அண்ணாந்து பார்த்த யூசப்கான் ஆச்சரியப்பட்டுப் போனான். காலை இளங் கதிரவனின் மஞ்சள் வெய்யில் அந்த மங்கள நகரத்துக்குப் பொன் முலாம் பூசிப் பொலிவு கூட்டிக் கொண்டிருந்தது. உருக்கி வார்த்த தங்கத்தினாலாகிய கோபுரங்களின் பொற்கலசங்கள் ஒளி சிந்திச் சிரித்துக் கொண்டிருந்தன. சிறிச் சினந்து ஓடும் ஆழங் காண முடியாத துங்கபத்திரை ஆறு ஒரு புறமும், கரடு முரடாக ஓங்கி உயர்ந்த கற்பாறைகளை மறுபுறமும் இயற்கை அரண்களாகக் கொண்டு வியாபித்து நிற்கும் விஜயநகர சாம்ராஜ்யத்தின் இன்னொரு பக்கத்தை விரோதிகளின் நெஞ்சங்களைக் கலங்க வைக்கும் விண்ணை எட்டும் கோட்டைச் சுவர்கள் காத்து நின்றன. அது மலைத் தொடரை நோக்கி ஓடி உயர்ந்திருந்தது.

வடக்குக் கோட்டை வாயில் வழியாக யூசப்கான் வெற்றி கொள்ள முடியாத அந்த விஜயநகரத்தினுள் புகுந்தான். கோட்டை வாயிலிலும் மேலேயும் வேலேந்திய வீரர்கள் காவல் காத்து நின்றனர். மல்லர்களைப் போலத் தோற்றமளித்த அந்த வீரர்களின் உடற்கட்டைக் கண்டு வியப்பெய்தினான் வியாபாரியாக உள்ளே புகும் வீரன். காவல் வீரர்கள் திறந்த உடலோடு பரந்த மார்புடன் விளங்கினார்கள். கட்டுமஸ்தான அவர்களுடைய கால்களிலும் கைகளிலும் காப்பணிந்திருந்தார்கள். முகத்திலே முறுக்கி விட்ட மீசையும் தலையிலே முண்டாசும் அவர்களுடைய தோற்றத்துக்கு ஏற்றமளித்துக் கொண்டிருந்தன. இடையிலே தார்ப் பாய்ச்சிக் கட்டியிருந்த ஆடை முழங்காலுக்குச் சற்றுக் கீழே அதை மூடியபடி அமைந்திருந்தது. மற்றொரு துணியை முறுக்கினாற் போல மார்பின் குறுக்கே இடது தோள் மீதுபோட்டு வலப் பக்கத்து இடையில் வரும்படி முடிந்து கொண்டிருந்தார்கள். இந்தக் காவல் வீரர்களின் கூர்ந்த கண்கள் கோட்டை வாயிலில் நுழையும் ஒவ்வொருவரையும் அவர்கள் உருவத்தை மட்டுமல்லாமல் உள்ளத்தையும்கூட ஆராய்ந்து கொண்டிருந்தன. ஆனால் யாரையும் அவர்கள் தடுத்து நிறுத்தவில்லை. அயல்நாட்டு வியாபாரிகளை மரியாதையுடனேயே அனுமதித்துக் கொண்டிருந்தார்கள்.

யூசப்கான் தன் குதிரையில் அமர்ந்து கோட்டை வாசலை நோட்டம் விட்டபடி சற்று நேரம் தாமதித்தான்: காவல் வீரர்களின் சுறு சுறுப்பையும் வியாபாரப் பொருள்கள் உள்ளே போய்க் குவியும் வேகத்தையும் பார்த்து வியந்தவன், பிறகு குதிரையிலிருந்து கீழே இறங்கிக் கோட்டை வாயிலை நோக்கி நடக்கலானான். குதிரை ஒட்டகமும் மற்ற இருவரும் அவனைப் பின் தொடர்ந்தார்கள். காவல் வீரர்களின் பார்வை யூசப்கானின் மீது பதிந்தது. அவர்களில் தலைவனாகத் தோன்றியவன் வியாபாரியின் அருகே வந்தான். ''தங்களைப் பார்த்தால் அயல்நாட்டவரைப் போலத் தோன்றுகிறதே! எங்கிருந்து வருகிறீர்கள்?'' என்று கேட்டான்.

யூசப்கான் தன் வேஷத்துக்கு ஏற்றபடி காவல் வீரனுக்குச் சலாமிட்டு, ''நான் அரேபியாவிலிருந்து வருகிறேன். தரைமார்க்கமாகவே பல நாடு நகரங்களைப் பார்த்துக் கொண்டு வரும் போது சிறப்புமிக்க உங்கள் நாட்டைப் பற்றியும் கேள்விப்பட்டேன்......'' என்றான்.

''அந்நிய நாட்டவர்கள் அனைவரையுமே எங்கள் நண்பர்களாக, விருந்தினர்களாக வரவேற்கும்படி கட்டளை பிறப்பித்திருக்கிறார் எங்கள் மன்னர். ஐந்தாவது கோட்டை வாசல் அதிகாரியிடம் உங்களை அறிமுகப்படுத்திக் கொண்டால் அவர் உங்களுக்கு ஏற்ற வசதிகள் செய்து தருவார்'' என்றார் காவல் அதிகாரி.

யூசப்கானின் விழிகள் வியப்பால் விரிந்தன. ''இதைப் போன்று இன்னும் உள்ளே நான்கு கோட்டைகள் உள்ளனவா?'' என்று கேட்டான்.

''நான்கல்ல, இன்னும் ஆறு கோட்டைகள் இருக்கின்றன. ஏழு கோட்டைகளைக் கொண்டது எங்கள் நகரம். ஏழாவது கோட்டையில் தான் மன்னரின் அரண்மனை. உங்களைப் போன்ற அயல்நாட்டு வியாபாரிகளும் யாத்ரிகர்களும் தங்குவதற்காகவே ஐந்தாவது கோட்டையினுள் சகல வசதிகளும் கொண்ட ஒரு விசேஷ விடுதி உள்ளது'' என்று கூறி விடைபெற்றுக் கொண்டான் அந்த வீரன்.

'ஏழு கோட்டைகள் சூழ்ந்த நகரம் என்றால் இதன் விஸ்தீரணம் என்னவாக இருக்கும்?' என்று சிந்தித்தவாறே குதிரை மீதேறினான் யூசப்கான். பாவம்! அவனது கற்பனைக்கு அப்பாற்பட்டதாக அமைந்திருந்தது அந்த அற்புத நகரம். அதன் சுற்றளவு அறுபது கல் என்பது அவனுக்குத் தெரியாது. வெளிக் கோட்டைச் சுவரிலிருந்து வடக்கு வாயிலுக்கும் தெற்கு வாயிலுக்கும் இடைப்பட்ட நீளம் எட்டுக் கல்லாகும். மேற்கு – கிழக்கு வாயில்களுக்கு இடையில் உள்ள தூரமும் ஏறக்குறைய இதுவேதான்.

முதல் கோட்டையைத் தாண்டிச் சென்ற யூசப்கானைக் கழனிகளில் துள்ளும் கயல்கள் கவர்ந்தன. துங்கபத்திரையாற்று நீரின் பாசனத்தில் பயிர்கள் பச்சைக் கம்பளமாகப் பரந்திருந்தன. முதல் கோட்டைக்கும் இரண்டாவது கோட்டைக்கும் இடையில் விஜயநகர சாம்ராஜ்யத்தின் வளப்பமிக்க விளைநிலங்கள்தான் இருந்தன. நாட்டின் உயிர்

டியான உணவு தானியங்களின் உற்பத்தி ) மன்னர் கொண்டிருந்த அக்கறையையும் ளைப் பொன்றுக்கும் வல்லமை கொண்ட களின் உழைப்பின் உயர்வையும் விளக்ம் வகையில் பயிர்கள் ஆனந்தமாக அசைந்டி நின்று 'இங்கு பஞ்சமோ பட்டினியோ டையாது' என்பதைப் பறைசாற்றிக்கொண்ருந்தன. இரண்டாவது கோட்டையைத் ாண்டிய போது பழ மரங்களைக் கொண்ட ஞ்சோலைகளும், பூந்தோட்டங்களும்அவை ளைப் பராமரிப்போரின் ல்லங்களுமாகக் காட்சி ளித்தன. மூன்றாவது காட்டைச் சுவர் வரை ந்தக் குளுமையான காட்சி ளைக் கண்டு மகிழ்ந்தவ ருக்கு அதைத் தாண்டியதும், அவன் நாடி வந்த சய்திகளைத் தாங்கி நின்ற ாட்சிகள் தோன்றலாயின. ூன்றாவது கோட்டைக்கும் ான்காவது கோட்டைக்கும் இடைப்பட்ட பகுதியில்தான் விஜயநகரத்துப் படை வீரர்களின் இல்லங்கள் பாங்குடன் இடம் பெற்றிருந்தன. ஆங்காங்கே குதிரைகள் மர நிழலில் கும்பல் கும்பலாக நிறுத்தப்பட்டிருந்தன. வீரர்கள் போர் விளையாட்டுக்களில் பயிற்சி எடுத்துக் கொண்டிருந்தார்கள். திரும்பிய பக்கமெல்லாம், கண்ணுக்கு எட்டிய தூரம் வரை குதிரைகளும், யானைகளும், வீரர்களுமாகத்தான் காட்சியளித்தது கோட்டையின் அந்தப் பகுதி. வில்லை வளைத்து வல்லமை காட்டுவோரையும், வெற்றி வாகை சூட வேலை வீசி நிற்போரையும், வாளைச் சுழற்றும் காளையரையும் கண்ட பூசப்கான் தன் ஆவலை அடக்கிக் கொண்டான். எதையும் வியப்போடு பார்த்து வந்த அவனை இது வரை அந்நிய நாட்டினன் என்பதினால் எவரும் சந்தேகக் கண்கொண்டு நோக்கவில்லை. அந்தப் போர்வைக்குள் இருந்தபடியே தனது காரியங்களைச் சாதித்துக் கொள்ள விரும்பிய அவன் போர்ப் படைகளுள்ள கோட்டையின் இந்தப் பகுதியில் அதிக அக்கறை காட்டி நிற்பது சந்தேகத்தை வளர்க்கும் என்று அவசரமாக அந்தக் கோட்டையைக் கடந்து அடுத்த கோட்டைக்குள் புகுந்தான்.

விஜயநகரத்தின் குடிமக்கள் வாழும் பகுதி நான்காவது கோட்டையை அடுத்துள்ள இடைவெளியில்தான் இருந்தது. நகரின் நாகரிகத்தை வளர்க்கும் நானாவிதமான ஜனங்களும் இந்தப் பகுதியில்தான் வசித்து வந்தார்கள். அழகான, அமைப்பான மாட மாளிகைகளையும், குடியிருப்புக்களையும் கோயில்களையும் கொண்ட பகுதி இது. நகரமாந்தரின் மகிழ்ச்சிபூத்த மந்தகாசமான முகங்களையும், பல வண்ண ஆடை அணிந்த ஆரணங்குகளையும் அவர்கள் அணிந்துள்ள ஆபரணங்களின் மேன்மையையும் பார்த்துக் கொண்டே ஐந்தாவது கோட்டையைஅடைந்தான் பூசப்கான். அந்தக் கோட்டையை அடுத்த பகுதியில்தான் விசாலமான கடைத் தெருக்களும், வளமுற்று வாழும் வணிகப் பெருமக்களின் இல்லங்களும், இன்னும் பலவிதமான கைத் தொழில்களால் கலை வளர்க்கும் கைவினைஞர்களின் இல்லங்களும் இடம் பெற்றிருந்தன. பூசப்கானின் வேஷத்துக்கு உரிய பகுதி அதுதான். ஒட்டகத்தையும் எதையும் உற்று நோக்கி ஆராயும் பார்வையையும் பார்த்தவுடனேயே கோட்டையின் பாராக்காரன், பூசப்கானை அயல்நாட்டு வியாபாரி என்பதைப் புரிந்து கொண்டு அன்போடு வரவேற்று உபசாரனையுடன் விருந்தினர் விடுதிக்கு அழைத்துச் சென்று அவனுடைய தேவைகளைக் கவனிக்கும்படி அதன் நிர்வாகியிடம் கூறி விடைபெற்றுக் கொண்டான். பாரத மக்களின் விருந்தோம்பும் பண்பாட்டைக் கண்டு விரோதியாக வந்து புகுந்துள்ள பூசப்கானே வியந்து போனான்.

கோயிலுக்குள் செல்லும் போது செருப்பை வெளியே வைத்து உள்ளே செல்ல வேண்டும் அல்லவா? அது போல் பெரியோர்கள் எழுதிய சாஸ்திரங்களைப் படிக்க ஆரம்பிக்கும்போது குற்றம் பார்க்கும் இயல்பை ஒழித்துப் பக்தியுடன் ஆரம்பிக்க வேண்டும். — ராஜாஜி

விடுதியிலே அவனைப் போலப் பல வியாபாரிகளும், வழிப்போக்கர்களும் தங்கி இருந்தார்கள். அவரவர்களின் தகுதிக்கு ஏற்றபடி இல்லங்கள் அமைந்திருந்தன. விடுதியின் பின்புறத்திலே குதிரை, ஒட்டகம் முதலியவைகளைப் பாதுகாத்துப் பராமரிப்பதற்கான ஏற்பாடுகள் செய்யப்பட்டிருந்தன.

அயல்நாட்டு வியாபாரிகள் தங்கும் அந்த விடுதிக்குச் சென்ற பூசப்கான் கொஞ்ச நேரத்துக்கெல்லாம் குதூகலமான தோற்றத்துடன் வெளியில் வந்தான். பகட்டான ஆடையணிந்து உல்லாச புருஷனாக விளங்கினான் அவன். பொற்காசுகள் கொண்ட மூட்டைகளைத் தோளில் முன்னும் பின்னுமாகத் தொங்கும்படி போட்டுக் கொண்டு அவனுடன் வந்த அவ்விருவரும் தயாராக நின்று கொண்டிருந்தார்கள். கால்நடையாகவே கடைவீதியின் அழகைக் காணக் கிளம்பினான். அவன் பார்வை ஒவ்வொன்றையும் இதயத்தில் படமாக்கிப் பதித்துக் கொண்டிருந்தது.

பூசப்கான் கடைத்தெருவின் கம்பீரமான தோற்றத்தையும் அமைப்பையும் அழகையும் கண்டு வியப்பெய்தினான். நான்கு ரதங்கள் ஏககாலத்தில் வரிசையாகப் போகும் அளவுக்கு அத்தனை விசாலமான வீதியின் இருமருங்கிலும் அங்காடிகள் ஒன்றையொன்று எதிர்நோக்கி அமைந்திருந்தன. இப்படி நான்கு பெரிய கடைத் தெருக்கள் அந்த நகரத்தைச் சூழ்ந்திருந்தன. இந்தக் கடைவீதிகளின் இருமருங்கிலும் அழகுக்காகவும் நிழலுக்காகவும் ஆங்காங்கே அடர்ந்து குடை போல விரிந்து பரந்து நிற்கும் மரங்கள் பயிரிடப்பட்டிருந்தன.

கடைத் தெருவிலே பொருள்களைக் கொண்டு குவித்திருந்த முறை அவை பெரியதொரு பண்டகசாலை என்ற எண்ணத்தையே உண்டாக்கிக் கொண்டிருந்தது. விலை

பொருள்களை விற்கும் பகுதி, கலைப் பொருள்களைக் கொண்ட பகுதி என்று கடைவீதியில் ஒவ்வொரு பொருளுக்கும் தனித்தனியே இடம் ஒதுக்கி இருந்தார்கள். நவரத்தினக் கடைகள், பொன் நகைக் கடைகள், பொன்னும் மணியும் கொண்டு செய்யப்பட்ட ஆபரணங்களை அழகுபடத் தரும் அங்காடிகள். இவைகளைக் கண்ட பூசப்கானுக்கு மலைப்பாக இருந்தது. 'இந்தச் செல்வம் கொழிக்கும் நகரத்தில் நாம் எதை வாங்குவது, எதை விற்பது? நம்முடைய வேஷத்துக்கு ஏற்ற வேலை இருக்காது போலிருக்கிறதே' என்று கலங்கலானான். நல் முத்துக்களை மரக்காலால் அளந்து கொண்டிருந்தார்கள் ஒரு வீதியிலே. இரும்பு, செம்பு, ஈயம் ஆகிய உலோகப் பொருட்களைக் கொண்ட கடைகளைத் தாண்டி வந்தபோது தந்தத்திலும், மரம், வெள்ளி, வெண்கலம் ஆகியவைகளாலும் ஆன பலவகைப் பொருள்களின் நேர்த்தியையும் உறுதியையும் வேலைப்பாட்டையும் கண்டு வியந்தபடியே வந்தான் பூசப்கான். நறுமணங்களைத் தரும் அகில் சந்தனம், குங்கிலியம் போன்ற வாசனைப் பொருள்களை விற்கும் கடைகள் அவனைக் கவர்ந்தன. ஒரு பக்கத்திலே ரோஜா மலர் மலைபோல் குவிக்கப்பட்டிருந்தது. மல்லிகை, முல்லை, சாமந்தி முதலிய பலவிதமான வண்ணங்களையும் மணங்களையும் கொண்ட மலர்கள் நிறைந்திருந்தாலும் ரோஜாவே மலர்களின் ராஜாவாக விளங்கியது. விஜய நகரத்தில் அரசர் முதல் ஆண்டி வரை தினந்தோறும் ரோஜா மலர்களையே அதிகமாகப் பயன்படுத்தி வருகிறார்கள் என்று அறிந்து கொண்டான். இசைக் கருவிகளைக் கொண்ட கடைகளையும் கலை வாணிபத்தைக் கொண்ட வீதிகளையும் கடந்து பட்டாடையும், பருத்தியாடையும் விற்பனை செய்யும் பகுதிக்கு வந்தான்.

சீனத்துப் பட்டிலே சிங்கார வேலைப்பாடுகளைக் கொண்ட அமைப்பானதொரு அங்கியை விலை பேசி வாங்கிக் கொண்டபோது வீதியிலே மக்களின் பரபரப்பான பீதி நிறைந்த குரல் கேட்டு வியப்புடன் திரும்பினான். இரண்டு குதிரைகள் பூட்டிய அழகான ரதமொன்று சூறாவளியைப் போலச் சாரதியின் கட்டுப்பாட்டுக்கு அடங்காமல் கடிவாளத்தை அறுத்துக் கொண்டு ஓடி வந்து கொண்டிருந்தது. வெறி கொண்ட குதிரைகள் இரண்டும் தறிகெட்டு நிலமதிர வீதியிலிருப்போர் பயந்து விலகி ஓடும்படியாக ரதத்தை இழுத்துக் கொண்டு வந்தன. ரதத்தின் சாரதி ஒரு பெண். ரதத்திலே இருந்ததும் மற்றொரு பெண். இடியும் மின்னலும் போல வரும் அந்தக் குதிரைகளை இழுத்துப் பிடித்து அடக்கி நிறுத்த யாருக்கும் துணிவு பிறக்கவில்லை. ரதத்திலே பெண்கள் இருவர்கள் என்பதை அறிந்த உடனேயே பூசப்கான் த...லைத் தாண்டிச் சென்... விட்ட அதை நோக்கிப் பா... தோடினான். குதிரைகள் ஓட்டத்துக்கு ஈடு கொடுத்து சிறிது தூரம் அதனுடனோடு உரசியபடி ஓடியவன் தாவிப் பாய்ந்து அவற்றின் நுகக் கயிற்றைப் பற்றினான். நிலை தடுமா... அலைக்கழிந்து விழச் செய்த குதிரைகளின் வேகமும் வெறியும். அவற்றின் கால்களுக்கிடையே மிதிபட்டு துவைக்கப்படப் போகிறா... என்று எல்லோரும் திகி...டன் பார்த்துக் கொண்டிருக்கும் போதே க... பிடியை விடாது குதிரையின் முதுகில் தாவி ஏறி அமர்ந்து கொண்டபோது மக்கள் சந்தோஷ ஆரவாரமிட்டுத் தங்கள் மகிழ்ச்சியைத் தெரிவித்துக் கொண்டார்கள். குதிரைகளின் பிடரியைப் பற்றி அதன்மீது படுத்தபடி கடிவாளத்தையும் கைக்கொண்டு அதை இழுத்துப் பிடித்து ஒரு நிலைக்குக் கொண்டு வந்து நிறுத்தினான். நுரை தள்ள வெறி அடங்கி நிற்கும் குதிரைகளைத் தட்டிக் கொடுத்துச் சமாதானப்படுத்திய பின்பே கீழிறங்கினான். அதற்குள் கடைத் தெருவிலிருந்த மக்கள் கூட்டம் வந்து ரதத்தைச் சூழ்ந்து கொண்டது. அவர்களை விலக்கிக் கொண்டு வீரர்களும் ஓடிவந்தார்கள்.

ரதத்திலிருந்தவர்களைப் பார்த்தான் பூசப்கான். ஐம்பது வயதைக் கடந்த மூதாட்டியின் அருகிலே இருபது வயது கூட ஆகாத கன்னிப் பெண். அவள்தான் அந்த ரதத்தை ஓட்டி வந்தவளாக இருக்க வேண்டும். பயத்தினால் அவர்கள் உடலில் படபடப்புக் காணப்பட்டாலும் உறுதி குலையாதிருந்தார்கள் அவ்விருவரும். நிலைமையைச் சீர்திருத்தி நின்ற குதிரை வீரர்களிடம் அந்த மூதாட்டி கூறியதை அவர்களில் ஒருவன் அராபிய மொழியிலே மொழிபெயர்த்து பூசப்கானிடம் தெரிவித்தான்.

''வெறி கொண்ட குதிரையை அடக்கி நிறுத்தி ஆபத்தைத் தவிர்த்த தங்கள் தீரத்தைப் பாராட்டித் தங்களுக்குத் தம் நன்றியையும் தெரிவித்துக் கொள்ளுகிறார் மகாராணியார்'' என்றான் வீரன்.

முறுவல் பூத்த மூதாட்டியின் முகத்தைப் பார்த்தவாறே இடையை வளைத்துச் சலாம் செய்த பூசப்கான் கடிவாளத்தைக் கன்னியின் கையில் கொடுத்து விட்டு ஒதுங்கிக் கொண்டான். குதிரை வீரன் பின் தொடர ரதம் நகர்ந்தது. கூடியிருந்தோரின் காட்சிப் பொருளாக நின்று கொண்டிருந்த பூசப்கானின் கண்களோ போகும் ரதத்தைத் தொடர்ந்து ஓடிக் கொண்டிருந்தது. அந்த ரதத்தின் பின்னாலேயே அவனது மனோரதமும் ஓடியது.

(தொடரும்)

வேதம் என்னும் உளுந்தைக் கொண்டு எல்லோரும் ருசித்து அனுபவிக்கும்படியான இட்டிலி, தோசை, ஜிலேபி ஆகிய பணியாரங்களைப்போல் ராமாயணத்தையும், பாரதக்கதையும், மற்ற புராணங்களையும் முனிவர்கள் அளித்திருக்கிறார்கள். ஆதார உளுந்தாகிய வேதத்தின் அழகிய கருத்த மேல் தோல்தான் அதற்கே உரிய ஸ்வரம். கருப்புத் தோல் போய் விட்டால் உளுந்தைக் காப்பாற்ற முடியாது. ஸ்வரம் போனால் வேதத்தைக் காப்பாற்ற முடியாது. வேதங்களை அவற்றின் ஸ்வரங்களுடனே சம்பிரதாயப்படி காக்க வேண்டும்.

— ராஜாஜி

## -ங்கள் மகனை சுய முயற்சியால் வாழப் பழக்குங்கள்



எதிர்கால வாழ்க்கையை தன்னம்பிக்கையுடன் ஏற்பதற்கு ஏற்ற வகையில் உங்கள் மகனைப் பழக்கவேண்டியது உங்களுடைய சிறப்புரிமை மட்டுமல்ல முக்கிய கடமையும் ஆகும். நீங்கள் செய்யவேண்டிய மிக முக்கியமான பணி அவனுக்குப் பணம் சேமிக்கும் பழக்கத்தை கற்பிப்பதுதான். இந்தப் பழக்கம் ஆயுள் முழுவதும் நீடிப்பது மட்டுமல்லாமல் அவனுக்கு வாழ்க்கையில் முன்னேற பெரிதும் உதவி புரியும்.

இளமையிலேயே சேமிக்கும் பழக்கத்தை பயில்விப்பது தான் சரியான முறை...அப்பொழுது தான் நீங்கள் பக்கபலமாக இருந்து அவனுக்கு உதவி புரிய முடியும். பதினைந்தும் அதற்கு மேலும் வயதான சிறுவர்களுக்கென்றே, பிரத்தியேகமாக பாங்க் ஆ:ப் பரோடாவில் மைனர்களுக்கான 3% வட்டியுள்ள ஒரு சேவிங்ஸ் அக்கௌண்டு ஏற்படுத்தப்பட்டிருக்கிறது. இதன் மூலமாக சிறுவர்களுக்கு பணம் சேமிக்கும் நற்பழக்கம் ஏற்படும். பாங்க் ஆ:ப் பரோடாவில் உங்கள் குழந்தையை ஒரு மைனர்களுக்கான சேவிங்ஸ் அக்கௌண்டைத் தொடங்கச் செய்யுங்கள். அவனுக்குத் தனி பாஸ் புத்தகம் கிடைக்கும்; அது மட்டுமல்ல, அந்த அக்கௌண்டை அவனே நிர்வகிக்கலாம்!

# தி பாங்க் ஆ:ப் பரோடா லிமிடெட்

(ஸ்தாபிதம் : 1908) தலைமைக் காரியாலயம் : பரோடா

'உங்கள் சேவை எங்கள் கடமை' என்ற எங்கள் இலவச புத்தகத்தில் எல்லா விவரங்களும் உள்ளன. இதைப் பெற இன்றே கேட்டு எழுதுங்கள்.

# வயிறு நிறைந்தது!



குறும்பன்

பாரதி காலத்தில் 'எங்கும் சுதந்திரம் என்பதே பேச்சு!'

பாரதத்துக்குச் சுதந்திரம் கிடைத்துப் பனிரெண்டாண்டுகள் கழிந்துவிட்ட இந்தக் காலத்திலோ, 'பாரதம் எங்கும் உணவுப் பஞ்சம் என்பதே பேச்சு!'

'தனியொருவனுக்கு உணவில்லை யெனில் ஜகத்தினை அழித்திடுவோம்!' என்று பாரதி முழங்கினார்.

'ஆளுக்கொரு லிட்டர் அரிசி கொடுத்தால் அதுவே இந்த ஜகத்தினைக் காப்பதாக ஆகும்' என்று இன்றைய அரசாங்கம் முழங்குகிறது.

இந்தப் பஞ்சம் எப்படி வந்தது? அகவிலைவாசியைப் பார்த்து, 'பஞ்சப் படியை உயர்த்துங்கள்!' என்று அரசாங்க ஊழியர்கள் கூற, 'தென்னை மரத்தில் தேள் கொட்டிற்றாம், பனைமரத்தில் நெறி கட்டிற்றாம்' என்ற பழமொழியைப் புதுப்பித்துக் கொண்டு, அன்றாடத் தேவைப் பொருள்களின் விலை உயர்ந்தது. அதைத் தவிர்க்க அரசாங்கம் விலை நிர்ணயம் செய்தது. லாபத்தில் குறைவு ஏற்படவே, வியாபாரிகளுக்கு வியாபாரத்தில் உள்ள அக்கறை குறைந்தது. எனவேதான் இந்தப் பஞ்சமே ஒழிய அரிசி பற்றாக்குறையால் ஏற்பட்டதல்ல. — இப்படி எத்தனை எத்தனையோ காரணங்கள் கூறப்படுகின்றன.

குடும்பக் கார்டு கொடுத்து ஆளுக்கொரு லிட்டர் வாரத்துக்கு என்றால் எப்படி ஐயா போதும்! வெளி மார்க்கெட்டில் பகிரங்கமாக அதிக விலை கொடுத்தும் வாங்க முடியாமற் செய்து விட்டதே இந்த அரசாங்கம், ஆர்டினன்ஸ் என்று ஓர் அவசரச் சட்டத்தைப் பிறப்பித்து! என்ன செய்வது?

மக்கள் அவதிப்படுகிறார்கள்.

''நாங்கள் ஒரு லிட்டர் அரிசி தந்து விட்டோம். தனியொருவனுக்கு உணவில்லையெனில் இந்த ஜகத்தினை அழித்து விடுவதாகப் பயமுறுத்தினரே, பாரதி! இந்தப் பயத்திலிருந்து மக்களை மீட்டு விட்டோம்!'' என்று வேண்டுமானால் அரசாங்கம் பெருமைப்பட்டுக் கொள்ளலாம்; மார் தட்டிக் கொள்ளலாம்.

ஆனால் இந்த அரிசிப் பஞ்சம் எப்போது தீரும் என்று கேட்பவர்களுக்கு, 'வைத்தியம் தெளிந்தால், கல்யாணம் ஆகும், கல்யாணம் ஆனால் வைத்தியம் தெளியும்' என்ற பழமொழியை நினைவுபடுத்தலாமே ஒழியப் வைத்தியம் தெளிவதற்கு மருந்தை யார் தருவார்கள்? இதற்குப் பதில் வரும் பொதுத் தேர்தல்தான் கூற வேண்டும்; கூறவும் முடியும்.

ஆனால் அவ்வளவு நாள் பொறுத்திருக்கப் பரசுராமனால் எப்படி முடியும்? பதின்மூன்று நபர்களைக் கொண்ட பெரிய குடும்பத்தை நிர்வகிக்கும் பொறுப்பை அல்லவா அவன் ஏற்றிருந்தான்! பலத்த யோசனைக்குப் பின், ஐந்து பவுன் சங்கிலியை அடகு வைத்து நூற்றிருபது ரூபாயைச் சம்பாதித்தான். லோயர் டிவிஷன் குமாஸ்தா இதைவிட வேறு எந்த வழியில் பணத்தைச் சம்பாதிக்க முடியும்? இந்த மாதிரி இக்கட்டான நிலைவந்தால் இருக்கட்டும் என்று முன் யோசனையுடன் ஐந்து பவுன் சங்கிலியைச் சம்பாதித்து வைத்திருந்த தன் பெற்றோர்களை — முன்னோர்களை மனமார வாழ்த்தினான்.

சைதாப்பேட்டையை ஒட்டிய கிராமத்தில் நாற்பது படிகள் கொண்ட மூட்டை அரிசி நூற்றுப் பத்து ரூபாய்க்குக் கிடைக்கிறது என்று ஒரு நண்பன் மூலம் கேள்விப்பட்டான். 'அதிகப் பணம் கொடுத்து அரிசி வாங்கிக் கறுப்புச் சந்தைக்கு ஆக்கம் தருவதா?' என்று ஒரு கணம் சிந்தித்துப் பார்த்தான். தினம் 'க்யூ'வில் நின்று மட்டமான அரிசி ஒரு லிட்டர் வாங்கி வருவதற்குள் எத்தனை பொழுது வீணாகிறது? விலை குறைவாக இருந்தாலும் பொன்னான நேரம் அல்லவா பாழாகிறது? அதைப் பாழாக்காமலிருக்கப் பொன்னை அடகு வைத்து ஒரு மூட்டை அரிசி வாங்கிப் போட்டு விட்டால், கால் கடுக்க நின்று உடம்பைக் கெடுத்துக் கொள்ளாமல் இருக்கலாமே! க்யூவில் நின்று அதனால் ஏற்படக் கூடிய உடல் நோய்க்குச் செலவழிப்பதைக் காட்டிலும், இப்படிப்பணம் போனாலும் அரிசியாவது நன்று இருக்குமே! நல்ல அரிசிக்கு இந்த ரூபாயைக் கொடுத்தால் என்ன? அரசாங்கமும் கறுப்புச் சந்தைக்கு ஆக்கம் அளிக்கத்தானே என்னமோ, ரேஷன் விதிகளோ பட்டு ஓட்டையாக வருத்திருக்கிறது!

இந்தச் சிந்தனைதான் அவனுக்குப் பொன்னை அடகு வைக்கும் துணிவைக் கொடுத்தது. ஆனால்

> ராக்ஷசர்களும் அசுரர்களும் கம்பர் சொல்லியிருக்கிறபடி தீய கருமங்களிலேயே ஈடுபட்டுச் சந்தோஷப்பட்ட கூட்டம். அவர்களைத் தமிழர்கள் என்றும் தம் முன்னோர்கள் என்றும் சிலர் இக்காலத்தில் அறிவீனமாக எண்ணியும் பேசியும் வருவது பரிதாபம். எந்தப் பழைய தமிழ் நூலிலாவது சரித்திரத்திலாவது தனிப் பாட்டிலாவது இப்படிச் சொன்னதில்லை. தமிழர்களுக்கு ''நீங்கள் ராம புராணத்தில் அரக்கர் என்று சொல்லப்பட்டவர்கள்'' என்கிற புதுப் பட்டம் அளிப்பதற்குப் பழைய தமிழ் நூல்களில் ஆதாரம் எங்கும் இல்லை.
>
> —ராஜாஜி ('சக்கரவர்த்தித் திருமகன்')

அரிசி தருகிறேன் என்று சொன்னவன், ஒரு மூட்டை அரிசி தந்து விடுவதாகக் கூறினானே ஒழிய, அதை அவன் வீட்டில் கொண்டு வந்து சேர்க்கும் பொறுப்பை எத்தனை ரூபாய் கொடுத்தாலும் ஏற்றுக் கொள்ளத் தயாராயில்லை. எடுத்துக் கொண்டு போகும் பொறுப்பு வாங்குபவர்களையே சேர்ந்தது என்று தீர்மானமாகக் கூறி விட்டான்.

எனவே, பரசுராமன் வேறு வழியின்றித் தானே அந்தப் பொறுப்பை ஏற்றான். இருட்டியபின் எப்படியோ சிரமப்பட்டு ஒரு காரை எடுத்துக் கொண்டு குறிப்பிட்ட இடத்துக்குப் போனான். அந்தக் கையில் காசை வைத்ததும், இந்தக் கையில் அரிசி மூட்டையைக் கொடுத்து விட்டான் கறுப்பிலும் நாணயம் தவறாத அந்த வியாபாரி. அதோடு தன் பொறுப்புத் தீர்ந்த அந்தக் கணமே அங்கிருந்து நகர்ந்தும் விட்டான்.

பரசுராமன் மிகுந்த சிரமத்துடன் தானே மூட்டையைப் புரட்டிக் காரில் ஏற்றினான். கார் டிரைவரோ சில கார்க்காரர்களைப் போல டிக்கியைத் திறந்து வைத்து விட்டு மூட்டை ஏற்றி முடியும் வரையில் மூலையில் போய் நின்று கொண்டார்.

பரசுராமன் காரில் அரிசி மூட்டையை ஏற்றி விட்டு அமர்ந்ததும், வண்டியை எடுத்தார் டிரைவர். வெகுவேகமாக வந்த கார் பழைய மாம்பலம் ரோட்டில் மனித நடமாட்டம் அதிகம் இல்லாத ஓர் இடத்துக்கு வந்ததும் டக்கென்று 'சடன்' பிரேக் போட்டாற்போல் நின்றது. டிரைவர் 'செல்ப் ஸ்டார்ட்ட'ரைப் போட்டுப் பார்த்தார். வண்டி புறப்படுவதாயில்லை. 'கிர் கிர்' என்று சத்தமிட்டு ஓய்ந்து நின்றது. இறங்கிச் சென்று முன் பக்கத்தில் உள்ள மோட்டாரைப் பார்த்து விட்டு, "சார்! ஒரு நிமிஷம் இறங்கிப் பின்னாலிருந்து தள்ளுகிறீர்களா? ஸ்டார்ட் ஆகிறதா என்று பார்ப்போம்!" என்றார் டிரைவர்.

பாவம், பரசுராமன் என்ன செய்வான்? இந்த இக்கட்டான நிலையில் டிரைவருக்கு உதவாமல் இருக்க முடியுமா. அரிசி மூட்டையை ஏற்றும் பொழுது, சும்மா கையைக் கட்டிக் கொண்டு டிரைவர் பார்த்துக் கொண்டு நின்றாரே என்பதற்காக? டிரைவரைப்போல் வாளாவிருந்தால் அவன் காரியம் அல்லவா ஆகாது? தாமதப்படும்; என இறங்கிப் பின்னாலிருந்து தள்ளலானான்.

அசைந்து கொடுத்த கார் சிறிது து சென்றதும் டக்கென்று கிளம்பியது. கி பிய வேகத்தில், பின்னாலிருந்து தன் ட கொண்ட மட்டும் வேகமாகத் தள் கொண்டிருந்த பரசுராமனை விழுந்து வ கும் நிலையில் குப்புறத் தள்ளி விட்டு வேகம நகர்ந்தது. அது மட்டுமா? தன்னைத் விய அவன் மீது மண்மாரி பொழிந்து டும் ஓடியது.

பரசுராமன் எழுந்து, தன்னைச் சுதா துக் கொள்வதற்குள், அது ஐம்பது அறு கஜதூரம் போய் விட்டது. 'ஐயா, ஐ என்று அவன் கூவுவதைக் காதில் வாங் கொள்ளாமல் கார் பறந்தது. அதன் ந ரைக் குறித்துக் கொண்டு போலீஸில் போர்ட்டு செய்யலாம் என்றால்.....அதற் அது பார்வையிலிருந்து மறைந்தே விட்ட

அதோடு போலீஸில் போய்த்தான் அவ எப்படிப் புகார் செய்ய முடியும்? அரிசி அரசாங்கம் வெளியில் வாங்கிக் கொள் அநுமதித்தாலும் கறுப்பு மார்க்கெட்டி வாங்கிய குற்றத்தை அல்லவா போலீ அவன் மேல் சுமத்தும்?

இருட்டறைக்குத் தேள் கொட்டிய கை யாக அவன் தன் மேல் ஒட்டிய புழுதியை உதறிக் கொண்டு புறப்பட்டான். கறுப் கும் வெறுப்புக்கும் அரசாங்கமும் மக்களு இப்படி ஆக்கம் அளிக்கும் வரையி உணவுப் பொருளின் நிலை இப்படித்தா இருக்கும். ஒருவரை யொருவர் கண்ணி மண்ணைத் தூவி ஏமாற்ற முயல்வார்கள்.

ஆனாலும் பரசுராமனின் மனத்தில் துயர துக்குப் பதிலாக இன்பமே நிறைந்திருந்தது. 'இப்படிக் காற்றினும் கடிய வேகமாக, அ வும் 'ஆச்சல்' குழிகள் பல நிறைந்த மாம்பல ரோட்டில் காருக்கு ஆபத்து நேர்ந்தால் என்ன ஆகும் என்று துளிக்கூடக் கவலைப்படாமல் ஓட்டிச் செல்லும் டிரைவர் பதினாறும் பெற்ற பாக்கியவானாக இருப்பான். இல்லாவிட்டால் அவன் அறிவு இப்படி வேலை செய்யுமா. 'நாம் சாப்பிட்டால் என்ன, அவன் சாப்பிட்டால் என்ன?' இந்தப் பெரு நோக்கத்தை மனத்தில் வருவித்துக் கொண்ட பின் அவனுக்கு வயிறே நிறைந்தாற் போலிருந்தது.


ராஜயோகம் 12
நான் சொல்வதைக் கேட்டு அதன்படி செய். கண்களை நன்றாக மூடிக்கொள். இரண்டு கைகளையும் மார்புக்கு எதிரே முன் பக்கமாக நீட்டிக்கொள். உள்ளங்கை தரையை நோக்கி இருக்க வேண்டும். வலது புறங்கை மீது பத்து கிலோ சர்க்கரையுள்ள பை இருப்பதாகக் கற்பனை செய்துகொள்.


இப்போது சர்க்கரை மூட்டையின் கனத்தை உணரத் தொடங்குகிறாய். கனத்தை அதிகமாக உணர்கிறாய். இன்னும் அதிகமாக உணர்கிறாய். மேலும் அதிகமாக உணர்கிறாய். கையால் அதனின் கனத்தையும் தாங்க முடியாமல் ஆகையால் கை கீழே தழையப் போகிறது...


கனமுள்ள கை தழைய ஆரம்பித்துவிட்டது. சர்க்கரைப் பை கையை அழுத்துகிறது. கை கீழே போகிறது. பை மேலும் அழுத்துகிறது. கை இன்னும் கீழே போகிறது. பையின் கனம் முழுதும் கை மீதிருக்கிறது. கையால் தாங்க முடியவில்லை. கை மீண்டும் கீழே போகிறது... கனம்... போதும் கண்களைத் திறந்துகொள். வலது கை இடது கையை விடக் கால் அடி தூரம் கீழே தழைந்திருக்கிறது பார்!


நான் சொல்வதை நீ கேட்டுக்கொள்கிறாய். இப்போது உன் கண்கள் சொருகிக் கொள்கின்றன. உன் மனமும் உடலும் தளர்ந்து கொடுக்க ஆரம்பித்துவிட்டன. நீ ஒரு படகில் சென்று கொண்டிருப்பது போலும், தண்ணீர் அலைகள் சுகமாகத் தள்ளிச் செல்வது போலும் கற்பனை செய்துகொள்.
தொண்ணூற்றொன்பது, தொண்ணூற்றெட்டு, தொண்ணூற்றேழு, தொண்ணூற்றாறு, தொண்ணூற்றைந்து...


இருபத்து ஐந்து, இருபத்து நான்கு, இருபத்து மூன்று, இருபத்து இரண்டு...
உன் மனமும் உடலும் மேலும் தளர்ந்துகொண்டே வருகின்றன. தலைகீழாக எண்ணிச் சொல்லிக் கொண்டே இரு. உன் உடல் அசைய, அசைய மேலும், மேலும் தளர்ச்சி யடையும். தலைகீழாக எண்ணிக்கொண்டு போகப் போக, உன் கைகள் உயரே எழத்தொடங்கும்...


எட்டு, ஏழு, ஆறு, ஐந்து, நான்கு, மூன்று, இரண்டு, ஒன்று, சைபர்.


வெற்றி!

ஸம் சந்திரகாந்தாவிடமிருந்து மலரும் இரகசியம்:

# 'எனது மேனியெழிலுக்கு ஆதரவு லக்ஸ்'




சிந்தனைவள் நிறைக்கடர் சந்திரகாந்தா சொல்கின்றார்: 'நாளாந்த மேனிப் பராமரிப்பு முறைகளிலே தூய மெல்லிளம் லக்ஸ் போன்ற இங்கிதமான சாதனமும் ஒன்றுண்டோ! வெண்ணெய் கடைந்தது போன்ற நுரைவளம், என்றுமதற்கினிய நறுமணம், எழிலின் எல்லையை எவரும் எய்தலாம்; என் போலவே லக்ஸ் உபயோகியுங்கள் எந்நாளும்.'

**லக்ஸ் டாய்லெட் சோப்**
**சினிமா நட்சத்திரங்களின் அழகுசாதன சோப்**

வெண்மையிலும், வானவில் வண்ணங்கள் ஐந்திலுமுண்டு

L.T.S. 152-140 TM

இந்துஸ்தான் லீவர் தயா


தலைக்கு வந்தது....!


வரவரத் தொப்பி குறைந்து போச்சே! தொப்பிக்கும் ரேஷனா?


இது என்ன இது? பண்ணைக்காரர் தொப்பியைப் போட்டுக் கிட்டீங்க? அவங்க இனிமே எந்தத் தொப்பியைப் போட்டுப் பாப்பாங்க?


எங்கேயாவது இந்தத் தொப்பியை நீ தேர்ந்து எடுத்துடப் போறாங்க! அப்புறம் நீங்க வெளியிலெப்படித் தலை காட்டுவீங்க?


உங்க கிட்டே பயந்த திருடங்க எல்லாம் உங்கள் தோற்றத்தைப் பார்த்துச் சிரிக்கப் போறாங்க!


ஆண்டவனே! எங்க தலைக்கு வந்தது எங்க பழைய தலைப்பாகை போடு போதுமா?


காதி
சுதேசி
கண்காட்சி


எது உங்களுக்குப் பிடித்த தொப்பி? பொது ஜன அபிப்பிராயம் தேவை.


ஆட்சிக் கிரீடமே மாற வேண்டும் என்பது எங்கள் அபிப்பிராயம். போயும் போயும் போலீஸ் தொப்பி தான் மாற வேண்டும்?




இன்றைக்கு வெள்ளிக்கிழமை.

வழக்கமாக நடைபெற வேண்டிய ஒரு காரியம் காலை பத்து மணியாகியும் நடக்காமல் இருந்தது. அம்மா அடிக்கடி நான் இருந்த அறைப் பக்கம் எட்டி எட்டிப் பார்த்து விட்டுப் போனாளே தவிர அதைச் சொல்லவில்லை. உதட்டு நுனி வரை அந்த வார்த்தையைக் கொண்டுவந்து வெளியிடாமல் மென்று விழுங்கியபடி போகிறாள் என்பதும் எனக்குத் தெரியும்.

'தலை முழுகவா சிவகாமி!' என்று கூப்பிட்டால் எங்கே நான் வேறு விதமாக அர்த்தம் செய்து கொண்டு அழுது புலம்புவேனோ என்று அவளுக்குப் பயம். நல்ல அம்மா! நான் ஏன் அழுகிறேன்? இனிமேல் அழுவதற்குத்தான் என்ன இருக்கிறது? அழுதால் துன்பம் விலகிவிடப் போகிறதா? துயரமாவது குறையுமே என்று சொல்லலாம்.

துயரம்—இறுகிக் கனத்துப் போய், என் நெஞ்சில் விலங்கிட்ட மாதிரி உறுத்திக் கொண்டிருக்கும் சுமையல்லவா அது? அதைத் தூக்கி எறியும் சக்தி கேவலம் இந்தக் கண்ணீருக்கு ஏது? ஒருவேளை எனது கணவர் என்று எல்லாரும் கூடி நாமகரணமிட்டார்களே, அந்த மனிதருக்கு இருக்கலாம். ஆனால் அந்த வலிய கரம் என்னை நோக்கி நீளுமா? ஓ.... அது பேராசை!

பின்னே என்ன? வேறு எத்தனையோ பெண்களுக்கு — ஆம் கணக்கில்லைதான் — சொந்தமாகி விட்ட ஓர் உயிரை எனக்கே எனக்குத் தன்னந் தனியாக எடுத்துக் கொள்ள நினைப்பது பேராசை தானே?

ஒவ்வொருவர் வாழ்க்கையிலும் சில சம்பவங்கள் எப்படியோ ஆரம்பித்து எப்படியோ முடிந்து விடுகிற விநோதத்தைச் சற்று நின்று நிதானித்துப் பார்க்கும்போது, மனித யத்தனங்கள் அற்பத்திலும் அற்பமாகவும், அர்த்தமற்றவையாகவும் கூடத் தோன்றுகின்றன. அலைகடல் மேல் தன் சின்னஞ் சிறு படகை லாகவமாகச் செலுத்தும் படகோட்டி என்ன நினைக்கிறான்? ஆழம் காண இயலாத அந்த ஆழியை வென்று கொண்டு விட்டதாகவே பெருமிதம் கொள்கிறான்; கர்வப்படுகிறான். பாவம் — மழை வரப் போவதை அறியாது மணல் வீடு கட்டி மகிழும் குழந்தை மனம். திடீரென்று புயல் வீசத் தொடங்கினால் படகும் படகோட்டியும் அலைக்கழிக்கப் படுவதைப் பார்க்க வேண்டும். கர்வபங்கமில்லாமல் வேறென்ன அது?

அப்பா சட்டம் படித்தவர். சட்டப் பாயிண்டுகளைச் சொல்லிச் சொல்லியே பணமும், பதவியும் தேடிக் கொண்டவர். நீதிக்கும் வாதாடுவார், அநீதிக்கும் வக்காலத்து வாங்குவார். அவருக்கென்ன? எது சொன்னாலும் பணம் கிடைக்கிறது. இல்லை — பணம் கிடைக்க வேண்டும் என்பதற்காக எந்தக் கட்சியிலும் வாதாட அவர் தயார்! முக்கால் வாசி வழக்குகளில் பிரதிவாதிகளுக்கு ஆஜராகி ஜெயித்தும் கொடுத்திருக்கிறார். தம் திறமையிலும், அறிவிலும் அவருக்கு அசாத்திய கர்வம் — அப்படிப்பட்ட அப்பாவுக்கு ஒரு கர்வ பங்கம் நடத்திப் பார்க்க வேண்டும் என்று தெய்வம் ஆசைப் பட்டது போல் இருக்கிறது. அப்பா கழன்றார். ஆனால் அந்தக் கழுகுக்கு என்னைத் தானா இரையாப் பொருளாக்கிக் கொள்ள வேண்டும் அவர்?

சாதாரண அடிதடி வழக்கில் ஆஜராகும் போது கூட எதிரியை மடக்கி மடக்கிக் கேள்வி கேட்டுத் திணற வைக்கும் அப்பா, எனக்கு மாப்பிள்ளையாக வருபவரின் குணாதிசயங்களைப் பற்றி நன்றாக விசாரித்துக் கொண்டதாகத் தெரியவில்லை. வரன் அழகாய்த்தான் இருந்தார். நல்ல உத்தியோகம். சொத்துக்கூட ஏதோ தேறும் என்று சொல்லிக் கொண்டார்கள். அவ்வளவுதான்! அப்பா அவசரப்பட்டுத் திருப்தி கொண்டு விட்டார். அதே வேகத்தில் கல்யாணத்தையும் முடித்து விட்டார்.

கல்யாணத்தன்றே முதல் இரவு சடங்குக்கு ஏற்பாடு செய்திருந்தார்கள். சோபன அறை சினிமா செட்டிங்ஸ் மாதிரி அலங்கரிக்கப்பட்டது. எல்லாம் அப்பாவின் மேற்பார்வை; மெல்லிய இழைமெனப் புகையும், நறுமணம் உமிழும் சந்தன வத்தியை ஏற்றி வைத்தது அவர்தான். 'அட, படுக்கையில் ரோஜா இதழ்களைத் தூவச் சொன்னேனே. மறந்து விட்டாயா?' என்று அம்மாவைக் கடிந்து கொண்டு ரோஜா இதழ்களைத் தூவியதும் அவர்தான்.

பால் செம்பை எடுத்துக் கொண்டு மெல்ல அந்த அறைக்குள் அடியெடுத்து வைத்தேன். பூ மத்தாப்பைக் கொளுத்திய மாதிரி என்னுள் ஆசை, வெட்கம், பயம் எல்லாம் ஜில்லென்று பூத்து ஒளிர்ந்தன. இனம் புரியாத ஒரு பரபரப்பு என் உடலெங்கும் ஓடத் தொடங்கியது.

நான் அறைக்குள் நுழைந்ததும் வெடுக்கென்று கதவைச் சாத்திக் கொண்டு பரிகாசமாகப் பல குரல்கள் சிரித்தன. அவ்வளவிலும் அப்பாவின் குரல் பளீரென்று கேட்டது.

நான் இன்னும் நின்று கொண்டிருந்தேன்: அடுத்த கட்டம் அவர், 'வா, சிவகாமி!' என்று அன்பாகக் கூப்பிட வேண்டும் அல்லது மௌனமாக வந்து என் கரத்தைப் பற்ற வேண்டும். இதில் எதைச் செய்வார் என்று நான் ஒரு நிமிஷம் ஏதோ புதிரை விடுவிப்பது போல் யோசித்துக் கொண்டிருந்தேன். இரண்டு நிமிஷங்கள் கூட ஆகி விட்டன. ஒன்றும் நிகழவில்லை. என் பார்வை உயர்ந்தது: ஐயோ, கட்டில் வெறிச்சோடிக் கிடக்கிறதே. எங்கே அவரைக் காணோம்? ஒரு வேளை, என்னை ஏமாற்றுவதற்காக எங்கேயாவது ஒளிந்திருக்கிறாரோ என்னவோ? குறும்புக்காரர்! இதோ மெல்ல வந்து என் கையைப் பிடிப்பவர் அவர்தானா? உடல் புல்லரிக்கச் சட்டென்று திரும்பினேன். என்ன ஏமாற்றம். என் கையில் பட்டது காற்றில் ஊசலாடிய வெறும் பூச்சரம். அப்படியானால் அவர் அங்கே இல்லவே இல்லையா?

என் உள்ளம் சோர்ந்து விட்டது. கட்டில் காலைப் பற்றியபடி அப்படியே தரையில் சரிந்து அமர்ந்து கொண்டேன்.

ஒரு மணி நேரம் சென்றிருக்கும். அறைக்கு வெளியே பல குரல்கள் கசமுச வென்று பேசுவது கேட்டது. படீரென்று கதவும் திறந்தது. அப்பாதான் காலால் ஓர் உதை விட்டு அவ்வளவு வேகமாகத் திறந்திருக்கிறார். அம்மா ஓடி வந்து ஆதுரத்துடன் என்னை அணைத்துக் கொண்டு கண்ணீர் வடித்தாள். அப்பாவின் கண்ணெதிரே கொஞ்சம் பஞ்சைக் கொண்டு போனாலும் போதும், அப்படியே பற்றிக் கொள்ளும். அவ்வளவு கோபமாக இருந்தார். அப்படி ஒரு தீப்பிழம்பான முகத்தை நான் இதுவரையில் பார்த்ததேயில்லை.

''பையனோட நடத்தை ஒரு மாதிரி தான். ஆனால் கல்யாணம் பண்ணி வைத்து விட்டால் வழிக்கு வந்து விடுவான்னு பார்த்தோம்.'' — கைகளைப் பிசைந்தாள் என் மாமியார்.

''பெரிய மனசு பண்ணி மன்னிச்சுடுங்கோ. இப்போ வந்துடுவான்'' என்று கையெடுத்துக் கும்பிட்டுக் கெஞ்சினார் ஒருவர். பிள்ளை வீட்டாருக்கு நெருங்கியவர் போலும்.

ஆச்சரியம்தான். அப்பா உதட்டை கடித்துக் கடித்துக்கொண்டு வாய் திறவாமல் இருந்தது. அதை மௌனம் என்று நான் சொல்ல மாட்டேன். வாய் மூடியிருந்தாலும் மனம் இரைகிறதே....

'இப்போ வந்துடுவான்' என்று கூறப்பட்ட எனது கணவர் கடைசியில் வந்தே விட்டார். ஆனால் அது காலை பத்து மணிக்கு!

அப்பா அவரை மறித்துக் கொண்டு எதிரில் வந்து நின்றார். அப்பா மட்டுமா, கல்யாண வீட்டில் மிச்சம் சொச்சம் இருந்த ஜனக் கூட்டமும்தான். விஷயத்தைப் புரிந்து கொண்ட எனது கணவர், சாதாரணமாக— மிகச் சாதாரணமாக ஏதோ துரும்பைக் கிள்ளிப் போடுகிற மாதிரி – தம் எண்ணத்தைச் சுருக்கமாகச் சொன்னார்:

''இந்தக் கல்யாணம் கில்யாணம் என்பதெல்லாம் எனக்குப் பிரியம் கிடையாது. ஏதோ அம்மாவின் நச்சரிப்புத் தாங்காமல் இதைச் செய்து தொலைத்து விட்டேன். அதற்காக நீங்கள் போடும் சட்டதிட்டங்களுக்கெல்லாம் வளைய வேண்டியவன் என்று அர்த்தமில்லை. எனக்கென்று வேறு ஒரு வாழ்க்கை அமைந்து விட்டது. அதற்கு அணை போட யாராலும் முடியாது. கேவலம் உங்கள் ஒரு பெண்ணுக்காக எத்தனையோ பெண்களின் அன்பை இழக்க நான் தயாராயில்லை—என்ன புரிந்ததா?''

அவ்வளவுதான்: அப்பாவுக்கு வந்ததே ஆத்திரம். ஒரே எட்டில் மாப்பிள்ளையின் கழுத்தில் தன் சரிகை அங்கவஸ்திரத்தை மாட்டிக்கொண்டு....ஐயோ, நாலு பேர்கள் விடுவிக்க வேண்டியிருந்தது இருவரையும். ஒரே ரசாபாசம். இவர் பேச அவர் பேச ஏக ரகளை.

அப்பா அவரைக் கோர்ட்டில் நிறுத்தப் போகிறேன் என்று குதித்தார். அம்மாதான் குறுக்கிட்டுச் சமாதானம் செய்தாள், 'வாழ வேண்டிய பெண்ணை அவசரப்பட்டுப் பாழாக்கி விடாதீர்கள்' என்று. 'சரி— இரண்டு மாதம் கெடு. மன்னிப்புக் கேட்டுக் கொண்டு அவன் வரவில்லையோ? தொலைத்து விடுவேன்' என்று உறுமினார் அப்பா.

அடுத்த ரயிலிலேயே ஊருக்குத் திரும்பி வந்து சேர்ந்தோம். கல்யாணம் ஆன பிறகு மீண்டும் பிறந்தகம் வருவேன் என்று எனக்குத் தெரியும். ஆனால் இப்படித் 'தனி'யாக அல்ல; இந்தச் சூழ்நிலையிலும் அல்ல! எனக்கென்று சில கற்பனைகளும் ஆசைகளும் இருந்தன. உண்மைதான். இதோ வாசலின் மூங்கில் பிளாச்சால் கமான் வளைத்து அதில் படர்ந்திருக்கும் மல்லிகைக் கொடிகூட என் கணவரைத் தலையசைத்து வரவேற்க வேண்டும் என்று நான் விரும்பினேன். அவரிடம் இந்த மல்லிகைக் கொடி முதல் பென்சில் டிராயிங்காக நான் வரைந்த நேருவின் படம் வரை எல்லாவற்றையும் காட்டி எனது ரசனை உணர்ச்சிக்கு ஒரு 'சபாஷ்' வாங்க வேண்டும் என்று ஆசைப்பட்டேன். ஆனால் என் ஆசை, என் ரசனை எல்லாவற்றையும் தாராளமாய் என் ஒருத்திக்கே விட்டுக் கொடுத்து அவர் ஒதுங்கிக்கொண்டார். என்ன பெருந்தன்மை!

அம்மா மறுபடியும் அறைக்குள் வந்து தலையை நீட்டினாள்.

''சிவகாமி! இன்னிக்கு எண்ணெய் வைக்க வேணும் நீ — சும்மாவே குளிச்சுடு!''

அம்மாவின் பேச்சுக்கு ஓர் அர்த்தம் உண்டு. 'அப்பா வைத்த இரண்டு மாத கெடு தேற்றுடன் முடிந்துவிட்டாலும் மாப்பிள்ளைக்கு இன்னும் கொஞ்சம் அவகாசம் கொடுப்போம். அவர் வருவார் என்ற நம்பிக்கைக்கு அதற்குள் தலை முழுகிட வேண்டாம்' என்கிறாள் அம்மா. எனக்குப் புரிந்தது.

டவல் சோப்பு சகிதம் குளியல் அறைக்குள் நுழைந்தேன். குழாயைத் திருகி விட்டு நேரம் போவது தெரியாமல் குளித்து முடித்தேன். ஆடை மாற்றிக் கொண்டு ஹாலுக்கு வந்த போதுதான் நான் அவ்வளவு நேரம் குளியலறைக்குள் அடைந்து கிடந்தது தவறு என்று தோன்றியது. அப்பா ரொம்ப நேரமாக எனக்காகக் காத்திருக்கிறாராம். அம்மா ஜாடையாகச் சொன்னாள்.

அப்பாவுக்கு ஒரு பழக்கம். குறிப்பிட்ட நேரத்தில் எந்தக் காரியத்தையும் தவறாமல் செய்வார். உதாரணத்துக்கு ஒன்று சொல்லட்டுமா? மாப்பிள்ளைக்குக் கொடுத்த

## 'அசௌகரியமான நாட்களில்' ராதா வலியால் அவதிப்பட்டாள்










உலகப் புகழ் பெற்ற வலி நிவாரணியான ஸாரிடான் துரிதமாக, கெடுதல் எதுவுமின்றி, நிச்சயமாக நிவாரணம் அளிக்கிறது. தலைவலி, பல்வலி, உடம்பு வலி, ஜலதோஷம், ஜுரம் வரும்போலிருப்பது மற்றும் பொதுவான உபாதைகளிலிருந்து நிவாரணம் பெற ஸாரிடான் சாப்பிடுங்கள். எப்போதும் ஸாரிடானை நம்புங்கள்.



ஸாரிடான் ஒரே வில்லை போதும்
ஒரு வில்லை 13 பைசா

# ஒரே ஒரு ஸாரிடான் 'ரோஷ்'

வலியைப் போக்குகிறது, ஆசுவாசப் படுத்துகிறது, புத்துணர்ச்சி யூட்டுகிறது

'ரோஷ்' தயாரிப்பு    ஸோல் டிஸ்ட்ரிப்யூட்டர்கள் : வால்டாஸ் லிமிடெட்    [WT-VT-1049A

ண்டு மாத கெடு முடிந்து விடவே, சொல்லியபடி மேல் நடவடிக்கை எடுக்க தா வந்து விட்டாரே! பேசாமல் அப்பா டிய காகிதத்தில் கையெழுத்துப் போட்டேன். கட்சிக்காரர் என்ற முறையில் வக்கீலுக்கு எழுதிக் கொடுக்கும் வக்காலத்து அது.

வழக்கு கோர்ட்டில் பதிவாகியது. விவாகரத்து வேண்டும் என்றுதான் அப்பா வழக்காடுவார் என்று நினைத்தேன். ஆனால் அவரோ ஜீவனாம்சத் தொகை கேட்டு வாதாடினார். இரண்டு 'ஹியரிங்'கள் நடந்தன. பிறகு தீர்ப்பாயிற்று. மாதம் ஐம்பது ரூபாய் கொடுக்கும்படி.

நான் அன்று கோர்ட்டுக்குப் போகவில்லை. அப்பாதான் வந்து சொன்னார். எனக்கு அழுகை பீறிட்டுக் கொண்டு வந்தது. இனிமேல் இல்லற வாழ்க்கை என்பது இல்லாமல் போய் விட்டதே என்பதற்காக அல்ல. மாதா மாதம் ஐம்பது ரூபாய் தண்டம் கட்டும் நிர்ப்பந்தத்துக்கு நான் 'அவரை' ஆளாக்கினேன் என்பதை நினைத்துத்தான் எனக்கு வேதனையாக இருந்தது. அந்தப் பணம் வந்துதான் நான் ஜீவனம் நடத்த வேண்டும் என்ற நிலையிலா நான் இருக்கிறேன்? முதன் முதலாக அப்பாவை நேருக்கு நேர் நிறுத்திக் கேட்டே விட்டேன்.

தருமத்தில் மகிழ்ச்சியும் அதருமத்தில் வெறுப்பும் மக்கள் உள்ளத்தில் இருக்க வேண்டும். இல்லாவிடில் எந்த அரசியல் முறையும் எந்தப் பொருளாதார முறையும் சுகம் தராது. —ராஜாஜி

அதற்கு அப்பா சொன்னார்:

''பணம் எனக்கு முக்கியமல்ல சிவகாமி. இந்தப் பணத்தை உனக்கு அனுப்பும்போது உன் பெயரும், இதை ஏன் அனுப்புகிறோம் என்ற சிந்தனையும் மாதம் ஒரு தடவையாவது அவன் மனத்தில் தோன்றுமல்லவா? இன்றைக்கில்லா விட்டாலும் என்றைக்காவது அவன் மனம் மாறலாமில்லையா? அதனால் தான் விவாகரத்து கேட்காமல்.....''

அப்பா பேச்சை முடிக்காமல் சரசர வென்று நகர்ந்தார். அங்கவஸ்திரம் கண்களை நோக்கிச் சென்றதிலிருந்து அவர் உணர்ச்சி வசப்பட்டுக் கண்ணீர் சிந்துகிறார் என்று தெரிந்தது.

சுழன்றடிக்கும் பேய்க் காற்றில் உலர்ந்த சருகுகள் அடித்துச் செல்லப்படுவதைப்போல் நாட்கள் பறந்தன. தொழில் துறையில் அப்பாவுக்கு உதவுவதற்காக ஷார்ட்ஹாண்டும், டைப்ரைட்டிங்கும் கற்று வைத்திருந்தேன். அது இப்பொழுது உதவியது. ஒரு கம்பெனியில் ஸ்டெனோவாகச் சேர. அப்பா தான் பிராக்டீசையே நிறுத்தி விட்டாரே. மனோ வியாகூலம் அவருக்கு. சும்மா வீட்டிலேயே அடைந்து கிடக்கப் பிடிக்காமல் நானாகத்தான் இந்த வேலையைத் தேடிக் கொண்டேன். மாதா மாதம் 'அவரி'டமிருந்து 'கப்பப் பணம்' வந்து கொண்டிருந்தது! ஆனால் அதில் ஒரு காசைக்கூட நான் எடுத்துக் கொள்வதில்லை. அவர் பெயரால் அப்படியே அந்தப் பணத்தை ஓர் அனாதை விடுதிக்கு அனுப்பிக் கொண்டிருந்தேன். அதனால் கிடைக்கும் புண்ணியமாவது அவர் வாழ்க்கையைப் புனிதப்படுத்தட்டுமே என்றுதான்!

அன்று தேதி மூன்று. அவரிடமிருந்து பணம் வரும் நாளல்லவா அது! தபால்காரரைப் பார்த்து விட்டே போகலாம் என்று உட்கார்ந்து கொண்டேன். வழக்கம் போல் தபால்காரர் வந்தார். ஆனால், மணியார்டருக்குப் பதில் கடிதம்தான் ஒன்று வந்திருந்தது அவரிடமிருந்து.

சுருக்கமாக நாலே வரி: கால்கள் இரண்டும் பாரிச வாயுவால் பாதிக்கப்பட்டுப் படுக்கையில் கிடக்கிறேன். வேலைக்குப் போக முடியாததால் வருமானமும் இல்லை. தயவு செய்து இனிமேல் என்னிடமிருந்து பண உதவியை எதிர்பார்க்காமல் இருப்பாயா?

கடிதம் அப்பாவின் பார்வைக்குப் போயிற்று. அதைப் படித்த அவர் அப்படியே இடிந்து போய்ச் சாய்ந்து விட்டார். இனி மேல் மாப்பிள்ளையின் மனம் மாறித்தான் என்ன பிரயோசனம் என்று அவருக்குத் தோன்றியதோ, என்னவோ!

என் மனத்தில் ஒரு தீர்மானம் உருவாகியது.

''அப்பா!''

சோபாவில் நிலைகுலைந்து அமர்ந்திருந்தவர் என்னை ஏறிட்டு நோக்கினார்.

''அப்பா! இனிமேல் மாதா மாதம் நான் அவருக்குப் பணம் அனுப்பப் போகிறேன்!''

''எதற்கம்மா?'' என்றார் திகைப்புடன்.

''தொட்ட குறை அப்பா! என்னை அவர் தொட்டுத் தாலி கட்டினாரே, அந்தக் குறைக்காக இப்பொழுது நான் அவருக்கு ஜீவனாம்சப் பணம் கொடுத்தாக வேண்டும். என்ன அப்பா அப்படிப் பார்க்கிறீர்கள்? ஒரு நாள் கூட என்னுடன் குடும்பம் நடத்தா விட்டாலும் தாலி கட்டிய ஒரே ஒரு குற்றத்துக்காக எந்த நீதி அவரை எனக்கு வாழ்க்கைப் பணம் கொடுக்கப் பணித்ததோ, அதே நீதிதான் இப்பொழுது எனக்கு மானசீகமாகக் கட்டளையிடுகிறது. நியாயம்தானே அப்பா! மனைவியானவள் கணவனால் காக்கப்பட வேண்டியவள் மட்டுமல்ல; சமயம் வாய்க்கும்போது கணவனையே காப்பாற்றவும் கடமைப்பட்டவளே. இதுவரை அவர் சட்டத்துக்குப் பணிந்து எனக்குப் பணம் அனுப்பினார். இனி நான் நியாயத்துக்குப் பணிந்து அவருக்கு உதவப் போகிறேன். என்னை ஆசீர்வதியுங்களப்பா.''

நான் கொஞ்சம் ஆவேசமாகப் பேசி விட்டேன் போலிருக்கிறது. பிரமித்துப் போய் உட்கார்ந்திருந்த அப்பா சட்டென்று என் அருகில் வந்து என் தலையை வருடிவிட்டபடி, ''சிவகாமி! நீ ஒரு அதிசயப் பிறவி அம்மா. உனக்குத் தோன்றியபடியே செய்'' என்றார் தழுதழுத்த குரலில்.

என் கண்கள் பனித்தன. அவசர அவசரமாக அன்றே மணியார்டரில் அவருக்குப் பணம் அனுப்பி வைத்தேன். என்னுள் ஒரு நிறைவு மலர்ந்தது. ஒரு பெண் தன் கணவனின் சுகதுக்கங்களில் பங்கெடுத்துக் கொண்டு வாழ்வதைத்தானே குடும்பம் என்கிறார்கள்? அப்படியானால் நானும் குடும்பம்தான் நடத்துகிறேன். நான் இங்கே அவர் எங்கேயோ! ஆனாலும் பிரிவு ஒரு பொருட்டா என்ன!

# சிறுகதை

## பாரதியார்

ஒரு வீட்டில் ஒரு புருஷனும் ஸ்திரீயும் குடியிருந்தார்கள். ஒரு நாள் இரவில் புருஷன் வீட்டுக்கு வரும்போது ஸ்திரீ சமையல் செய்து கொண்டிருந்தாள். சோறு பாதி கொதித்துக் கொண்டிருந்தது. அந் ஸ்திரீ அன்றிரவு கொஞ்சம் உடம்பு அசௌக்கியமாயிருந்தபடியால், தனக்கு ஆகாரம் வேண்டாமென்று நிச்சயித்துப் புருஷனுக்கு மாத்திரமென்று சமைத்தாள்.

புருஷன் வந்தவுடன், ''நான் இன்றிரவு விரதம் இருக்கப் போகிறேன். எனக்கு ஆகாரம் வேண்டாம்' என்றான்.

உடனே பாதி கொதிக்கிற சோற்றை அவள் அப்படியே சும்மா விட்டு விட்டு அடுப்பை நீரால் அவித்து விடவில்லை. தங்களிருவருக்கும் உபயோகமில்லாவிடினும் மறு நாள் காலையில் வேலைக்காரிக்கு உதவுமென்று நினைத்து, அது நன்றாகக் கொதிக்கும் வரை காத்திருந்து வடித்து வைத்துவிட்டுப் பிறகு நித்திரைக்குச் சென்றாள்.

அது போலவே கர்ம யோகி தான் ஒரு தொழில் செய்யத் தொடங்கி, இடையில் அது தனக்குப் பயனில்லையென்று தோன்றினால், அதை அப்படியே நிறுத்திவிட மாட்டான். பிறருக்குப் பயன் தருமென்பதைக் கொண்டு, தான் எடுத்த வேலையை முடித்த பிறகே வேறு காரியம் தொடங்குவான்.

### பிரார்த்தனை

கிழவனுடைய முதிர்ச்சியும், நடு வயதிற்குள்ள மனத் திடனும், இளைஞருடைய உத்ஸாஹமும், குழந்தையின் ஹ்ருதயமும், தேவர்களே, எனக்கு எப்போதும் நிலைத்திருக்கும்படி அருள் செய்க.

[எண்பத்திமூன்றாவது பிறந்த தின விழாவுக்குப் பாத்திரமாகியுள்ள அமரகவியின் அமுத எழுத்தை நினைவுகொள்ளு முகமாக இக்கட்டுரையை இவ்விதழில் சேர்த்தபோது இதுவும் ராஜாஜிக்கு அஞ்சலியாகவே தோன்றியது. கவிஞர் குறிப்பிட்டுள்ள முதிர்ச்சிக்கும், மனத் திடத்துக்கும், உற்சாகத்துக்கும், குழந்தை இதயத்துக்கும், கர்ம யோகத்துக்கும் ஓர் உருவமல்லவா ராஜாஜி?
— ஆசிரியர்]

Printed & Published by R. Ananthanarayanan on behalf of Messrs Bharathan Publications Private Limited at the Kalki Press Kilpauk Madras-10
Managing Editor T. Sadasivam.

# மக்ளீன்ஸ்

## உபயோகித்து
## அந்த அதிகமான வெண்மையைப்
## பாருங்கள்!

### இவ்விதம் சோதியுங்கள்



1. உங்கள் நாக்கினால் பற்களைத் தடவுங்கள். அவற்றின் மேலுள்ள பாசியை உணர்கிறீர்களா?
2. இப்போது, மக்ளீன்ஸ் பற்பசைகொண்டு பற்களைத் தேயுங்கள். அது பற்களைச் சுத்தம் செய்து, வெண்மையாக்கிக் காப்பதுடன் உங்களுக்குப் புதுமையான உணர்ச்சியை அளிப்பதை உணர்வீர்கள்.
3. அந்த அதிகமான சுத்தத்தை உணருங்கள்... அந்த அதிகமான வெண்மையைப் பாருங்கள்.




மக்ளீன்ஸ் பழுப்பு நிறமடைந்த
பற்களை வெண்மையாக்குகிறது!

MTF/LP/X/63 TMA

REGISTERED No. M. 4382
Registered as a Newspaper in Ceylon




இன்று
புதிய களையுடனே
மிளிருகிறது

**லைப்பாய்** இருக்குமிடம்:

**அதுவே... ஆரோக்கியம் இருக்குமிடம்**

புத்துணர்வு! உற்சாகம்! ஆரோக்கியத்தின் புன்னகை! லைப்பாய் தேய்த்துக் குளித்த நல்லின்பம். அழுக்கிலுள்ள கிருமிகளைக் கழுவிக் களைகிறது லைப்பாய்.
குளித்த உடம்புக்குச் சுத்தம் ... சுறுசுறுப்பு ... சுகம்!
புதிய அழகு மேலுறை அணிந்த லைப்பாய்... கையடக்கமான புதிய வடிவம்: உங்களுக்கென்றே உருவானதல்லவோ. இன்றே பெறுவீர் லைப்பாய் சோப்.

இந்துஸ்தான் லீவர் தயாரிப்பு

L-47-140 TM